# மது விலக்கு



"ஆத்ரேயன்"
ஆங்கிலத்தில் ஆக்கியதைத் தழுவி
"ஸ்ரீவத்ஸன்"
எழுதியது

ஸ்ரீமான் எஸ். ஸத்தியமூர்த்தி
அவர்களின் முன்னுரை கொண்டது.

குடியின் பூர்வோத்திரம், அதைக் கட்டுப்படுத்த மக்கள் செய்த முயற்சி, பார்லிமெண்டில் விவாதம், காங்கிரஸ் போர், சேலத்தில் கள்ளரக்கன் வதம், மது விலக்குச் சட்டத்தின் விவரம் முதலியன அடங்கியது

1938

**தீக்ஷித் பப்ளிஷிங் ஹவுஸ்,**
தியாகராய நகர் :: சென்னை.

# முன்னுரை

இந்நூலுக்கு யான் முன்னுரை வழங்க வேண்டுமென எனது நண்பரான இதன் ஆசிரியர் என்னைக் கேட்டுக் கொண்டார். அந்த வேண்டுகோளை நிறைவேற்றி வைப்பதில் நான் மகிழ்ச்சி கொள்ளுகிறேன்.

இன்று மது விலக்கு பற்றியே எங்கும் பேச்சாக இருக்கிறது. ஆனால் இது இன்றைக்கு மட்டும் முக்கியமான பிரச்னை அல்ல. என்றென்றைக்கும் இது முக்கியமானதே. மது விலக்கு மூலம் பலனுண்டுபண்ணுவதில் சென்னையிலுள்ள காங்கிரஸ் சர்க்கார் உண்மையிலேயே வெற்றி பெறுவார்களானால் அவர்கள் சென்னை மாகாணத்திற்கு மாத்திரமன்றி மனித வர்க்கத்திற்கே பேரூழியம் புரிந்தவர்களாவர். வெற்றி என்றால் எப்படி இருக்க வேண்டும் தெரியுமா? 'குடி' என்னும் படுகுழியிலிருந்து ஜனங்களை மீட்டு, அவர்கள் குடிப்பழக்கத்தை அடி-

யோடு விட்டு விடும்படி செய்து, குடி வெறியினின்றும் அவர்களைக் காக்க வேண்டும்.

ஆகவே இவ்விஷயத்தைப்பற்றிய எந் நூலும் வரவேற்கத்தக்கதே. சர்க்கார் கையாண்டு வரும் மது விலக்குக் கொள்கையின் தத்துவத்தையும், அதன் வெற்றிக்கான ஹேதுக்களையும், அதன் பலன்களையும் மகா ஜனங்கள் தெள்ளத் தெளிய அறிந்து கொள்ள இப்புத்தகம் உதவி புரியுமென நான் நம்புகிறேன். சமூகத்திற்குப் பேருபகாரமாகவிருக்கக் கூடிய இந்நூலை வெளியிட முன்வந்த இதன் ஆசிரியரை நான் பாராட்டுகிறேன். அரிய கருத்துக்களும், விஷய சாரமும் நிறைந்த இப்புத்தகத்திற்கு மகா ஜனங்கள் பூரண ஆதரவு அளிக்க வேண்டுமென்பதே எனது அவா.

சென்னை
1938ஆு மார்ச் 3உ } **எஸ். ஸத்யமூர்த்தி**

# பொருளடக்கம்

| பொருள் | | பக்கம் |
|---|---|---|
| 1. | பூர்வோத்திரம் .... .... | 1 |
| 2. | புராதன இந்தியாவில் .... .... | 5 |
| 3. | மத பூர்வமான ஆட்சேபம்.... .... | 9 |
| 4. | கட்டுப்படுத்த முயற்சிகள் .... .... | 14 |
| 5. | இந்திய மது வகைகள் .... .... | 21 |
| 6. | மதுவும் ஆரோக்கியமும் .... .... | 24 |
| 7. | பேயை விரட்ட .... .... | 26 |
| 8. | சமூகத்தின் விஷம் .... .... | 32 |
| 9. | அமெரிக்காவின் அனுபவம் .... | 34 |
| 10. | இந்தியாவில் முயற்சி .... .... | 39 |
| 11. | பார்லிமெண்டில் விவாதம் .... .... | 44 |
| 12. | குடியை மட்டுப்படுத்துதல் .... | 49 |
| 13. | இரட்டை ஆட்சியில் .... .... | 54 |
| 14. | மது விலக்குப் பரீட்சார்த்தம் .... | 60 |
| 15. | திருட்டுத் தயாரிப்பு .... .... | 64 |
| 16. | மது விலக்கே வழி .... .... | 69 |
| 17. | காங்கிரஸ் போர் .... .... | 73 |

18. மந்திரிகளின் கடமை .... .... 79

19. சட்ட சபையில் மசோதா .... .... 85

20. கள்ளரக்கன் வதம் .... .... 91

* * * *

சென்னை மது விலக்குச் சட்டம் ... .... 98

ஏழைகளின் வரப்பிரசாதம் .... .... 135

குறிப்புகளும் திரட்டும் .... .... 147

யார் குற்றவாளிகள் ? ... ... 147

மருந்துத் தயாரிப்புகள் ... ... 147

மருந்து பூர்வமான வொயின்கள் ... 148

விலக்கின் வியாக்கியானம் ... ... 149

பதனி தயாரிப்பு விதிகள் ... ... 150

வண்டிகளை நிறுத்துதல் ... ... 152

பிரயாணிகளிடம் சார்பு ... ... 153

மது விலக்கு அனுஷ்டானம் ... ... 154

திருத்தி யமைத்தலும் அப்பீலும் ... 155

புளித்த கள்ளில் போஷாக்குச் சத்து ... 157

மது விலக்கின் பயன் ... ... 158






குடியை ஒழிப்பதைத் தங்கள் முதல்
கடமையாகக் கொள்ளும்படி
காங்கிரஸ் மந்திரிகளுக்கு உத்தரவிட்ட
உத்தமர்.

# மது விலக்கு

## 1. பூர்வோத்திரம்

கையறியாமை யுடைத்தே பொருள் கொடுத்து
மெய்யறியாமை கொளல்.

—திருக்குறள்

[கள்ளுண்பது விலை கொடுத்து மெய்மறப்பை வாங்குவதாகும். இந்த அறியாமைக்குக் காரணம் முற்பிறப்பில் செய்த பாவமே]

**போ**தையூட்டும் வஸ்துக்கள் மனிதனுடனேயே பிறந்து விட்டன வெனக் கூறலாம். மனித சரித்திரம் தோன்றின நாள்முதலாக இவை மனித ராசி மீது ஆதிக்கம் செலுத்தி வருகின்றன. நாகரிகத்தின் ஆரம்பதசையில் மனிதன் தன் ஆகாரத்தைத் தேடிக் கொள்ளுவதற்கு ஒரு சாதனமாக இவற்றை உபயோகித்துக் கொண்டான். ப்ராசீன காலத்திய ஜாதியார்களில் பலர் தங்கள் சாப்பாட்டிற்காக மீன்களைப் பிடிக்கச் சென்றபொழுது ஆறுகளிலும், குளங்களிலும், கால்வாய்களிலுமிருந்த மீன்களை உணர்ச்சியற்றுப் போகும்படி செய்வதற்காக மயக்க

மூட்டும் சரக்குகளை எறிந்து வந்தனர். மேற்கூறிய மரீ பினரில் தாஹித்தியர்கள் என்பார் ஒரு வகையினர். ஹ்யூடோ (Huteo) என்னும் ஒரு விதப்பாக்கிலிருந்தும், ஹோரா (Hora) என்னும் ஒரு விதச் செடியிலிருந்தும் இவர்கள் மயக்கமூட்டும் திரவரூபமான ரஸம் ஒன்றைத் தயாரித்து அதைத் தண்ணீரில் தெளிப்பார்களாம். அதை உண்பதற்காகத் தாவி மேலே வரும் மீன்கள் அதைஉட் கொண்டதும் அப்படியே கட்டையாகிப்போய் நீர் மட் டத்தில் மிதக்குமாம். உடனே ஜனங்கள் அவற்றைப் பிடித்துப் பைகளில் போட்டுக்கொண்டு வீடு திரும்புவார் களாம்.

வாழ்வின் கவலைகளையும், துயரங்களையும் சற்று நேரமாவது ஏன் மறந்திருக்கக் கூடாது என்பதாக மனித வர்க்கத்தில் முதன்முதலாக எவனோ ஒருவன் சிந் திக்கலானான். இத்தகைய சிந்தனை மனிதனின் உள்ளத் திலே தோன்றின காலம் நாகரிகம் சற்று வளர்ச்சி யடைந்த காலம். இந்த உள்ளத் தூண்டுதலைப் பூர்த்தி செய்து கொள்ளுவதற்காக அவன் மயக்கமூட்டும் சரக்கு களில் சிலவற்றை ருசி பார்க்கலானான். அந்த ருசியில் அவ னது மனத் துயரங்கள் சிறிது நேரத்திற்கு மறைந் தொழிந்தன. பிறகு அந்தப் பழக்கம் வழக்கமாக மாறி விட்டது. மனித சமூகம் பூராவுமே அந்த வழக்கம் வியாபித்தது. ஜனங்கள் நாள்முழுதும் தங்கள் நெற்றி வியர்வை நிலத்தில் சொட்ட வேலை செய்ததற்குப்பின்னர் அயர்வையும், தேக சிரமத்தையும் போக்கிக் கொள்ளுவ தற்காக மாலைவேளைகளில் மதுபானம் அருந்தலாயினர். "பேரீச்ச மரத்திலிருந்து பிழிந்தெடுக்கப்பட்ட சாரத் தையோ அல்லது தானியங்களிலிருந்து சேகரிக்கப்பட்ட பீரையோ மாலை நேரங்களில் பருகி விவசாயிகள் தங்கள்

வலேகளை மறந்திருந்தனர்" என்று திரு வில் டூரோண்ட் என்பவர் "நாகரிகத்தின் வளர்ச்சி" என்னும் தமது நூலில் குறிப்பிட்டுள்ளார்.

ஆதி காலத்திலிருந்தவர்களுக்கு இரண்டு வகையான லாகிரி வஸ்துக்கள் தெரியும். **திராட்சை ரஸம்** ஒன்று; தானியங்களிலிருந்து எடுக்கப்பட்ட **பீர்** மற்றொன்று. திராட்சையும், ஒலிவ மரமும் மெஸொபடேமியா தேசத்திலிருந்து கிரேக்க நாட்டிற்கும், ரோமாபுரிக்கும், பிறகு ஐரோப்பாவின் மேற்குப் பிரதேசங்களுக்கும் பரவியதாக பாபிலோனியா நாட்டு நாகரிகத்தைப் பற்றிய சரித்திரம் கூறுகிறது. வெவ்வேறு வகையான தானியங்களிலிருந்தும், பழதினுசுகளிலிருந்தும் சாராயம் தயாரிக்கப்பட்டது. கிறிஸ்து பிறப்பதற்கு இருபது வருஷங்களுக்கு முன்னமேயே மெஸொபடேமியாவில் திராட்சை உபயோகிக்கப்பட்டு வந்ததால் அக்காலத்திருந்தே அங்கு திராட்சை ரஸமும் (வொயின்—Wine) பழக்கத்திலிருந்திருக்க வேண்டுமென முடிவு கட்டுவதற்கு ஏதுவிருக்கிறது.

**பீர்** என்பது சில தானிய வகைகளிலிருந்து புளிக்க வைக்கும் முறையால் தயாரிக்கப்படுவது. இதுவும் பூர்வ காலத்திலிருந்தே உபயோகத்திலிருந்திருக்கிறது. கிறிஸ்துவின் காலத்திற்கு 1300 வருஷங்களுக்கு முன்பே இப்பான வகைகளை **எகிப்து** தேசத்தினர் அறிந்திருந்தனர் என்று அந்நாட்டுச் சரித்திரத்தினின்றும் தெரிய வருகிறது. எகிப்திலிருந்துதான் இவை கிரேக்க நாட்டிற்குப் பரவினவாம். புராதன ரோமாபுரியில் வசித்து வந்த **ப்ளினி** என்னும் மகத்தான சரித்திராசிரியர் ஒரு தானிய வகையிலிருந்தே வொயின் தயாரிக்கப்பட்டதாகப் பிரஸ்தாபித்திருக்கிறார். நாளாவட்டத்தில் குடி உலகின் பல பாகங்களுக்கும் பரவியது. இந்தத்

தேசங்களெல்லாம் அக்காலத்தில் மதுவகைகளை உபயோகித்து வந்தன. இச்சாராய வகைகள் அனைத்தும் பற்பல தானியங்களிலிருந்தே தயாரிக்கப்பட்டன. சீன தேசத்தில் அரிசியிலிருந்துகூட சாராயம் தயாரிக்கப்பட்டது; இதற்கு 'ஷம்ஸூ' என்று பெயர். சீன நாட்டில் ஜனங்களால் பெரிதும் விரும்பப்பட்ட பானம் இதுதான். புளிக்க வைக்கப்பட்ட சாராய வகைகள் காய்ச்சி வடி கட்டி யெடுக்கப்பட்ட வகைகளைப்போல் அவ்வளவு மயக்க மூட்டுபவையாக இல்லாததால் பின் கூறப்பட்ட வகைகளே அதிகமாக உபயோகிக்கப்படலாயின.

---

# 2. புராதன இந்தியாவில்

தலைக்குக் கிறுகிறுப்பூட்டும்
பண்டங்களை உட்கொள்ளாதே

—குரான்.

[குடித்தவுடன் போதையைத் தரக்கூடிய லாகிரி வஸ்துக்களை யெல்லாம் உபயோகிக்கக்கூடாது என்று முகம்மதியர் வேதமாகிய குரான் விதித்திருக்கிறது.]

பண்டைக் காலத்திலிருந்தே இந்தியாவும் லாகிரி வகைகளை அறிந்திருந்தது. வேத காலத்திய இந்தியர்களின் சமூக வாழ்வைப்பற்றி அறிய ஆதாரமாக விருக்கும் ஹிந்து தர்ம சாஸ்திரங்களில் குடிப்பழக்கத்தைப் பற்றிப் பிரஸ்தாபிக்கப்பட்டிருக்கிறது. வேத காலத்திய ஆரியர்கள் பார்லியை ஏராளமாகப் பயிரிட்டுவந்ததால் இதிலிருந்து தயாரிக்கப்பட்ட மதுவகை அப்பொழுது உபயோகத்தி லிருந்திருக்க வேண்டும். புராதன இந்தியாவைப்பற்றிய இன்னும் பல தஸ்தாவேஜிகளிலும் குடியைப்பற்றிய குறிப்புகள் காணப்படுகின்றன. **சோமபானம்** என்பது அக்காலத்தில் வெகுசகஜமாகப் பழக்கத்திலிருந்த மதுவகை. இதற்கு கொஞ்சம் மயக்கத்தையுண்டுபண்ணும் சக்தியிருந்தது. **ஸுராபானம்** என்று இன்னொரு வகையுண்டு. பனை, ஈச்சை, தென்னை முதலிய மரங்களிலிருந்து எடுக்கப்பட்ட சாறு, புளிக்கவைக்கப்பட்டதன் மூலம் இவ்வகை தயாரிக்கப்பட்டது. வெல்லப்பாகு, அரிசிநொய், மதுகமலர்கள் இவற்றினின்றும் இந்த ஸுராபானம் தயாரிக்கப்பட்டது.

சமூகத்தில் வளர்ச்சி ஏற்பட்டு, ருசிகள் அபிவிருத்தி யடையத்தலைப்பட்டதும் குடிவகைகளின் உபயோகமும் அதிகரிக்கலாயிற்று. மதுபானம் ஆகாரத்தின் ஒரு அம்சமாகக்கூட ஆகி விட்டது. வார்க்கோதுமையைப் புளிக்க வைத்து, அதிலிருந்து தயாரிக்கப்பட்ட "ஏல்" (யவஸுரா) என்னும் சாராயவகையும், தானிய வகைகளிலிருந்து தயாரிக்கப்பட்ட பீரும், 'ரம்' 'ஜின்' என்னும் வெல்லச் சாராயங்களும், பார்லி மாவிலிருந்து தயாரிக்கப்பட்ட 'விஸ்கி'யும் இதர மது வகைகளாவன. **'கள்ளு'** என்பது ஏழை வகுப்பினர் குடிக்கும் சரக்கு. இதில் தென்னங்கள்ளு, பனங்கள்ளு, ஈச்சங்கள்ளு என்று மூவகையுண்டு.

இந்திய மன்னராகிய **புருஷோத்தமரை** எதிர்த்துச் சமர் புரிந்த **மகா அலெக்ஸாண்டர்** என்னும் மாஸிடோனியா தேசத்து அரசனுக்கு குடி என்றால் வெகு பிரியம். இவனது பல்வேறு முற்றுகைகளுக்கும், படையெடுப்புகளுக்கும், போராட்டங்களுக்கும் குடி மிகவும் உதவி புரிந்ததாம். பொல்லாக் குடியினாலேயே இவன் தனது முப்பத்திரண்டாவது வயதிலேயே இறக்கவும் நேரிட்டது. **குப்ளேகான்** என்னும் மங்கோல் சக்கரவர்த்தியும் பெரிய குடிகாரன். இச் சக்கரவர்த்தியின் சமஸ்தானத்தில் நீண்ட காலம் தங்கியிருந்த வெனிஸ் நகரத்தைச் சேர்ந்த **மார்க்கோ போலோ** என்பவன் மேற்படி சமஸ்தானத்தைப்பற்றிய தனது வர்ணனையில் சக்கரவர்த்தியின் மேஜை மீது எப்பொழுதும் சாராய புட்டி முக்கிய இடம் பெற்றிருந்ததாகக் குறிப்பிட்டிருக்கிறான். இது தவிர பிரதான மண்டபத்தில் சாராயம் நிரப்பி வைக்கப்பட்டிருந்த பாத்திரம் பொன்னாலாக்கப்

டிருந்ததாகவும், அது அழகிய சித்திரவேலைப்பாடுகளுடன் விளங்கிய தென்றும் மார்க்கோ போலோ கூறுகிறான்.

முஸ்லீம் அரசர்களில் சிலர் குடிப்பழக்கத்திற்கு ஆளாகிக் கிடந்ததைச் சரித்திரம் எடுத்துக் காட்டுகிறது. பெயர்பெற்ற சரித்திர ஆசிரியரான **திரு வி. ஏ. ஸ்மித்** என்பவரைப்பற்றிப் பலரும் கேட்டிருக்கலாம். "**தைமூர்** அரசனின் குடும்பத்தினர் குறைவாகக் குடிப்பதைப் பெரும் பாவமாகக் கருதி வந்தனர்; இன்னும் எத்தனையோ ராஜ குடும்பங்களிலும் இதே நிலைமை பரவியிருந்தது" என்று அவர் சொல்லுகிறார். மொகலாய மன்னர்களில் முதல்வனான **பாபர்** சக்கரவர்த்தி அடிக்கடி குடிப்பதுண்டாம்; ஆனால் சிறிது காலத்திற்குப் பிறகு அவன் குடியின் கேட்டை உணர்ந்து அதை முற்றிலும் வெறுத்தவனாக மாறினான். பெரியசீர்திருத்தக்காரனும் புலால் உண்ணுதலைக் கண்டித்து வந்தவனுமாகிய **அக்பர்** மகா சக்கரவர்த்தி கூட சாராயமும், அபினியும் உட்கொண்டு வந்தான். அவனது புத்திரர்கள் இருவரும் குடியிலேயே மூழ்கிக் கிடந்து, இறுதியில் அதற்குப் பலியுமாயினர். **ஜிஹாங்கீர்** சக்கரவர்த்தியும் இக்குடியின் வலையினின்று தப்ப முடியவில்லை. "இவன் சாராயக் கோப்பைகளை அதிகமாக ருசி பார்க்கத் தலைப்படத் தலைப்பட ராஜாங்கக் கடமைகளை அலட்சியம் செய்ய வாரம்பித்தான்" என்கிறார் ஒரு சரித்திராசிரியர்.

மத்திய கால இந்தியாவில் சாராயம் குடிப்பதென்பது சமூக வாழ்க்கையின் சகஜமான ஒரு வழக்கமாக இருந்தது. ஆனால் துரைத்தனங்கள் குடியை அடக்கி ஆண்டு வந்தன. இதன் காரணமாக ஒரு சிலரே மிதமிஞ்சி குடித்து வந்தனர். ஜனசமூகம் பூராவும் கண்மூடித்தனமாகக் குடிவெறியில் மூழ்கிக் கிடக்கவில்லை. எனினும்

அது பொல்லாத ஒரு சமூகத் தீங்காக வளர்ந்து, தேச மக்களின் தேக திடத்தைப் பெரிதும் பாதித்து வந்தது. குடிப்பது மிகவும்கெட்டது என்றஞானம் மக்களிடையே பரவி நின்றது என்னமோ வாஸ்தவம்தான். ஆனல் ஜனங்கள் அப் பிசாசின் வசம் சிக்கியவர்களாய், தப்ப வழியில்லாது தவித்து நின்றனர் என்பதும் உண்மையே. இந்த ஞானம் முதிரமுதிர குடியை அடக்கி ஆளுவது சம்பந்தமான முயற்சியும் திட்டமும் அப்பொழுதுக்கப் போது மாறுபட்டு வந்தன. தேசத்திற்குத் தேசம் அவை மாறுபடலாயின. மேற்கூறிய முயற்சிகளில் குடியினின்று வருமானத்தைப் பெறுவதற்கான திருஷ்டியும் கலந்திருந்தது.

---

# 3. மத பூர்வமான ஆட்சேபம்

பிராம்மணனைக் கொல்லுபவனும், சோமபானத்தை அருந்துபவனும், பிராம்மணனுக்குச் சொந்தமான பொன்னைத் திருடுபவனும், குருவின் படுக்கையைத் தீண்டுபவனும் விமோசனமே யில்லாத பாவங்களைச் செய்தவராவர்.

—மனுதர்ம சாஸ்திரம்.

குடிப்பது தீய வழக்கம் மட்டுமல்ல; அது பாபச் செயலாகும், மனக்கேடான தொழிலாகும் என்று தொன்று தொட்டு கருதப்பட்டு வரும் புண்ணிய பூமி நமது பாரத தேசம். வேத காலத்திலிருந்தே இவ்வபிப்பிராயம் இந்நாட்டு மண்ணில் வேரூன்றியிருக்கிறது. ஆதி காலத்திலிருந்தே இந்திய மகான்களும், ரிஷி சிரேஷ்டர்களும் முனிபுங்கவர்களும், புருஷோத்தமர்களும், ஞானிகளும் குடிப்பதைப் பெருத்த பாவச் செயலாகப் பாவித்து வந்திருக்கின்றனர்.

வேதங்களில் முதன்மையானதாகிய **ரிக் வேதத்தில்** ஏழுபாவங்களைப் பற்றிப் பிரஸ்தாபிக்கப் பட்டுள்ளது. இப்பாவங்கள் யாவை என்ற விவரம் அதில் காணப்படவில்லை. ஆனால் மது உண்ணுதல் அவற்றில் ஒன்று என்று நிச்சயமாக ஏற்படுகிறது. ஹிந்துக்கள் கடைப்பிடித்தொழுகவேண்டிய நியமங்களை வகுத்துள்ள **ஸ்ருதிகளும், ஸ்மிருதிகளும்** மது பானத்தை அழுத்தமாகக் கண்டிக்கின்றன. ஹிந்துக்களுக்குத் தர்ம நீதிகளைப் போதித்த **மனு** தாம் இயற்றிய ஸ்மிருதியில் ஸுரா

பானம் செய்தல் அதாவது மது உண்ணுதலைப் பாவமே உருவெடுத்ததற் கொப்பாகக் கூறியிருக்கிறார். ஆகவே பிராம்மணனோ, க்ஷத்திரியனோ அல்லது வைசியனோ குடிக்கக் கூடாதென்பது அவரது ஆக்ஞை.

பிராம்மணனைக் கொல்லுபவனும், சோமபானத்தை அருந்துபவனும், பிராம்மணனுக்குச் சொந்தமான பொன்னைத் திருடுபவனும், குருவின் படுக்கையைத் தீண்டுபவனும் விமோசனமே யில்லாத பாவங்களைச் செய்தவராவர் என மனு தர்ம சாஸ்திரத்தின் 9-வது அத்தியாயம் 235-வது விதி கூறுகிறது.

எந்தப் பிராம்மணன் குடிக்கிறானோ அவன் பெரிய பூச்சிகள், சிறிய பூச்சிகள், அட்டைகள், பட்சிகள் முதலியவற்றின் சரீரத்தினுள் புகுந்து மலம், அசுத்தம் முதலியவற்றைத் தின்பான்; அல்லது பிறவற்றை அடித்துப் புசிக்கும் மிருகங்களின் சரீரத்தையும் அடைவான். (மனுதர்மசாஸ்திரம், 12-வது அத்தியாயம், 56-வது விதி)

குடிப்பதை மகாபாதகச் செயலாகக் கருதினார்மனு. இச்செயலில் ஈடுபட்டவர்களுக்கு அவர் கடுமையான தண்டனையைக் குறிப்பிட்டிருக்கிறார். ஸுராபானம் செய்பவர்களின் நெற்றியில் கள்ளுக்கடையைப் போன்ற அடையாளமொன்றைச் செய்து சூடிட்டு விட வேண்டுமென அவர் விதித்துள்ளார். இவர்கள் சாப்பாடு, யாகம், கல்வி போதனை, கல்யாணம், மதச் சடங்குகள் முதலியவற்றினின்றும் விலக்கப்பட்டவர்களாய் உலகில் திரியட்டும். (மனு தர்ம சாஸ்திரம், 9-வது அத்தியாயம், 238-வது விதி)

பாரதத்தின் பழைய நூல்களில் குடி தினுசுகள் மூன்று வகைப்பட்டனவாகக் கூறப்பட்டுள்ளன. ஒன்று வெல்லப்பாகிலிருந்து வடிகட்டி எடுக்கப்படுவது; இன்

ஞென்று அரிசி மாவிலிருந்து தயாரிக்கப்படுவது; மற்றென்று மலர்களின் ரஸத்திலிருந்து உண்டாக்கப்படுவது.

குடியில் ஈடுபடாமலிருப்பது ஒரு அரசனின் உத்தம குணங்களிலொன்ருகப் புராதன இந்தியாவில் கருதப் பட்டுவந்தது. ஜனங்களின் நன்மையைக் கோரி அரசர்கள் பல உன்னத லட்சியங்களைப் பின்பற்ற வேண்டுமென அரசியல் ஞானிகள் வகுத்திருந்தனர். காமம், குரோதம், லோபம், மோகம், மதம், மாத்சர்யம் இவற்றினின்றும் மன்னர்கள் விடுபட்டிருக்க வேண்டுமென வற்புறுத்தப்பட்டது. காமத்தால் பத்துவிதமான தீங்குகள் ஏற்படுவதாகவும், அவற்றிலொன்று குடிப்பழக்கமென்றும் மனு கூறியிருக்கிருர்.

சிறந்த நீதிமானும், அரசியல் அறிஞரும், சுக்ர நீதியின் கர்த்தாவுமான **சுக்ராச்சாரியார்** சிற்றின்பத்தில் அளவுகடந்து திளைத்திருப்பதையும், சூதாடுதலையும், குடித்தலையும் விசேஷ தீமை பயப்பனவையாகக் கண்டித்திருக்கிருர்.

அரசிய சாஸ்திரத்தில் கரைகண்டவரான **கௌடில்யர்** குடியை வெறுத்துப் பேசுகிருர். தீய வழக்கங்கள் யாவற்றிலும் குடிப்பதை அவர் மிகக் கொடுமையானதாகக்கருதி குடிப்பதால் பணத்திற்கு நஷ்டமும், புத்தி விகாரமும், பிணமொத்த தோற்றமும், வேத ஞானத்தில் சூன்யமும், உயிர்ச்சேதமும், நண்பர்களது பிரிவும் ஏற்படுவதாகக் கூறுகிருர்.

புராதன இந்தியாவில் ஸுராபானம் விசேஷமாக உபயோகிக்கப்பட்டு வந்ததாகச் சிலர் அபிப்பிராயப்படுகின்றனர். யாகங்கள் செய்வதாகச் சாக்குச்சொல்லி போதையூட்டும் சோமபானத்தைப் பலர் அருந்திவந்ததாக அவர்கள் கூறுகின்றனர். சோமபானத்திற்கும் ஸுராபானத்

திற்கும், சாராயத்திற்கும் வித்தியாசமுண்டு. சோமம் என்னும் செடி ஹிமாலயமலைச் சாரலிலும், சுஷோமாநதி தீரத்திலும், அரிக்கியான் பிராந்தியத்திலும், மகாபாரதப் போர் நடந்த குருக்ஷேத்திரச் சமவெளியிலும் பயிராகி வந்தது. இதன் தண்டை எடுத்து இரண்டு கற்களுக்கிடையே வைத்து நசுக்கித்தண்ணீர் சேர்த்து ரஸமெடுப்பார்கள். பிறகு அதன் அசுத்தத்தைப் போக்குவார்கள். அத்துடன் பால், தேன், தயிர், நெய், பார்லி மாவு இவை சேர்த்துக் கொள்ளப்படும். இதன் குண விசேஷமும் மாறுபட்டதாகும். சில சமயங்களில் சிறிது போதை யூட்டினாலும் சோமபானம் வாய்க்கு ருசியாகவும், தேகத்திற்கு உல்லாசமூட்டுவதாகவும் இருக்குமாம்.

**ருக்வேதத்தில்** சோமபானத்தைப்பற்றிப் புகழ்ந்து பேசப்பட்டிருக்கிறது. இது "அறிவை வளர்க்கும்; நம்பிக்கையை ஊட்டும்; தைர்யமளிக்கும்; உறுதியை உண்டு பண்ணும்; சுய நிர்ணய உணர்வைப் பெருக்கும்; வாக்கு வன்மையை விருத்திசெய்யும்" என்று ருக்வேதம் செப்புகிறது. சோமபானத்திற்கு பராக்கிரமத்தை வழங்கும் சக்தியும், நோய்களைத் தீர்க்கும் வல்லமையும் இருந்ததாகக் கூறப்படுகிறது. "இதை அருந்தினால் குருடர்கள் கண் பெறுவர்; செவிடருக்குக் காது கேட்கும்; நொண்டிக்கு நடக்க முடியும்" எனவும் காணப்பட்டிருக்கிறது. அது இறவாத்தன்மையைப் பயக்குமெனவும் கருதப்பட்டது. இத்தகைய பானத்தை உண்மையில் மதுவகையில் சேர்க்க முடியாது. சோமபானம் மதுவாக விருந்திருப்பின் மதுவை வெறுத்துவந்த ஆரியர்கள் அதை உபயோகித்திருக்க மாட்டார்கள்.

இந்தச் செடி இப்பொழுது இந்தியாவில் இல்லை. இத்தகைய செடிகள் பண்டை இந்தியாவில் மத பூர்வ

மான காரியங்களுக்காக உபயோகிக்கப்பட்டு வந்தன. சோமச் செடிகளடங்கிய தோட்டங்களைப் பிராம்மணர்களுக்கு வழங்கவேண்டுமென **கௌடில்யர்** தமது அர்த்த சாஸ்திரத்தில் குறிப்பிட்டிருக்கிறார். உண்மையென்ன வெனில் புராதன காலத்திய பெரியார்களும், அறிஞர்களும் குடிப்பதைத் தடுத்திருந்தனர்.

வட இந்தியாவைப் போலவே **தமிழ் நாட்டிலும்** சாராயம் வியாபித்திருந்தது. 10-வது நூற்றாண்டு முதல் 15-வது நூற்றாண்டு வரையில் தென்னாட்டின் பொருளாதார நிலைமையை ஆராய்ந்துள்ள **டாக்டர் ஏ. அப்பாதுரை** அவர்கள் அக்காலத்தில் கள்ளிறக்குபவர்கள் தங்களுக்குள் சங்கங்களை ஸ்தாபித்துக்கொண்டிருந்ததாக அறிவிக்கிறார். கள்ளிறக்குபவர்கள் தொழில் வரியும் செலுத்தி வந்ததாக தெரிகிறது.

**மைசூர், கன்னடம், மலையாளம்** இந்தப் பிரதேசங்களில் சுற்றித் திரிந்து சமூக நிலைமைகளைக் கண்டறிந்த **புக்கானன்** என்னும் சஞ்சாரி எல்லாவகுப்பினரும் குடித்து வந்தனரென்றும், அரிசியிலிருந்தும், தேனிலிருந்தும், பனைமரத்திலிருந்தும் எடுக்கப்பட்ட பல மது வகைகள் உபயோகத்திலிருந்தன வென்றும் குறிப்பிடுகிறார். இங்கும் குடிப்பழக்கம் பலமாகக் கண்டிக்கப்பட்டு வந்தது.

முகம்மதியர் வேதமாகிய **குரானும்** குடிப்பதையும், சூதாடுவதையும் கண்டிக்கிறது. குடிப்பது பாவமென்றும், அது சைத்தானின் தொழில் என்றும் குரானின் இரண்டாவது, ஐந்தாவது அத்தியாயங்கள் செப்புகின்றன.

---

## 4. கட்டுப்படுத்த முயற்சிகள்

*மிதமிஞ்சி வொயின் குடிப்பது கூடாது; அது சர்ப்பத்தின் விஷத்தை யொத்தது.*

—கிறிஸ்தவர் வேத நூல்

இங்கிலாந்திலே மிகப் பழங்காலத்திலிருந்தே சாராயக் கடைகள் இருந்து வந்தன. இவற்றிற்கு "ஏல் ஹவுஸ்கள்" (Ale Houses) எனப் பெயர். அந் நாட்டில் பான வகைகளில் சாராயம்தான் உயர்ந்தஸ்தானத்தை வகித்து வந்தது. காப்பியும், தேயிலைப் பானமும் ஏற்படு வதற்கு முன்பு அவற்றிற்குப் பதிலாக சாராயத்தையே அநேகமாக அனைவரும் அருந்தி வந்தனர். மற்ற தேசங் களை விட இங்கிலாந்தில் ஜனங்கள் மிகவும் அதிகமாகக் குடிக்கத் தலைப்பட்டனர். அந்நாட்டில் ஜனங்களுக்கும் அரசனுக்குமிடையே நடந்த யுத்தத்திற்குப் பிறகு குடி மிகவும் தீங்கானதென்றும், சமூக வாழ்விற்கே அது பெருத்த ஆபத்தாக விருக்கிறதென்றும், அமைதியான வாழ்விற்கே பங்கமாக விருப்பதாகவும் கருதப்பட்டது.

1495 - ம் வருஷத்தில் அரசாங்கத்தார் சட்ட மொன்றை இயற்றி வைத்தனர். சாராயக் கடைகள் அமைக்கப்படுவதை அடக்கி ஆளுவதற்கு இச்சட்டம் நீதிபதிகளுக்கு அதிகாரமளித்தது. குடியை அடக்கி ஆளுவது சம்பந்தமான துரைத்தனத்தின் முதல் முயற்சி இதுவே. இம்முயற்சி சற்று வெற்றி பெற்றதென்றே கூற லாம். இச்சட்டத்தை அபிவிருத்தி செய்யவும், இது திறம்பட வேலை செய்வதற்கான முயற்சியில் இறங்கவும்

அவசிய மிருக்கிறதென்பது உணரப்பட்டது. சாராயக் கடைகள் அமைக்கப்படுவதை மட்டும் அடக்கி ஆண்டால் போதாது என்பதும் கண்டறியப்பட்டது. அதற்குமேற் கொண்டு பல காரியங்களைச் செய்ய வேண்டியிருந்தது.

இந்த அறிவுணர்ச்சியின் பயனாக 1551—1552-வது வருஷத்தில் **லைசேன்ஸ் கோடுக்கும் திட்டம்** ஒன்று வகுக்கப்பட்டது. சாராயம் விற்பதற்கான நேரத்தை நிர்ணயிக்கவும், சாராய விற்பனை சம்பந்தமாக சில நிபந்தனைகளை விதிக்கவும் நீதிபதிகளுக்கு அதிகாரம் வழங்கப்பட்டது. சிறிது காலத்தில் லைசென்ஸ் கொடுக்கும் முறை விஸ்தரிக்கப்பட்டது. ஆனால் இதனாலும் குடியினால் ஜனங்களுக்கு ஏற்படும் தீங்கைத் தடுக்க முடியவில்லை என்பது காணப்பட்டது. ஆகவே இன்னும் கடுமையான முறைகளைக் கையாள வேண்டுமென்று கோரிக்கைகள் பல எழுந்தன. என்ன செய்யலாம் என்று துரைத்தனம் யோசித்து சாராயத்தின் விலையை உயர்த்த வேண்டியது தான் என்பதை ஓர்ந்தது.

சாராயத்தின் விலையை உயர்த்தி விட்டால் ஏழை மக்களில் பலர் குடியை விட்டுவிடுவார்கள் என்று கருதப்பட்டது. ஆனால் விலையை உயர்த்திவிட்டால் பலர் கள்ளத்தனமாக சாராயம் காய்ச்ச முற்பட்டு விடுவார்களே, அதை எவ்வாறு தடுப்பது என்ற பிரச்னையும் ஏற்பட்டது. அப்பொழுது அமுலிலிருந்த சட்டங்களையும், ஒழுங்கு முறைகளையும் அபிவிருத்தி செய்யப் பல முயற்சிகள் கையாளப்பட்டு, கலால் சட்டங்களில் பல திருத்தங்கள் உண்டாக்கப்பட்டன. 1768-ம் வருஷத்தில் இந்த முயற்சியில் ஒரு முக்கியமான கட்டம் ஏற்பட்டது. இவ்வருஷத்தில் இயற்றப்பட்டதொரு சட்டம் காரணமாக ஞாயிற்றுக் கிழமைகளில் சாராயக் கடைகளெல்லாம் மூடப்பட்டன.

அடிக்கடி யுத்தங்கள் நிகழ்ந்ததாலும், இவற்றில் பங்கெடுத்துக் கொள்ள ஜனங்களுக்குத் தேகதிடம் அவசியமாக விருந்ததாலும் குடிப்பழக்கத்தினின்றும் ஜனங்களை மீட்கும் வகையில் கண்டிப்பான பல சட்டங்களை இயற்ற வேண்டி ஏற்பட்டது. எனவே மது விலக்குக்குச் சமமான சட்டங்கள் தோன்றலாயின.

**பிரான்ஸ்** தேசத்தில் மது வகைகளின் விற்பனையை அடக்கிஆளுவதும், அந்த வியாபாரத்தைச் சில ஒழுங்கு முறைகளுக்குக் கட்டுப்படுத்துவதும் அந்தந்த ஸ்தல அதிகாரியின் பொறுப்பில் விடப்பட்டது. விற்பனை சம்பந்தமான நிபந்தனைகளை நிர்ணயிக்க இவ்வதிகாரிகளுக்கு அதிகாரம் கொடுத்து 1884-ம் ஆண்டில் ஒரு சட்டம் இயற்றப்பட்டது.

**ஜேர்மனியில்** யுத்த காலத்தில் பலவிதமான கட்டுப்பாடுகள் ஏற்படுத்தப்பட்டன. ஆனால் கண்டிப்பான கட்டுப்பாடு முறைகளுக்குத் தேசம் தயாராகவில்லை. எனினும் யுத்தத்திற்குப் பிறகு குடியினால் ஜனங்களின் தேக வலுவு வெகுவாகக் குறைந்து விடுகிறதென்பது உணரப்பட்டதன்பேரில் **ரீச்ஸ்டாக்** சபை எந்தெந்த ஸ்தலங்களில் ஜனங்கள் மது விலக்கை அபேட்சிக்கிறார்களோ அங்கெல்லாம் அதை அனுஷ்டிக்கலாமென அனுமதித்தது; ஆனால் தேசத்தில் பலவித அபிப்பிராயங்கள் இருந்ததால் இரண்டு வருஷங்களில் குடியை அடக்கி ஆள வேண்டுமென்ற யோசனை நிராகரிக்கப்பட்டது.

**இதாலி** தேசத்தில் மதுபானக் கடைகளைக் குறைத்து விட வேண்டியதன் அவசியம் உணரப்பட்டது; எனினும் நாட்டின் பெரும்பாலான பிரதேசத்தில் திராட்சை பயிரிடப்பட்டு வந்ததால் கடைகளின் தொகையைக் குறைப்பதன் மூலம் விற்பனை குறைந்துவிட்டால் திராட்சைப்

பழங்கள் விற்பனையாகாமல் கிடக்குமே, அதற்கு என்ன செய்வது என்ற பிரச்னை எழுந்தது. திராட்சைச் சாகுபடி வெகு தூரம் பாதிக்கப்படுமென்பதும் உணரப்பட்டது. இருந்தாலும் தேசத்தின் நன்மையைக் கருதி லைசென்ஸ்கள் குறைக்கப்பட்டு, விற்பனை நேரங்களும் கட்டுப்படுத்தப்பட்டன.

**ஸ்விட்ஜர்லண்டு** தேசம் சிறியதாயினும் குடியைக் கட்டுப்படுத்தும் முயற்சியில் அது சற்றும் சளைக்கவேயில்லை. இவ்விஷயத்தில் அரசாங்கம் தக்க முறைகளைக் கையாள வேண்டுமென்று தீவிரமான கிளர்ச்சியிருந்ததால் 1923-ம் வருஷத்தில் பொது ஜன வாக்கு எடுக்கப்பட்டது. ஆனால் எதிர்பார்த்ததற்கு விரோதமாக கண்டிப்பான கட்டுப்பாடு முறைகளுக்கு எதிராக தேசம் தீர்ப்பு கூறியது. 1929-ம் வருஷத்தில் ஸ்தல இஷ்டத்தைப்பற்றிப் பொது ஜன அபிப்பிராயத்தை அறிவதற்காக வாக்குகள் எடுக்கப்பட்டு இந்தச் சீர்திருத்த உத்தேசமும் கைவிடப்பட்டது.

**ருஷ்யா** தேசத்தில் குடி விஷயத்தில் சர்க்காருக்கு இருந்த ஏகபோக உரிமை யுத்த காலத்தில் விஸ்தரிக்கப்பட்டது. சிலர் இதை பூரண மதுவிலக்குக்குச் சமமாகக் கருதினர். யுத்தத்திற்குப் பிறகும் இந்தக் கட்டுப்படுத்தும் அதிகாரம் தொடர்ந்து கையாளப்பட்டது. இந்தியாவைப்போல் ருஷ்யா தேசத்திலும் மது வியாபாரம் மூலம் சர்க்காருக்கு ஏராளமான வருமானம் கிடைக்கிறது. ருஷ்ய அரசாங்கத்தின் கலால் வருமானம் வருஷத்திற்கு 40 கோடி டாலர்களாகும்.

ஆரம்பத்திலேயே பூரண மது விலக்கு முறையை அனுஷ்டானத்திற்குக் கொண்டு வந்த தேசங்களில்

பின்லண்டு ஒன்று. 1900-ம் ஆண்டிலேயே பூரண மது விலக்கிற்கான தீவிர திட்டங்கள் கையாளப்பட்டன; சில வருஷங்களுக்குப் பிறகு மதுவிலக்குச் சட்டம் நிறைவேற்றப்பட்டது. ஆனால் பின்லண்டின் சாம்ராஜ்ய அதிகாரம் ருஷ்யாவினிடமிருந்தது; மேற்படி சட்டத்தை ருஷ்யா நிராகரித்து விட்டது. ஆனால் அது கண்டு பின்லண்டு ஏக்கமடையவில்லை. அந்தத்தேசம் சுயேச்சையைப் பெற்றதும் 1919-ம் ஆண்டில் மறுபடியும் மதுவிலக்குச் சட்டம் நிறைவேற்றப்பட்டது. மருந்துகள் கூட்டுவதற்காகவோ அல்லது விஞ்ஞான பூர்வமான பரீட்சார்த்த முறைகளுக்காகவோ அல்லாது வேறு எதற்கும் குடி வகைகளைத் தயாரிக்கவோ, இறக்குமதி செய்யவோ, ஏற்றுமதி செய்யவோ, விற்பனை செய்யவோ அல்லது சேமித்து வைக்கவோ கூடாதென இந்தச்சட்டம் தடுத்தது. மது விலக்குத் திட்டத்தை இன்னும் தீவிரமாக அமுல் நடத்துவதற்காக மேற்படி சட்டத்தில் தண்டனைகள் விதிப்பது சம்பந்தமான ஷரத்துகள் மேலும் கடுமையாக்கப்பட்டன. கால ரீதியில் இச்சீர்திருத்தத்தை அமுல் நடத்துவதில் மகத்தான கஷ்டங்களெல்லாம் நேரிட்டன. மருந்துகள் கூட்டுவதற்கும், விஞ்ஞானப் பரீட்சார்த்தங்களுக்கும் உபயோகிக்க உரிமை யளிக்கப்பட்டிருந்தது வேறு பல காரியங்களுக்கும் உபயோகிக்கப்பட்டது. எனவே இவ் விஷயம் சர்வதேச சங்கத்தின் பரிசீலனைக்கு விடப்பட்டது. 1928-ம் வருஷத்தில் மேற்படி உரிமை சம்பந்தமாகவும் சில கண்டிப்பான ஷரத்துகள் விதிக்கப்பட்டன.

**நார்வே, ஸ்வீடன்** இவ்விரு நாடுகளிலும் நூதனமான முறை கையாளப்பட்டது. இம்முறைக்குக் '**கம்பெனி முறை**' என்று பெயர். குடி வியாபாரம் சம்

பந்தமான ஏகபோக பாத்தியதை பூராவும் ஒரு கம்பெனியின் வசம் ஒப்படைக்கப்பட்டது.

அமெரிக்காவில் கையாளப்பட்ட மது விலக்குத்திட்டத்தின் கதை வெகு ருசிகரமானது. மது விலக்கிற்கான கிளர்ச்சி அத்தேசத்தில்பூர்வீககாலத்திலிருந்தே இருந்து வந்தது. மது விலக்கை அனுஷ்டிப்பதற்கு முன்னதாக துரைத்தனம் பல்வேறு கட்டுபாடு முறைகளை அனுஷ்டித்தது. பல ஸ்டேட்டுகளும் பல்வேறு முறைகளை அனுஷ்டித்தன. இறுதியில் அனைத்தும் மதுவிலக்குத் திட்டத்தில் ஏகோபித்து முனைந்தன. இதற்கான அவசியம் யுத்த காலத்தில் நன்கு உணரப்பட்டது. குடியைக் கட்டுப்படுத்தினால் தான் தேச மக்களின் தேகதிடம் செவ்வையாக விருக்குமென்பது அறியப்பட்டது. சாராயம் தயாரிப்பதற்காக உபயோகிக்கப்பட்ட பழங்களும், தானிய வகைகளும் ஆகாராதிகளாகவே உபயோகிக்கப்பட வேண்டுமென்றும், கையிலுள்ள சாராயத்தை மனிதர்கள் உபயோகிப்பதற்குப் பதிலாக கைத்தொழில் காரியங்களுக்காக உபயோகிக்க வேண்டுமென்றும் உணரப்பட்டது.

1919-ம் ஆண்டில் தேசிய மது விலக்குச் சட்டம் இயற்றி வைக்கப்பட்டது. பல்வேறு ஸ்டேட்டுகளிலும் மதுவிலக்குத் திட்டத்தை அனுஷ்டிப்பதற்கு அனுமதியளிக்க உரிமையிருக்கும்படி யுனைடெட் ஸ்டேட்ஸின் அரசயலில் திருத்தம் செய்ய வகை காணப்பட்டது. இந்தத் திருத்தத்திற்குப் பிறகு பல ஸ்டேட்டுகளிலும் சீர்திருத்தம் தீவிரமாக அனுஷ்டிக்கப்பட்டது. இத் திருத்தத்தின் சட்ட ரீதியான அம்சங்கள் விசேஷ விவாதங்களுக்கு இடம் கொடுத்தன. இவற்றின் காரணமாகப் பல வியாஜ்ஜியங்கள் ஏற்பட்டன. ஆனால் சுப்ரீம் கோர்ட்டு இச் சட்

டத்தின் நியாயத்தையே வற்புறுத்தி வந்தது. நாளடைவில் திருட்டுத்தனமாக சாராயம் காய்ச்சுவதும், வியாபாரம் செய்வதும் வலுத்து வந்தது. மதுவிலக்குத் திட்டத்தை அனுஷ்டிப்பதில் பற்பல கஷ்டங்களும், இடையூறுகளும் நேரிடலாயின. ஆயினும் மதுவிலக்கினுல் ஏற்பட்ட அனுகூலங்களை ஒருவராலும் புறக்கணிக்க முடியவில்லை. அர்த்த சாஸ்திர நிபுணர்களும், புள்ளி விவரங்களைச் சேகரிப்பவர்களும் மது விலக்குத் திட்டத்தின் பொருளாதார நன்மையைக் கண்டறிந்து, அதனுல் நாட்டுக் கைத்தொழில்கள் வெகு தூரம் அபிவிருத்தி யடைந்தனவென்றும், வீடுகளில் சந்துஷ்டியும், அமைதியும் நிலவ அது வெகுதூரம் உதவியதாகவும், ஏழைமக்களின் குடும்பங்கள் அதனுல்பல நன்மைகளை அனுபவித்தனவென்றும் அபிப்பிராயங்களை வெளியிட்டனர். மது விலக்கு "குடும்பக் கஷ்டங்களை யொழித்து நாட்டில் சுபிட்சத்தை நிலைநாட்டியது" என்று **பாக்வேல்** மேயர் குறிப்பிட்டார்.

**கானடா** தேசத்தில் மது விலக்கை ஏற்படுத்த 1898 - ம் வருஷத்தில் முயற்சி செய்யப்பட்டது.

குடியைக் கட்டுப்படுத்தவும், மதுவிலக்கை அனுஷ்டிக்கவும், லைசென்ஸ் முறையைத் தொடர்ந்து நடத்தவும் **ஆஸ்திரேலிய** அரசியலில் ஏற்பாடு செய்யப்பட்டுளது. 1925-ம் வருஷத்தில் மதுவிலக்கை அனுஷ்டிப்பதற்காகச் செய்யப்பட்ட முயற்சி ஆதரவின்மையால் வீழ்ந்து விட்டது.

---

## 5. இந்திய மது வகைகள்

*மீன் மாமிசத்தை உண்ணுபவர்களும், மதுபானம் செய்பவர்களும் அவர்களது தாய், தந்தையருடன் நரகத்தை அடைவார்கள்.*

—மகாத்மா கபீர்தாஸ்

சன்மார்க்க நெறியை உத்தேசித்தே ஆதிகாலத்தில் இந்தியாவில் மதுபானத்தின்மீது தடைவிதிக்கப்பட்டது. எளிய வாழ்வு, ஆத்மார்த்த சுத்தம் இவையே சமூகவாழ்வின் அடிப்படையான தத்துவங்களாக விளங்கின. ஆரோக்கிய வாழ்வு, சமூக சந்துஷ்டி இவற்றிற்கு அனுகுணமான விஷயங்களை யொட்டியே சட்ட நிபுணர்கள் சட்டங்களை வகுத்தனர். தனி நபர்களின் வாழ்விற்கு ஊறுசெய்து, சமூகவாழ்விற்குத் தீமை பயக்கும் காரணத்தைக்கொண்டே மது உண்ணுதல் கண்டிக்கப்பட்டது.

இந்தியாவில் உபயோகிக்கப்பட்டு வரும் மதுபான வகைகளை மூன்று பிரிவுகளாகப் பிரிக்கலாம்: (1) **நாட்டுச் சாராயம், (2) வெளிநாட்டுச் சாராயங்கள்; (3) கள்ளு.** போதையூட்டும் மது பான வகைகளின் முக்கிய ஆதாரமாக விளங்குவது மது சாரமாகும். தானிய வகைகள் அல்லது பழ வகைகள் அல்லது தென்னை, பனை அல்லது ஈச்சை இவற்றின் சாறுடன் சர்க்கரையைக் கலந்து புளிக்க வைப்பதால் ஏற்படும் வஸ்துவிற்குத்தான் மதுசாரம் எனப் பெயர். ஆதாரத்திற்கும் முறைக்கும் ஏற்றபடி இந்தத் தயாரிப்பு பீர், அரக்கு (சாராயம்) அல்லது வொயின் என அழைக்கப்படும். புழுக்கிய வார்க் கோதுமை முதலிய தானியங்களைப் புளிக்க வைப்பதால் பீர் தயாரிக்கப்படுகிறது. இதில் 7 சத விகிதத்திற்கு மது சாரம் கலக்கப்படுகிறது.

**அரக்கு** அல்லது **சாராயம்** என்பது இந்தியக் கிராமங்களில் தயாரிக்கப்படுவதாகும். வெல்லப்பாகு, வெல்லத்தண்ணீர் முதலியவற்றைப் புளிக்க வைத்துக் காய்ச்சி இறக்குவதினின்றும் இது தயாரிக்கப்படுகிறது. இதில் மது சாரம் 30 முதல் 40 சத விகிதத்திற்கு இருக்கிறது.

**வோயின்** என்பது திராட்சைப்பழ ரஸத்தினின்றும் தயாரிக்கப்படுவது. இது பல வகைளில் தயாரிக்கப்படுகிறது. இதில் மதுசாரக் கலப்பு 10 முதல் 25 சதவிகிதம் வரையி லிருக்கிறது. வொயினின் மதுசாரத்தை அதிகப்படுத்துவதற்காக பானமாகத் தயாரிக்கப்பட்டதற்குப் பின்பு வேறு மதுசாரம் தனியாகச் சேர்க்கப்படுகிறது.

ஓட், பார்லி, ரம் என்னும் வெல்லச் சாராயம் முதலிய தானியவகைகளின் சத்தெடுத்து அதைப் புளிக்க வைத்துக் காய்ச்சி இறக்குவதன் மூலம் **விஸ்கி** என்னும் பானம் தயாரிக்கப்படுகிறது. ரம் என்பது வெல்லத்திலிருந்து தயாரிப்பது.

திராட்சை ரஸத்தைப் புளிக்க வைத்துப் பிறகு காய்ச்சுவதன் மூலம் கிடைப்பது **பிராந்தி**. இவற்றின் மதுசாரக் கலப்பு 50 சத விகிதமாகும்.

வார்க் கோதுமையைப் புழுக்கவைத்து அதன்சத்தினின்றும் காய்ச்சி எடுப்பது **ஜின்** என்னும் மதுபானமாகும். சோளத்தினின்று கூட இது தயாரிக்கப்படுகிறது. இதில் 40 முதல் 50 சதவிகித மதுசாரக் கலப்பு இருக்கிறது.

இந்தியாவிலுள்ள ஏழை மக்களில் பெரும்பாலோரால் உபயோகிக்கப்படுவது **கள்ளு** தான். தென்னஞ்சாறு அல்லது பனஞ்சாற்றைப் புளிக்க வைப்பதினின்றும் இது கிடைக்கிறது.

இந்தக் கள்ளுந் தண்ணீர் மூன்று நாட்களுக்கு அப்படியே நன்றாக இருக்கிறது. பிறகு புளித்து விடுறது. இந்தப் புளிப்பேறிய கள்ளிலிருந்துதான் அரக்கு அல்லது சாராயம் எடுக்கப்படுகிறது. சுண்ணும்பு பூசப்பட்ட சட்டிகளில் இறக்கப்படும் சாறுக்கு **பதனி** என்று பெயர். இது குடிப்பதற்கும் வெல்லம் தயாரிப்பதற்காக உபயோகிக்கப்படுகிறது. கள்ளில் 8 முதல் 10 சத விகிதம் வரையில் மதுசார மிருப்பதாகக் கூறப்படுகிறது. இதில் தான் மிகக்குறைந்த மதுசார சத்திருப்பதாக வைத்திய விற்பன்னரில் பலர் ஆராய்ச்சி மூலம் அறிவிக்கிருர்கள்.

---

## 6. மதுவும் ஆரோக்கியமும்

*சாராயம் ஒருவகை விஷம்; மதுவகைகளனைத்தும் விஷமே ; இவற்றால் ஆரோக்கியம் கெடுகிறது.*

—டாக்டர் குர்ட்டினே வீக்ஸ்

மதுபானம் ஆரோக்கியத்தைக் கெடுத்துவிடுகிறதென்பதில் வைத்தியர்கள் ஏகமுகமான அபிப்பிராயம் கொண்டிருக்கிறார்கள். மதுபானத்தை அருந்தியவுடன் அது தேக ஆயாசத்தைப் போக்கி, பகல் முழுதும் வேலை செய்வதால் ஏற்படும் உடம்பு வலிகளை நீக்குகிறதென்னமோ வாஸ்தவம்தான். அது தேகத்திற்கு உத்தீபனமூட்டுகிறது. இருந்தாலும் அது உணர்ச்சிகளை அழித்து விடுகிறது. மேலும் அது மனிதனின் அறிவுச் சக்தியையும் ஒடுக்கி, தன்னடக்கத்தை நாசப்படுத்துகிறது. அளவுக்கு மிஞ்சி அருந்தினால் மது வகைகள் மனிதனுடைய வாழ்வுக் காலத்தைக் குறைத்து விடுகின்றன. நீண்ட காலத்திற்கு ஒருவன் குடித்து வருவானாகில் அவன் தேகத்திலுள்ள எதிர்ப்புச் சக்திக்குச் சேதமேற்படுவதால் அவன் பலவிதமான நோய்களுக்கு ஆளாகின்றான். போதையூட்டும் வஸ்துக்களை யுண்டதும் அவை என்ன செய்கின்றனவென்றால் தேகத்திலுள்ள நரம்புக் கோசத்தையே தாக்கி தேகத்தின் பல பாகங்களை ஸ்தம்பிக்கச் செய்து விடுகின்றன.

"மதுபானமும் க்ஷயரோகமும் சமூக முன்னேற்றத்தைத் தடைப்படுத்துபவைகளில் முன்னணியில்நிற்கின்றறன" என்று **டாக்டர் டி. எல். கெலிணக்** என்பார் கூறுவதாக **திரு. எல். டி. பெமின்** என்பவர் தமது "மது விலக்கு" என்னும் நூலில் குறிப்பிட்டுள்ளார்.

மது வகைகளைப்பற்றி ஆராய்வதற்காக 1909-ம் வருஷத்தில் லண்டன் நகரில் சர்வதேச மகாநாடொன்று நடைபெற்றது. இதற்குப் பல்வேறு தேசங்களிலிருந்தும் விஞ்ஞான சாஸ்திரிகளும், வைத்திய நிபுணர்களும் வந்திருந்தனர். இவர்களனைவரும் தங்களது ஆராய்ச்சிகளை ஒத்திட்டுப் பார்த்து மதுபானம் விஷத் தன்மையுடன் கூடியதென்றும், அது மனித தேகத்தை அழித்துவிடுகிறதென்றும் முடிவிற்கு வந்தனர். இநதத் தகவலும் மேற்படியாரின் புத்தகத்திலேயே காணப்படுகிறது.

இந்தியமதுபானவகைகள் பலவற்றையும் ஆராய்ந்த **மேஜர் சி. எச். பெட்போர்ட்** என்பவர் மற்ற தினுசுகளிலிருப்பதைவிட கள்ளில் சற்று அதிக புஷ்டி தரக்கூடிய சரக்குகளிருப்பதாகக் கண்டறிந்தார். "கள்ளின் இன்னொரு குணமென்னவென்றால், இதர மதுபான வகைகளைக் காட்டிலும் அதில் மதுசார சத்து மிகவும் குறைந்த அளவிற்கு இருப்பதே" என்கிறார் அவர். ஆனால் 1905-ம் ஆண்டில் இந்தியா கவர்ன்மெண்டாரால் நியமிக்கப்பட்ட கலால் கமிட்டியினர் எல்லா மதுபான வகைகளைக் காட்டிலும் கள்ளில் குறைந்த அளவான விஷத்தன்மை இருப்பினும் அதை மிதமாகத் தான் குடிக்க வேண்டுமென்றும், அதிலும் புத்தப் புதியதாக விருக்கையில்தான் உபயோகிக்க வேண்டுமென்றும் அபிப்பிராயப்பட்டனர். கள் இறக்கப்பட்ட நேரத்திலிருந்து 24 மணி நேரத்திற்குள் அதைக் குடிப்பதே சிறந்ததென நிர்ணயிக்கப்பட்டிருக்கிறது. 24 மணி நேரத்திற்குப் பிறகு அதை உபயோகித்தால் அதன் தீமையூட்டும் சக்தி தேகத்தில் அதிகமாகப் பரவ ஆரம்பிக்கிறதாம்.

---

# 7. பேயை விரட்ட

பூரண மது விலக்கை ஏற்படுத்துவ தென்பது சாத்தியப்படாத நிலையில் அடுத்த சிறந்த காரியம் என்னவென்றால் அந்தத் தீமையைச் சில ஒழுங்கு களுக்கும் கட்டுப்பாடுகளுக்கும் உட்படுத்தியோ அல் லது சர்க்காரே மேற்பார்வையை ஏற்றுக்கொண்டோ அடக்கி ஆளுவதுதான்.

—ஆசிரியர் கே. வி. ரங்கஸ்வாமி அய்யங்கார்

வைத்தியர்களில் ஒரு சிலரைத் தவிர மற்ற அனைவரும் குடிக்கு விரோதமாகவே இருக்கிறார்கள். எனவே மது வகைகளின் வியாபாரத்தைக் கட்டுப்படுத்தவும், குடியை அடக்கவும் நீண்டகாலமாக முயற்சிகள் செய்யப் பட்டு வந்திருக்கின்றன. புராதன ஹிந்து அரசியல் முறை இது சம்பந்தமான கட்டுப்பாடு முறை ஒன்றை வகுத் திருந்தது.

ஆகாராதிகளும், தினசரி வாழ்வும் சமூகத்தின் திற மையையும், ஜனங்களின் க்ஷேமத்தையும் உருவகப் படுத்தி வந்ததால் அவை சம்பந்தமாக சில கட்டுப்பாடு கள் இருந்து வந்தன. இதனால் சொந்தச் சுதந்தரத்திற்கு இடமளிக்கப்படவில்லை யென்று அர்த்தமல்ல; அந்தச் சுதந்திரம் சில நியதிகளுக் குட்பட்டிருந்தது. உடலுக்கு ஊறு உண்டுபண்ணும் சரக்குகளைத் தயாரிக்கும் விஷயத் தில் சர்க்காரே ஏகபோக உரிமையை வகித்திருந்தது. சாராய வகைகள் சர்க்கார் தொழிற்சாலைகளில் தயாரிக் கப்பட்டன; உற்பத்தியையும் விற்பனையையும் சரிவர கட்டுப்படுத்துவதற்காகவே இவ்வாறு செய்யப்பட்டது. மதுபான வகைகளை ஜனங்கள் உபயோகிப்பது சங்க

வரி மூலமாகவும், கலால் வரி மூலமாகவும் கட்டுப்படுத்தப்பட்டது.

மதுபான வகைகளின் சூப்பிரண்டு என்று ஒரு அதிகாரி; மது வகைகளின் தயாரிப்பு, விற்பனை சம்பந்தமான சட்ட திட்டங்களை இவர் அமுல் நடத்தி வந்தார். இப்படியாக அர்த்த சாஸ்திரத்தில் விவரிக்கப்பட்டிருக்கிறது. இந்த வியாபாரத்தைக் கட்டுப்படுத்துவதற்கான வழிகள் இரண்டு. கடைகளின் தொகையைக் குறைப்பது ஒன்று: அவற்றின் இடத்தைக் கட்டுப்படுத்துவது இன்னொன்று. கடைகள் ஒன்றன் பக்கத்தில் ஒன்றாக இருக்கக் கூடாதென விதிக்கப்பட்டது. ஒவ்வொரு கடையிலும் இவ்வளவு சாராயம்தான் விற்கலாம், இன்னின்னாருக்குத்தான் விற்கலாம், இன்ன விலைக்குத்தான் விற்கலாம் என்று கட்டுப்படுத்த கண்டிப்பான விதிகள் நிர்ணயிக்கப்பட்டன. கிராமத்திற்கு வெளியே மது வகைகள் எடுத்துச் செல்ல அனுமதிக்கப்படவில்லை. தொழிலாளிகள் குடித்துவிட்டுத் தங்கள் தொழிலைக் கெடுக்காமலிருப்பதற்காக நல்ல குணசாலிகளுக்கு மட்டுமே மது வகைகளை விற்பனை செய்யலாமென்றும், அதுவும் சிறிய அளவிற்குத்தான் கொடுக்கலாமென்றும் ஏற்பாடு செய்யப்பட்டது.

சிறந்த குணசாலிகள்மாத்திரமே கடைக்கு வெளியே மது வகைகளை எடுத்துச் செல்லலாம். குடிக்க விரும்புபவர்கள் அனைவரும் குடிப்பதற்கு அனுமதிக்கப்பட்டனர். ஆனல் குடிவெறி நீங்கி மனிதர்கள் தங்கள் சுயபுத்திக்குத் திரும்பும்வரையிலும் உள்ளேயே இருப்பதற்குக் கடைகளில் போதுமான அளவிற்கு இடம் விஸ்தாரமாக இருக்கவேண்டுமென நிர்ப்பந்திக்கப்பட்டது. குடிகாரர்கள் கடைக்குள் இருக்கையில் அவர்களது உயி

ருக்கும், உடைமைகளுக்கும் போதுமான பாதுகாப்புக்கு உறுதி கூறப்பட்டது; கடையில் அவர்களுக்குப் பலவிதமான சௌகர்யங்கள் செய்து கொடுக்கப் பட்டன.

ப்ராசீன இந்திய அரசியல் தத்துவத்தில் மகா மேதாவியான **சுக்ராச்சாரியார்** மது வகைகளில் பொது மக்களுக்குத் தீங்கேற்பட்டு வந்ததால் கிராமங்களின் எல்லைக்கு வெளியே தான் மதுபானக் கடைகள் இருக்க வேண்டுமென விதித்தார். விலை குறைவு காரணமாக விற்பனை பெருகியதால் கெட்ட சாராயத்தைத் தவிர மற்ற வகைகளை அவற்றிற்குண்டான விலைக்கும் குறைத்து விற்கக் கூடாதென உத்தரவிடப்பட்டது.

இந்த நிர்ப்பந்தங்களும், கட்டுப்பாடுகளும் எதைக் காட்டுகின்றன? ஜனங்களைக் குடியை விட்டுவிடும்படி செய்வது சாத்தியமில்லையாததால் அவர்களைக் குடிப்பேயினின்றும் பாதுகாப்பதற்கான சிறந்த வழி குடியைக் கட்டுப்படுத்துவதே எனப் புராதன மன்னர்கள் எண்ணினர் என்பதையே காட்டுகின்றன.

இங்ஙனமாக புராதன இந்தியாவில் மது பானத்தைத் தடுக்கும் மார்க்கமாக மதுவகைகளின் வியாபாரம் கட்டுப்படுத்தப்பட்டது; தேசத்தின் ரெவினியூ முறையில் இது ஒரு அம்சமாக விருந்தது. சில வருஷங்களுக்குப் பிறகு கள்ளிறக்குபவர்களுக்கு ஒரு வரி விதிக்கப்பட்டது. முஸ்லீம்கள் இந்தியாவை ஆண்டகாலத்தில் மதுபான வகைகளுக்கு வரி போடப்பட்டது.

குடியை விலக்க முயற்சி செய்த முதல் இந்திய அரசர் **அல்லாவுத்தீன் கில்ஜி**; (1296-1316) குடிப்பேயைத் தொலைக்க இவர் தீவிர முறைகளை எடுத்துக் கொண்டார். தாம் குடிப்பதை விட்டொழித்து இவர் பிறருக்கு

வழிகாட்டினார். தாம் குடியை விட்டுவிட்டதன் அறிகுறியாக இவர் தமது அரண்மனையில் மதுவகைகளைக் குடிப்பதற்காக உபயோகித்துவந்த பீங்கான், கண்ணாடிப் பாத்திரங்களையெல்லாம் வெளியே எறிய உத்தர விட்டார். குடிப்பதைப் பழக்கமாகக்கொண்டு விட்டவர்களைச் சீர்திருத்துவது சுலபமானதாக இல்லை. மதுவகைகள் கள்ளத்தனமாக தலை நகருக்குக் கொண்டுவரப்பட்டு உபயோகிக்கப்பட்டன. ஆனால் இக்குற்றவாளிகள் கண்டு பிடிக்கப்பட்டதும் அவர்கள் பிரத்யேகமாக வெட்டப்பட்ட பெருங்குழிகளில் தள்ளப்பட்டனர். இப்படிச் செய்தும் குடிப்பேய் ஒழியவில்லை. சுல்தான் பார்த்தார். தமது கடுமையான விதிகளில் சற்று தளர்ச்சிகாட்டினார். சொந்த உபயோகத்திற்கு மாத்திரமாயின் மதுபான வகைகளை வைத்துக் கொள்ளலாமென்றும், இவை அவரவர்கள் வீடுகளிலேயே தயாரிக்கப்பட வேண்டுமென்றும் விதிக்கப்பட்டது. இதனால் பகிரங்கமாகக் குடிப்பது தற்காலிகமாகத்தான் நின்றது. ஆனால் அலாவுதீன் கில்ஜியின் குமாரன் காலத்தில் எல்லாம் "பழைய குருடி கதவைத் திறடி" என்ற கதைக்கு வந்துவிட்டது. வொயின் கடைகள் மறுபடியும் திறக்கப்பட்டன; உலகம் பூராவுமே குடியில் ஆழ்ந்தது என்கிறார் **லேன்பூல்** என்பவர்.

ஜிஹாங்கீர் (1605—1627) தனது பிரஜைகள் வொயின் சாப்பிடக் கூடாதெனத் தடுத்தார். ஆனால் தனக்குமட்டும் குடிப்பதற்கு லைசென்ஸ் வைத்துக்கொண்டார். "பால்யத்தில் குடிப்பைத்தியம் ஏற்படுகையில நான் 20 கோப்பை சாராயம் குடிப்பேன். ஆனால் காலம் ஆக ஆக அதனால் பாதகமேற்படத்தலைப்பட்டதும் நான் அளவைக் குறைத்துக்கொண்டேன். ஏழு வருஷங்களில் நான் எனது குடியின் அளவை ஐந்து அல்லது ஆறு

கோப்பை களுக்குக் கொண்டு வந்து விட்டேன்.'' என்று அவர் கூறியுள்ளார்.

அக்பர் சக்கரவர்த்தியின் காலத்தில் சாராயத்தின் மீது வரி விதிக்கப்பட்டது.

முஸ்லீம் அரசர்களில் மதுவிலக்கை அமுலுக்குக் கொண்டு வர திப்பு சுல்தான் காலத்தில மற்றொரு முறை முயற்சி நடந்தது. வைதீக முஸ்லீமானதால் அவர் குரானின் உபதேசத்தைப் பின்பற்றினவராய் தனது சமஸ்தானத்திலுள்ள கள்ளுக்கு விடப்படும் மரங்களனைத் தையும் வெட்டிவிடும்படி உத்தரவிட்டார். கள்ளிறக்குப வர்களுக்கு வேறுதொழில்கள் தேடித் தரவேண்டுமென் றும் அவர் உத்தரவு செய்தார். திப்பு பிரிட்டிஷாருக்கு விரோதமாக விருந்தானென்பதற்காக அவரைப்பலமாகக் கண்டிக்கும் கர்னல் மார்க் வில்க்ஸ் என்பவர் மதுவிலக் கிற்காக அவர் எடுத்துக்கொண்ட பிரயாசைகளைப் பெரி தும் சிலாகிக்கிறார். "அவரது தவறுதல்களுக்கும் பாவச் செயல்களுக்கு மிடையே அவன் செய்துள்ள ஒரே ஒரு நல்லகாரியம் மட்டும் நன்குசோபித்து நிற்கிறது' என் கிறார் கர்னல் வில்க்ஸ். திப்பு மதுபானக் கடைகளைக் குறைத்தான்; குடியையும், போதையூட்டும்; மருந்துச் சரக்குகளையும் தடைசெய்யும் வரையில் சாராய வியாபா ரத்தைக் கட்டுப்படுத்தினான்.

இவ்வளவு உத்தமமான முயற்சிகளுக்குப் பிறகுகூட குடிப்பேய் ஜனங்களை விட்டகலவில்லை. பிரெஞ்சுதேசத் தில் பொன் வேலை செய்பவரான டாவர்னியார் என்பார் 1631-ம் வருஷத்திலிருந்து 1668-ம் வருஷத்திற்குள் பல தடவை இந்தியாவிற்கு விஜயம் செய்திருக்கிறார். இவர் நாட்டின் பல்வேறு பாகங்களுக்கும் விஜயம் செய்து மக்களின் வாழ்வை நன்கறிந்தவர். கோல்கோண்டா

சுல்தான் கள்ளு மூலம் ஏராளமான வருமானத்தைப் பெற்றதாகவும், சாராயம் குடிப்பது ஏழை மக்களிடையே சர்வ சகஜமாக விருந்ததென்றும் இவர் கூறியுள்ளார். ஆனல் உயர் வகுப்பினர் குடியைச் சாத்தானின் தொழில் எனக் கூறி அப்பழக்கத்தை ஒழித்திருந்ததாகவும் அவர் கூறியிருக்கிறார்.

ஜனங்கள் சாதாரணமாகத்தான் குடித்து வந்தனர்; உயர் வகுப்பினரில் சிலர் தான் மிதமின்றிக் குடித்தார்கள். பொது மக்கள் மிதமிஞ்சிய குடியை வெறுத்துவந்ததாக ஆசிரியர் டாக்டர் வி. ஏ. ஸ்மித் சொல்லுகிறார்.

---

## 8. சமூகத்தின் விஷம்

குடியே சகல தீமைகளுக்கும் காரணம்; நாட்டிலுள்ள தொழிலாளரில் பாதி பேர்களின் நாசத்திற்குக் காரணம் குடிதான்.

—ஜார்ஜ் வாஷிங்டன்

குடியின் தீமையை உணர்ந்ததும் ஜனங்கள் மிதமாகக் குடிப்பதன் அவசியத்தை அறிந்தனர். பதினெட்டாவது நூற்றாண்டில் அமெரிக்காவில் பெருத்த பொது ஜன இயக்கம் தோன்றியது. மிதக்குடியை நிலை நாட்டுவதற்காகக் கட்டுப்பாடுடன் கிளர்ச்சி செய்வதே அதன் நோக்கமாக விருந்தது.

அமெரிக்க யுனைடெட் ஸ்டேட்ஸின் முதல் குடியரசுத் தலைவரான **ஜார்ஜ் வாஷிங்டன்** மதுபானத்தால் ஜனங்கள் பாழ்பட்டு வந்ததை உணர்ந்தார். முக்கியமாக ஏழைத் தொழிலாளிகள் எவ்விதம் சீர்கெட்டு வந்தனரென்பதை அவர் அறிந்துதான் "குடியே சகல தீமைகளுக்கும் காரணம்; நாட்டிலுள்ள தொழிலாளரில் பாதி பேர்களின் நாசத்திற்குக் காரணம் குடிதான்" என்று கூறி அதைக் கண்டித்தார். மிதக்குடிப் பிரசாரகர்கள் குடியை எதிர்த்துப் போரிட்டனர்; 1808-ம் வருஷத்தில் **சரடோகா** என்னுமிடத்தில் முதல் மிதக் குடிச் சங்கம் நிறுவப்பட்டது. கால ரீதியில் இச்சங்கம் வளர்ந்து சிறந்த சேவை செய்தது. இதன் காரணமாகப் பொது ஜன அபிப்பிராயம் வலுவடையவே மிதக் குடி ராஜீயப் பிரச்னையாகி விட்டது.

ஐரோப்பாவில் **அயர்லாந்து** தேசத்தில்தான் முதல் முதல் மிதக் குடி ஸ்தாபனம் ஏற்பட்டது. இது 1815-ம் வருஷத்தில்.

சில வருஷங்கள் கழிந்ததும் குடித் தீமையை அனுமதித்துக்கொண்டு மிதக் குடி பிரசாரத்தி லிறங்குவது

வெறும் வீணான முயற்சியே என்பது கண்டறியப்பட்டது. மதுபானம் ஒரு விஷமென்றும், இதைச் சமூகத்திலிருந்து அப்புறப்படுத்த வேண்டியது அவசியமென்றும் கருதப்பட்டது.

**ஜெனரல் ஜேம்ஸ் ஆப்பிள்டன்** என்று ஒருவர். இவர்தான் அமெரிக்க மதுவிலக்கு இயக்கத்தின் பிதாவாகக் கருதப்படுபவர்.

சட்டத்தின் கட்டுப்பாடுகளுக்கு உட்படுத்திக்கூட இந்த விஷத்தை விற்பது சரியல்லவென்றும், இதை விற்பனைக்குக் கிடைக்காமலே செய்துவிட வேண்டுமென்றும் 1837-ம் வருஷத்தில் இவர் கூறினார்.

> "மதுபான வியாபாரம் சமூகத்தின் விஷமாகும்; இது சமூகத்தையே தின்றுவிடுகிறது; இந்த விஷத்தைக் கட்டுப்படுத்துவதற்கான முயற்சிகள் ஒருநாளும் வெற்றி பெறா; இதனால் இந்தத் தீமை வளருமே தவிர குறையாது; இனிமேல் கட்டுப்பாடுகளி லிறங்கிப் பயனில்லை; இந்த விஷத்தை அடியோடு வேரறுக்க வேண்டும்; ஒரு வேர் கூட இருக்கக் கூடாது; இதைச் செய்யாமல் போனால் ஜனங்கள் இக்குடிப்பேய்க்கு ஆளாகி அவதியுறத் தான் செய்வர்."

என்று **பூஜ்யர் டாக்டர் ஜேம்ஸ் ஸ்மித்** 1853-ம் வருஷத்தில் அறிவித்தார். டாக்டர் ஜேம்ஸ் குடியொழிப்புப் போரில் முதன்மையானவர்.

இப்படியாக சீர்திருத்தக் காரர்களின் திருஷ்டி மிதக்குடியிலிருந்து மது விலக்குக்குத் திரும்பியது. **ஆப்ரஹாம் லிங்கன்** மதுவிலக்கு இயக்கத்திற்கு ஆதரவளித்தார். சென்ற நூற்றாண்டின் மத்தியில் அமெரிக்க அரசியல் வாதிகளில் பலரும் மிதக் குடியைப்பற்றிப் பேசவில்லை; மது விலக்கைப்பற்றியே பேசினர்.

---

## 9. அமெரிக்காவின் அனுபவம்

கெட்ட காரியங்கள் வரி போடக்கூடிய சொத்துக் களல்ல. அவை சர்க்கார் அடக்கவேண்டியவை. திருட்டுத் தொழிலுக்கும், கற்பழித்தலுக்கும் எந்தத் தேசத்திலும் வரி போட்டதாக எவரும் எப்பொழுதும் கேட்டதேயில்லை.

—சேல்டர் பீல்ட் பிரபு

1850-ம் வருஷத்திற்குச் சில வருஷங்களுக் கிப்பால் அமெரிக்கா தேசத்தைச் சேர்ந்த பல மாகாணங்களும் மதுவிலக்குத் திட்டத்தை ஏற்றன. ஆனால் இந்தச் சீர்திருத்தம் நிரந்தரமாகவில்லை. எப்படி இருக்கமுடியும்? வேரூன்றிப் போய்க் கிடக்கும் ஒரு தீய வழக்கத்தை, சில பணக்கார சுயநலமிகளின் ஆதரவால் தழைக்கும் ஒரு வழக்கத்தை ஒரு நொடியில் போக்கி விடுவதென்பது சுலபமான காரியமல்ல. சலியாத முயற்சியால் தான் அதை யொழிக்க முடியும். மதுவிலக்குச் சட்டம் ஏற்பட்டதைக் கண்டு மக்கள் திருப்தியடைந்தனரே யன்றி, அது வெற்றியுடன் வேலை செய்வதற்கான ஆதரவை அவர்கள் ஒழுங்காக அளிக்கவில்லை. சட்ட மீறுதல்களினின்றும் அவர்கள் தங்களைப் பாதுகாத்துக் கொள்ளவில்லை. சட்ட மீறுதல்கள் பூராச் சீர்திருத்தத் திட்டத்தையே பாதித்தன; மாகாணங்களில் மது விலக்கு தோல்வியுற்றது.

ஆனால் குடியை யொழித்துப்போட அமெரிக்க மகா ஜனங்கள் உறுதி கொண்டிருந்தனர். போதை யூட்டும் வஸ்துக்கள், மருந்து வகைகள் இவற்றிற்கு எதிராக அவர்கள் தீவிரமாகப் போர் நடத்தி வந்தனர். மது விலக்கை ஏற்கனவே பல மாகாணங்களும் ஏற்றுக்கொண்டிருந்தாலும் சீர்திருத்தத்தை நாடு பூராவும் அமுலுக்குக்

கொண்டு வருவதற்காக அரசியலைத் திருத்த வேண்டுமென்று கருதப்பட்டது. அங்ஙனமே 1919-ம் வருஷத்தில் **வால்ஸ்டீட் சட்டம்** அல்லது அமெரிக்க அரசியலின் 18-வது திருத்தம் அங்கீகரிக்கப்பட்டது. இதன் காரணமாக நாடெங்கும் மது விலக்கு இயக்கம் அனுஷ்டானத்திற்கு வந்தது. தேசம் பூராவும் குடி யொழிந்தது. இந்த நிலைமை சில வருஷங்களுக்கு நீடித்திருந்தது. மது விலக்கினால் ஜனங்களுக்கு விசேஷ அனுகூலங்கள் ஏற்படுவது காணப்பட்டது.

ஆனால் மது பான வியாபாரத்தைக் கைக்கொண்டிருந்தவர்களுக்கு மது விலக்கினால் அதிகக்கஷ்டங்களேற்பட்டன. மது வகைகளைத் தயாரிப்பவர்களும், அவற்றை விற்பனை செய்பவர்களும் இச்சீர்திருத்தத்தை எதிர்த்தனர். ஆசையைச் சிறிதுகாலத்திற்கு அடக்கி வைத்திருந்தால் பிறகு அதில் அதிகமாக இறங்கும்படியான தூண்டுதல் ஏற்படுகிறது. ஆகவே குடிப்பழக்கம் மக்களிடையே பன்னெடு காலமாக வேரூன்றி யிருந்ததால் மீண்டும் குடிக்க வேண்டுமென்ற உணர்ச்சி அவர்களிடையே தோன்றியது. அவர்கள் திருட்டுத்தனமாகக் குடிக்க ஆரம்பித்தார்கள். மது விலக்குச் சட்டம் தோல்வியுற்றது. இது தோல்வியுற்றதற்கு அமெரிக்க மகாஜனங்களின் சமூக வாழ்வே முக்கிய தடைக்கல்லாக விருந்தது. அந்தத்தேசத்தில் குடிப்பதற்கு மத பூர்வமான ஆட்சேபனை எதுவும் கிடையாது. வாழ்வின் சொகுசிலோ குடி ஒரு முக்கிய அங்கமாக விளங்கியது. எனவே சட்ட பூர்வமாக அது தடுக்கப்பட்டிருந்தது கண்டு ஜனங்கள் எரிச்சல் கொண்டனர். சட்டத்தை மீறுவது ரொம்பவும் சகஜமாகி விட்டது; அடக்க முடியாத அளவிற்குத் திருட்டுத்தனமாகச் சாராயம் தயாரிப்பதும், விற்பதும்

முற்றி விட்டது. குடி பெருகியது; அத்துடன் குற்றங்களும் வளர்ந்தன. இங்ஙனமாக மது விலக்கு எதிர்பார்த்த பலனைத் தராதது மட்டுமன்றி குற்றங்களைத் தடுப்பதற்காகப் பிரத்யேக பாதுகாப்புப்படை ஒன்றை வைத்துச் சமாளிக்க அதிகச் செலவில் கொண்டு போய் விட்டது.

சட்டத்தின் பயனின்மையை நாட்டுத் தலைவர்கள் அறிந்தனர். மது விலக்கைப் பூரணமாக ஆதரித்தவர்களும், அது வேண்டுமென்று முதலில் பெருத்த கிளர்ச்சி புரிந்தவர்களும் இப்பால் வால்ஸ்டெட் சட்டத்தை ரத்துசெய்து குடியை யொழிப்பதா வேண்டாமா என்னும் விஷயத்தை முடிவு செய்யும் உரிமையை அந்தந்த மாகாணத்திற்கு விட்டுவிட வேண்டுமென்று கூச்சலிட்டனர்.

மது விலக்கிற்கு எதிரான கிளர்ச்சி மிகவும் வலுத்து விட்டதால் 1933-ம் வருஷம், டிஸம்பர் மாதம் 5-ந் தேதியன்று அரசியலின் 21-வது திருத்தம் காரணமாக 1919-ம் வருஷத்திய மது விலக்குத் திருத்தம் ரத்து செய்யப்பட்டது.

எது எப்படியாயினும் அமெரிக்காவின் அனுபவம் மற்றெல்லாத் தேசங்களுக்கும் சிறந்த வழி காட்டியாக விளங்கியது. பொது மக்களின் ஆதரவு மட்டும் பூரணமாக விருந்தால் மது விலக்கு கண்டிப்பாக வெற்றி பெறும்; அந்த ஆதரவு இல்லையேல் அது தோல்வியுறும்; இதுவே அமெரிக்கா உலகிற்குப் போதித்த படிப்பினை.

குடும்ப வரவு செலவுக் கணக்குகள், வியாபாரப் புள்ளிகள், வர்த்தக சபைகளின் யாதாஸ்துகள் இவற்றைக் கொண்டு ஆராய்ச்சி செய்ததில் மது விலக்கினால் மக்களின் பொருளாதார வாழ்வில் அபிவிருத்தி ஏற்பட்ட

தென்பது பெரும்பாலோரால் ஒப்புக்கொள்ளப்பட்டது. 1920-ம் வருஷத்தில் பிரஸிடெண்டு தேர்தல் நடந்த காலத்தில் **பிரஸிடேண்டு வில்ஸன்,** மதுவிலக்கைச் சிறந்த வெற்றியாகக் கொண்டாடி அதனால் ஏழைகளுக்கும், தொழிலாளிகளுக்கும் மகத்தான அனுகூலங்கள் கிட்டிய தாக அறிவித்தார். மதுவிலக்கு காரணமாக ஏழைகளின் பணம் அதிகமாக சேவிங்ஸ் பாங்கிகளில் சேர்ந்ததாகவும் அவர் கூறினார்.

மது விலக்கைப்பற்றிச் சவிஸ்தாரமான ஆராய்ச்சியை நடத்திய **ஹர்மன் பேல்ட்மன்** என்பவர் முன்பு கூலியை வாங்கி கள்ளுக் கடையில் கொண்டுபோய் நாசமாக்கி வந்தவர்கள் மது விலக்கு காரணமாக பணத்தை வீட்டிற்குக் கொண்டுவந்து வாழ்வின் சுகங்களை அனுபவிக்கலாயினர் என்றும், கள்ளுண்ணுமல் வீடு திரும்பியவர் தாங்களும் சந்தோஷத்துடன் வாழ்ந்து, குடும்பத்தினருக்கும் சந்துஷ்டி யளித்து, குழந்தைகளையும் மகிழ்வுடன் வைத்திருந்தனர் என்றும் அபிப்பிராயம் தெரிவித்தார்.

மதுவிலக்கு சந்தேகமற வெற்றிபெற்றது என 1925-ம் வருஷத்தில் **பிரசிடேண்ட் கூலிட்ஜ்** கூறினர். குடும்பங்களின் சுபிட்சத்தை வளர்த்ததுமன்றி மது விலக்கு குடும்பச் சச்சரவுகளை யெல்லாம் ஒழித்தது என ஒக்லஹாமா மேயர் அபிப்பிராயப்பட்டார்.

**துருக்கி** தேசமும் 1924-ம் வருஷம் வரையில் சில வருஷங்களுக்கு மது விலக்கை முயற்சித்தது. பிறகு சர்க்காரின் ஏகபோக பாத்தியதையின் சார்பில் இச்சீர்திருத்தம் கைவிடப்பட்டது.

இந்தியாவில் **பவநகர்** சமஸ்தானத்தில் மதுவிலக்கு வெற்றிகரமாக வேலை செய்து வருகிறது. தென்னை,

ஈச்சை இவற்றிலிருந்து எடுக்கப்படும் புளித்த கள்ளே இந்தச் சமஸ்தானத்தில் உபயோகத்திலில்லை. கலால் வருமானத்தின் பெரும் பகுதி நாட்டுச் சாராயங்கள் மூலமாகவும், வெளி நாடுகளிலிருந்து இறக்குமதியான சாராய வகைககளிலிருந்தும் கிடைத்து வந்தது. போதையூட்டும் மது வகைகளின் தயாரிப்பு, உடைமை, விற்பனை இவற்றின் மீது 1921-ம் வருஷத்தில் தடை விதிக்கப்பட்டது. சில வருஷங்களுக்குப் பிறகு வெளி நாட்டு இறக்குமதிகளும் தடுக்கப்பட்டன.

"ஹரிஜன்" பத்திரிகையில சமீபத்தில் வெளியான கட்டுரையொன்றில் பவநகரின் மது விலக்குத் திட்டத்தைப்பற்றிப் பிரஸ்தாபிக்கப்பட்டிருந்தது. மது விலக்கால் அங்கு குற்றங்கள் குறைந்து விட்டனவென்றும், ஏழைகளின் பொருளாதார நிலைமையில் அபிவிருத்தி ஏற்பட்டிருக்கிறதென்றும் பவநகர் சர்க்கார் யாதாஸ்து ஒன்றில் காணப்படுவதாக மேற்படி கட்டுரையில் குறிப்பிடப்பட்டிருந்தது.

---

## 10. இந்தியாவில் முயற்சி

*மது வகைகளை மிதமாகக் குடிப்பவர்களின் வழக்கத்தில் தலையிட இந்திய சர்க்காருக்கு எவ்வித விருப்பமுமில்லை......குடிப்பதற்கான தூண்டுதலைக் குறைப்பதும், அதீதமாகக் குடிப்பதைத் தடுப்பதுமே சர்க்காரின் திட்டமான கொள்கை. இக்கொள்கையை நிறைவேற்றி வைக்கும் வகையில் வருமானத்தைப் பற்றிய விஷயங்களுக்கு முக்கிய ஸ்தானமளிப்பது கூடாது.*

கலால் கொள்கையைப்பற்றி
இந்திய சர்க்கார்—1906ஞு

மது பான வியாபாரத்தைக் கட்டுப்படுத்துவதற்காக இந்தியாவின் பல பாகங்களில், பல் வேறு சமயங்களில் பல் வகையான முறைகள் கையாளப்பட்டு வந்திருக்கின்றன. தேசம் பல்வேறு ராஜ்ஜியங்களாகப் பிரிந்து கிடந்ததால் ஒரே ரீதியான முறையை அனுஷ்டிக்க முடியாமலிருந்தது. மதுவகைகள் மீது வரி போடப்பட்டது; வங்காளத்தில் 1790-ம் வருஷம் வரையில் ஜமீன்தார்கள் இவ்வரியை வசூலித்து வந்தனர். ஆனால் ஜமீன்தார்கள் மிதக் குடியில் சிரத்தை கொள்ளவில்லை. லாபத்திலேயே அவர்கள் திருஷ்டியுடையவர்களாக இருந்தனர். இதனால் குடி பெருகியதே யொழிய குறையவில்லை. குடி பெருகுவதையே ஜமீன்தார்கள் விரும்பினர்.

பிரிட்டிஷார் இந்திய நிர்வாகத்தை ஏற்றுக்கொள்ளுகையில் மதுவகைகளைத் தயாரித்து விற்கும் உரிமை யார் அதிகமாக ஏலம் கோருகிறார்களோ அவர்களுக்கு விடப்பட்டு வந்தது. கடைகளும் குறைக்கப்படவில்லை; கடை

கள் அமையும் இடமும் கட்டுப் படுத்தப்படவில்லை. எந்நேரத்திலும் என்ன விலைக்கும் மது வகைகள் விற்கப் பட்டு வந்தன.

**பர்மா**வில் சுதேச அரசர்கள் மது வகைகளைத் தடுத்திருந்தனர். ஆனால் பிரிட்டிஷ் ஆட்சிக்குப் பிறகு ஐரோப்பியர்கள், இந்தியர்கள், சீனக்காரர்கள் இவர் களின் அனுகூலத்திற்காக இவ்வியாபாரத்திற்கு லைசென்ஸ் கொடுக்கப்பட்டது. மது வகைகளை விலை கொடுத்து வாங்க பர்மியர்களுக்கு உரிமை கிடையாது; சட்டத்தைப் பலர் புறக்கணித்து வந்தனர். சில வருஷங்களுக்குப் பிறகு விதிகளில் மாறுதல் செய்யப்பட்டது; பல் வேறு வகையான கட்டுப்பாடு முறைகளும் ஏற்கப்பட்டன.

பிரிட்டிஷ் நிர்வாக முறை ஆரம்பித்ததிலிருந்து அனு பவத்தை யொட்டிப் பல் வேறு மாகாணங்களின் அனுஷ் டான முறையிலும் அபிவிருத்தி செய்யப்பட்டது. ஆனால் பிராந்தியத்திற்குப் பிராந்தியம் நிலைமையில் மாறுபட் டிருந்ததால் ஒரே ரீதியான முறையை அனுஷ்டிக்க முடிய வில்லை.

**மத்தியஸ்தல தயாரிப்பு முறை, இலவச சப்ளை முறை, ஏகபோக சப்ளை முறை, உத்தரவாதத்துடன் கூடிய குறைந்தபட்ச முறை, திருத்தி யமைக்கப்பட்ட தயாரிப்பும் முறை, கண்டிராக்டு முறை** இவைதான் பரீட்சிக்கப்பட்ட முறைகளில் முக்கியமானவை.

மத்தியஸ்தல தயாரிப்பு முறையின்படி மது வகை களைத் தயாரிக்கும் இயந்திரங்கள் சர்க்காரிடமும் அவசியமான அனுமதிச் சீட்டுகளைப் பெற்றுள்ளவரிட மும் இருந்து வந்தன. சர்க்கார் மேற்பார்வையில் மது வகைகள் தயாரிக்கப்பட்டு வந்தன. தயாரிக்கப்பட்ட அள வின் பேரில் யூனிட் ஒன்றுக்கு இவ்வளவென சர்க்காருக்

குத் தொகை செலுத்தப்பட்டது. இயந்திரத்திற்காக வாடகையும் கட்டப்பட்டது. தயாரிப்பு உரிமையும் விற்பனை உரிமையும் பிரிக்கப்பட்டிருந்தது. மதுபானக்கடை ஒவ்வொன்றிற்கும் லைசென்ஸ் கட்டணம் விதிக்கப்பட்டது. கடைகளின் தொகையும் வரையறுக்கப்பட்டது.

இலவச சப்ளைத் திட்டத்தின் கீழ் மதுவகைகளைத் தயாரிப்பவர்களுக்கு இயந்திரங்களை அவர்களே வைத்துக்கொள்ள அனுமதி கொடுக்கப்பட்டது. ஆனால் இவர்கள் சர்க்காருக்குக் குறிப்பிட்ட கட்டணத்தைச் செலுத்தி அவர்களது மேற்பார்வையிலேயே மதுவகைகளைத் தயாரிக்க வேண்டும். இம் முறைப்படி லைசென்ஸ் பெற்ற கடைக்காரர் ஒருவர் மது வகைகளைத் தயாரிக்கும் எவரிடமிருந்தும் சரக்கைப்பெறலாம்; குறிப்பிட்ட ஒரு தயாரிப்பு ஸ்தலத்திலிருந்து தான் வாங்கிக்கொள்ள வேண்டுமென்ற நிர்ப்பந்தமில்லை.

மூன்றாவது முறைப் பிரகாரம் ஒரு குறிப்பிட்ட பிராந்தியத்தில் மது வகைகளைத் தயாரிக்கும் உரிமை ஒரு நபருக்கு ஏகபோகமாக அளிக்கப்பட்டது. தயாரிப்பு உரிமைக்கும் விற்பனை உரிமைக்கும் எவ்வித சம்பந்தமும் கிடையாது. விற்பனைக்காரருக்கு இன்ன விகிதத்தின் பேரில் சரக்கு சப்ளை செய்யவேண்டுமென்பது நிர்ணயிக்கப்பட்டு விட்டது. உயர்ந்த டெண்டர் கொடுப்பவர்களுக்கே இந்த உரிமை அளிக்கப்பட்டது.

அடுத்த முறையின் விவரம் என்னவென்றால் தயாரிப்பு உரிமையும், விற்பனை உரிமையும் ஒன்றாக ஏலத்தில் விடப்பட்டதே. கடைகளின் தொகை வரையறுக்கப்பட்டது; விலைகளும் குறிக்கப்பட்டு விட்டன. ஒவ்வொரு காலன் மது வகைக்கும் இவ்வளவென வரி வசூலிக்கப்பட்டது. டெண்டர்கள் கோரப்பட்டன; எவருடைய

டெண்டர் தெரிந்தெடுக்கப்பட்டதோ அவர் குறைந்த பட்ச அளவிற்கான வரியைச் செலுத்தி விடுவார். இந்த அளவிற்கு அதிகமாகப் போனால் அதிகமாகும் ஒவ்வொரு காலனுக்கும் அவர் வரி செலுத்தி விடுவார்.

மத்தியஸ்தல தயாரிப்புமுறை திருத்தி யமைக்கப்பட்டதால் இதற்குத் திருத்தி யமைக்கப்பட்ட தயாரிப்புமுறை எனப் பெயர் ஏற்பட்டது. இதன் பிரகாரம் தயாரிப்பு, விற்பனை இரண்டின் சம்பந்தமான ஏகபோக உரிமையும் ஒருவருக்கே அளிக்கப்பட்டது. இவர் குறைந்த பட்ச காலன்களின் எண்ணிக்கையின் பேரில் உத்தரவாதமான தொகையை செலுத்துவதற்குப் பதிலாக ஒவ்வொரு காலனுக்கும் இவ்வளவு என்று வரி செலுத்தியது தவிர மொத்தமாகவும் தொகையைச் செலுத்தி விடுவார்.

ஒப்பந்த முறைப்படி தயாரிக்கும் கருவியை வைத்துக்கொள்ள அதிகாரம் பெற்ற ஒருவர் அனுமதிக்கப்பட்டார். தயாரிப்பு உரிமையும் விற்பனை உரிமையும் வேறு படுத்தப்பட்டிருந்தன.

இன்னொரு முறையும் ஒன்றுண்டு. இதன் வண்ணம் தயாரிப்புக் கருவியை வைத்துக் கொள்ளப் பலர் அனுமதிக்கப்பட்டனர். ஒவ்வொரு தயாரிபபு ஸ்தலத்துடனும் ஒன்றோ அல்லது அதற்கதிகமான கடைகளோ ஏற்பட்டன. இதனால் தயாரிப்பு ஸ்தலங்களும் அதிகரித்தன; குடியும் பெருகிற்று.

இவ்வளவு வகையான முறைகளை அனுஷ்டித்தும் பலன் என்னவென்றால் குடி விசேஷமாகக் குறையவே இல்லை. 1870-ம் வருஷத்தில் இந்திய சர்க்கார் மாகாண சர்க்கார்களுக்கு ஒரு சுற்றறிக்கை விடுத்து மது வியாபாரத்தைக் கட்டுப்படுத்தவும், குடியைக் குறைக்கப் பத்திரத் தன்மையும் திட்டமும் வாய்ந்த வழிகளைக் கையாள

வும் வேண்டிய அவசியத்தை வற்புறுத்தினர். அப்படியும் இந்தத் தீமை விருத்தியிலேயே யிருந்தது. இதன் கொடுமையைச் சகிக்க முடியாமல் **ஸ்ரீ கேசவ சந்திர சேனர்**

> "போதையூட்டும் வஸ்துக்கள் என் நாட்டு மக்களின் தேக, ஆத்மார்த்த, சமூக அந்தஸ்தைக் குலைத்து விட்டன. சீர்திருத்த வழியில் தடையாக இருப்பவை இவை தான்."

என்று 1874 ம் வருஷத்தில் அரற்றினர்.

1887-ம் வருஷத்தில் இந்திய சர்க்கார் இந்திய மந்திரிக்கு அனுப்பிய கடிதத்தில் அதற்கு முன் சில வருஷங்களில் வங்காள, பம்பாய், சென்னைச் சர்க்கார்கள் தங்கள் மதுக்கட்டுப்பாடு முறையைத் திருத்தியமைத்திருக்கின்றன ரென்றும், குடியைக் குறைக்கும் கருத்துடனேயே இங்ஙனம் செய்யப்பட்டிருக்கிறதென்றும் குறிப்பிட்டனர். குடி வரி உயர்த்தப்பட்டதால் வருமானமும் உயர்ந்திருந்தது. 1855—56-ம் வருஷத்தில் மொத்த வருமானம் 22½ லட்சம் ரூபாயாக விருந்தது; 1869-70-ம் வருஷத்தில் இது 61 லட்சமாகி 1884-85-ல் 70 லட்சத்திற்கும் அதிகமாக உயர்ந்து விட்டது. இதிலிருந்து குடி அதிகமாக வியாபித்து விட்டதாக முடிவு செய்யக் கூடாது.

இங்கிலாந்திலுள்ளதைப் போன்ற குடி வெறி இந்தியாவில் கிடையாதென்று சர்க்கார் உறுதியாக எடுத்துரைத்தனர்.

---

# 11. பார்லிமெண்டில் விவாதம்

இந்தியாவில் அனுஷ்டிக்கப்படும் கலால் விதிகள்—சிறந்தவையும் சரி கேவலமானவையும் சரி—குடிப்பதற்கான வசதிகளைப் பெருக்கவே செய்கின்றன; அதன் பலன் என்னவென்றால் குடி பெருகுகிறது; குடியுடன் அதன் விளைவுகளான தீமைகளும் பெருகுகின்றன.

—மிஸ்டர் டபிள்யூ. கேயின்
(பார்லிமெண்டு சபை அங்கத்தினர்)

1889-ம் வருஷம் ஏப்ரல் மாதம் இந்தியக் கலால் நிர்வாகத்தின் சரித்திரத்தில் மிகவும் முக்கியமானதாகும். மதுபான வியாபாரத்தின் நிலைமையைப்பற்றியும் அதனால் ஜனங்களுக்கேற்படும் விளைவுகளைப்பற்றியும் பார்லிமெண்டு சபையில் பலமாக விவாதிக்கப்பட்டது. இவ் விவாதத்தில் கலந்துகொண்டவர்களில் பலர் இந்தியாவில் அனுபவம் பெற்றவர்கள்; இந்திய மக்களின் நிலைமையை ஆராய்ந்தறிந்தவர்கள். இந்நாட்டு மக்களின் ஆரோக்கிய வாழ்விலும், ஆத்மீக உயர்விலும் பார்லிமெண்டு மெம்பர்களில் சிலருக்கு எவ்வளவு அதிகமான சிரத்தையிருந்த தென்பது இவ்விவாதத்தினின்றும் நன்கு வெளிப்படுகிறது.

"இந்திய சர்க்காரின் கலால் கொள்கை பொது மக்களின் கருத்திற்கு விரோதமாக முன்பு இல்லாத இடங்களில் கூட புதிது புதிதாக மதுபானக் கடைகள் ஏற்படுவதற்கு இடமளிக்கிறது; இங்ஙனமாக குடிப்பதற்கான வசதிகளைப பெருக்குவதால் குடி மென்மேலும் வளர்ந்து இந்தியத் தொழிலாளரின் வாழ்வைப் பாழ்படுத்தி வருகிறது; இதைக் குறைக்கும் வழியில் இந்திய

சாக்கார் உடனே நடவடிக்கை எடுக்க வேண்டுமென்று இச்சபை அபிப்பிராயப்படுகிறது''

என்ற தீர்மானத்தை பிளிண்ட்ஷயர் அங்கத்தினரான திரு **சாம்யூல் ஸ்மித்** பிரேரித்தார்.

இந்தியக் கலால் நிர்வாக அனுபவம் பெற்ற உத்தியோகஸ்தரான திரு. **சி. எஸ். மேட்காப்** என்பவர் கள்ளு சாராயம் முதலியவை மலிவாக விற்கப்படுவதால் தான் குடிப்பது அதிகரித்திருப்பதாக அபிப்பிராயப்பட்டார். "சாப்பாடு சாப்பிடுவது போலவே தொழிலாளிகள் மது பானத்தை அருந்தினார்கள். சண்டை சச்சரவுகளுக்கோ குறைவே கிடையாது'' என்று மிஸ்டர் மெட்காப் கடுமையாகப் புகார் செய்தார்.

இந்தக் கண்டனம் வங்காளத்தை மனதில்கொண்டே முக்கியமாக விடுக்கப்பட்டது. பத்து வருஷ காலத்திற்குள் குடி 135 சத விகிதத்திற்கு உயர்ந்து விட்டதென 1883-84-ம் வருஷத்தில் நிலைமையைப் பரிசீலனை செய்த சர்க்கார் கமிஷன் ஒன்று அறிவித்தது.

1887-ம் வருஷத்திய இந்திய சர்க்கார் அறிக்கையே தமது தீர்மானத்தின் நியாயத்தை எடுத்துக் காட்டுகிறதென **ஸ்மித்** வாதித்தார். அக்காலத்தில் அனுஷ்டானத்தி லிருந்த கொள்கையைத் தாங்கிப் பேசுவதாக இருக்கிறது இந்திய சர்க்கார் அறிக்கை என அவர் எடுத்துக் காட்டினார். மேற்படி கொள்கையை அவர் பலமாகக் கண்டித்தார். இந்தியாவின் சீதோஷ்ண நிலைமை, மக்களின் தேக அமைப்பு இவை காரணமாக மது தினுசுகள் விஷமாக இருக்கின்றன வென்றும், சிறிது காலத்திற்கு மித மிஞ்சி குடித்தால் கூட அவை ஜனங்களைக் கொன்று விடுகின்றன வென்றும் அவர் கூறினார். தரித்

திரத்தில் ஆழ்ந்து கிடக்கும் இந்தியமக்கள் தினசரி குடிக்காக ஒரு அணு செலவழிப்பதால் அவர்கள் சோறின்றிப் பட்டினி கிடக்கவே நேரிடுகிற தென்றும் அவர் குறிப்பிட்டார்.

"குடி மூலமாக 5 லட்சம் பவுன்கள் வருமானமாகக் கிடைப்பது கண்டு இந்திய அதிகாரிகள் சுத்தக் கண்மூடிகளாக இருக்கிறார்கள்" என்று அவர் சொன்னார். இந்த வருமானத்தை எவ்வளவு தூரத்திற்கு முடியுமோ அவ்வளவு தூரத்திற்குப் பெருக்கவே அதிகாரிகள் முனைந்திருக்கிறார்கள் என்றும் அவர் கூறினார்.

1889-ம் வருஷத்தில் இந்த அங்கத்தினர் வெளியிட்ட கருத்துக்கள் இந்தியாவைச் சேர்ந்த தீவிர அரசியல் வாதிகள், தீவிர மதுவிலக்குக்காரர்கள் இவர்களின் கருத்துக்களை விடமிகக் கடுமையானவையாக இருந்தன. "குடியினால் ஏற்படும் பாழுக்கு முன்னால் யுத்தங்களினாலும், தொத்துநோய்களினாலும், ஏற்படும் பாழ்கள் எம்மாத்திரம்? இந்தப் பாழை நிறுத்தவே நான் முயல்கிறேன்" என்றார் திரு சாம்யூல் ஸ்மித்.

> "ஊதாரிகளாகப் பணத்தைச் செலவிடுவ தாலேயே இந்திய சர்க்கார் துன்மார்க்க மூலமான வருமானங்களை அதிகமாக எதிர்பார்த்து நிற்க வேண்டி யிருக்கிறது; ஆகவே சீன தேசத்தினரை எப்படி நாம் அபினியைக் கொடுத்து விஷப்படுத்தினோமோ அதே மாதிரி இப்பொழுது இந்திய சுதேசிகளுக்குக் குடி மூலமாக விஷமூட்டி வருகிறோம். இந்திய வருமானம் சன்மார்க்க நெறியில், இந்தியாவின் நன்மைகளுக்குகந்த வகையில் வசூலிக்கப்பட வேண்டு மென நாம் வற்புறுத்த வேண்டும்"

என்று அவர் செப்பினார்.

**திரு டபிள்யூ கேய்ன்** என்பார் தீர்மானத்தை ஆமோதித்தார். இவரும் இந்திய சர்க்கார் கொள்கையின் கேவலப் போக்கை விரித்துரைத்து "இந்தியாவில் அனுஷ்டிக்கப்படும் கலால் விதிகள்—சிறந்தவையும் சரி கேவலமானவையும் சரி-குடிப்ப தற்கான வசதிகளைப் பெருக்கவே செய்கின்றன; இதன் பலன் என்னவென்ருல் குடி பெருகுகிறது; குடியுடன் அதன் விளைவுகளான பல தீமைகளும் பெருகுகின்றன" என்று கூறினர்.

நாகரிக உலகில் எங்குமே இந்தியக் கலால் நிர்வாகத்தைப் போன்ற கேவலமான நிர்வாகம் கிடையாதென்றும், அதிலும் வங்காளத்தில் அனுஷ்டிக்கப்படும் முறை யாவற்றிலும் மிகக் கேவலமானதென்றும் இன்னொரு மெம்பர் கருதினர்.

**திரு ஸ்மித்** வெறும் உணர்ச்சிப் பெருக்கினல் பேசினரே யொழிய, அவரது கண்டனத்திற்கு ஆதாரமாக எத்தகைய புள்ளி விவரங்களையும் எடுத்துக் காட்டவில்லையென்று வேறு சில அங்கத்தினர்கள் பகன்றனர். **ஸர். ரோப்பர் கெத்பிரிட்ஜ்** என்பவர் **திரு ஸ்மித்தின்** அபிப்பிராயங்களை மிகைபடக் கூறப்பட்டவை என்ருர். ஆனல் சர்க்காரின் கொள்கை குடியை விருத்தி செய்ய முயல்கிற தென்பதையும், கண்டிப்பான முறைகளைக் கையாளுவதற்கு மிகுந்த அவசிய மிருக்கிற தென்பதையும் இவர் ஒப்புக் கொண்டார். குடிப்பதை இந்தியச் சமூகம் பாவமாகக் கருதுவதால் பூரண மதுவிலக்கு போன்ற தீவிர முறையை அனுஷ்டித்தால் கூட ஜனங்களின் ஆதரவு அதற்குக் கிடைக்குமென அவர் அபிப்பிராயப்பட்டார். ஆனல் வருமானப் பிரச்னை மிகவும் முக்கியமான அம்சமென்றும், ஜனங்களின் வரிச் சுமையை அதிகப்

படுத்துவதற்காக பார்லிமெண்டு எதாவது செய்தால் அது நியாயமாகாதென்பதை அவர் ஏற்றுக்கொண்டார்.

**திரு. வால்டர் எம். லாரன்** அந்தந்த ஸ்தல இஷ்டத்தைப் பொறுத்து நடை முறைகள் எடுப்பதை ஆதரித்தார். இதைச் சரிவர நிறைவேற்றினுல் இந்தியக் குடிப் பிரச்னையைத் தீர்த்துவைப்பது சாத்தியமாகுமென அவர் நம்பினுர். ஆனுல் இவ்விஷயத்தில் பலமான அபிப்பிராய பேதமிருந்தது.

இந்தியாவின் உதவி மந்திரியான **ஸர் ஜே. கார்ஸேட்** குடியைக் கட்டுப்படுத்துவதே சர்க்காரின் கொள்கையென்று எடுத்துரைத்தார். ஒவ்வொரு மாகாணமும் தனித்தனி முறையில் கலால் நிர்வாகத்தை நடத்திவருகின்றனவென்றும், ஆதலால் தான் பலவிதமான முறைகள் இருந்துவருகின்றன வென்றும் அவர் கூறி, மாறுதல்களைச் செய்வதற்கு அவசியமிருக்கலாமென்றும், எனினும் குடிப்பது குறைந்திருப்பதைச் சபை ஞாபகத்தில் வைத்துக் கொள்ள வேண்டுமென்றும் அவர் கோரினுர். வருமானத்தைப் பெருக்குவதிலேயே அதிகாரிகள் திருஷ்டியுடையவர்களாக இருக்கிருர்கள் என்ற புகாரை அவர் நிராகரித்தார்.

இப்பிரச்னையைக் குறித்துப் பார்லிமெண்டு அங்கத்தினர்களிடையே எவ்வளவு வலுவான அபிப்பிராயமிருந்த தென்பது ஓட்டு விவரத்திலிருந்து நன்கு தெரிகிறது. **தீர்மானம் மூன்று அதிகப்படியான ஓட்டுகளால் நிறைவேறியது.** 113 **பேர்கள் தீர்மானத்திற்கு சாதகமாகவும்** 110 **பேர்கள் எதிராகவும் ஓட்டு செய்தனர்.**

---

## 12. குடியை மட்டுப்படுத்துதல்

*மதுவகைகளின் அதீதமான உபயோகத்திற்கு எதிராகப் பொது ஜன அபிப்பிராயத்தை வலுப்படுத்தியதற்குப் பிறகு தான் அவற்றின் வினியோகத்தைத் தடுக்கத் தைர்யமாக தீவிர முறைகளைக் கையாளலாம்.*

—சென்னை கலால் யாதாஸ்து (1928—29)

**பா**ர்லிமெண்டு விவாதத்தில் இந்திய அறிஞர்கள் கவனம் செலுத்தலாயினர். தங்கள் மீது கூறப்பட்ட புகார்களைச் சர்க்கார் மறுதளித்தனர். தங்கள் கொள்கை சரியானது தான் என அவர்கள் வாதித்தனர். வங்காள முறை மோசமாக விருப்பதைக்கொண்டு பூரா தேசத்தின் கலால் நிர்வாகத்தையே கண்டிப்பது நேர்மையாகாதென அவர்கள் கூறினர்.

இந்திய சர்க்கார் 1890-ம் வருஷம் பிப்ரவரி மாதம் இன்னொரு அறிக்கையை விடுத்தனர். 'இந்தியாவின் பல பாகங்களிலும் திருட்டுத்தனமான தயாரிப்பு நடைபெறுகிறதென்றும், இது மிகவும் சுலபமாக நடக்கிறதென்றும், இதைக் கண்டு பிடிப்பது கஷ்டமாக விருக்கிறதென்றும் அவர்கள் அதில் குறிப்பிட்டனர். இதனுல் தான் அதிக வரி போட்டு மது வகைகளின் விலைகளை உயர்த்த முடியாமலிருக்கிறதென்றும் அவர்கள் எடுத்துரைத்தனர். வெளி நாட்டுச் சரக்குகளின் மீது விதிக்கப்படும் வரியை 66 சத விகிதத்திற்கு உயர்த்தியும் குடி 142 சத விகிதத்திற்கு அதிகரித்திருந்தது. இந்த அதிகரிப்புக்கு ஜனங்களின் சுபிட்சமும் சிறிது காரணமாக இருந்தது. குடியைப் பெருக்குவதில் சர்க்கார் சிரத்தை கொண்டிருக்கின்றனர் என்ற கூற்றுக்கு சென்னை மாகாணத்தைப் பற்றிய

வரையிலாவது துளி கூட ஆதாரமில்லையென நிர்வாகத் திறமைக்குப் பிரசித்தி பெற்றவரான திவான் பகதூர் எஸ். ஸ்ரீனிவாஸ ராகவய்யங்கார் 1893-ம் வருஷத்தில் கூறினார்.

இந்தியாவில் மதுவிலக்கு சாத்தியமானதல்லவென்றும், ஸ்தல இஷ்டத்தை அனுஷ்டிப்பது அனுபவ சாத்திய மற்றதென்றும் இந்திய சர்க்கார் தங்கள் அறிக்கையில் குறிப்பிட்டனர். பல திட்டங்களை ஆலோசித்த பிறகு அவர்கள் தங்கள் கொள்கையைக் கீழ்க்கண்டவாறு விளக்கினர் :

போதையூட்டும் சரக்குகளின் மீது சாத்தியமான வரையில் அதிகப்படியாக வரி விதிக்கவேண்டும் : வியாபாரத்தைச் சில கட்டுப்பாடுகளுக் குட்படுத்தவேண்டும் ; குடிப் பழக்கத்தை விட்டொழிக்கும்படி ஜனங்களைத் தூண்ட வேண்டும். கடைகளின் தொகையைக் கண்டிப்பாக வரையறுத்துவிடவேண்டும் : அந்தந்த ஸ்தலத்தில் வசிக்கும் ஜனங்களின் அபிப்பியாயங்களைக் கண்டறியவும் அவற்றை மதித்து நடக்கவும் முயற்சி செய்யவேண்டும்.''

இவ்விஷயங்களிலிருந்து சர்க்கார் குடியைக் குறைக்க உத்தேசித்தனரேயன்றி அதை அடியோடு ஒழிக்க உத்தேசிக்கவில்லை என்பது புலனாகிறது. 1918ம் வருஷத்தில் முதல் தடவையாக ஏகாதிபத்திய சட்டசபை மதுவிலக்கில் சிரத்தை காட்டியது. கலால் கொள்கையின் நோக்கம் பூரண மதுவிலக்கை ஏற்படுத்துவதுதான் என்று சர்க்கார் அறிவிக்க வேண்டுமென்றும், அந்த லட்சியத்தை ஈடேற்றும் வகையில் கவனம் செலுத்த வேண்டுமென்றும் கவர்னர் ஜெனரலுக்குச் சிபார்சு செய்வதாக அவ்வருஷம் பிப்ரவரி மாதம் 20-ந்தேதி கனம் பி. என். சர்மா தீர்மான மொன்றைப் பிரேரித்தார்.

இத் தீர்மானத்திற்குப் பதிலளிக்கையில் மிதமாகக் குடிப்பதையே வழக்கமாக வைத்துக் கொண்டிருப்பவர் விஷயத்தில் தலையிடத் தாங்கள் விரும்ப வில்லை யெனச் சர்க்கார் தெரிவித்தனர். இங்ஙனம் தலையிடுவது சர்க்காரின் கடமைக்குப் புறம்பானதென்றும், மேற்படி மிதமாகக் குடிப்பவர்களுக்குத் தேவையான சௌகர்யங்களைத் தேடித் தருவதே சர்க்காரின் கடமை யென்றும் அவர்கள் கருதினர். குடிக்காதவர்களுக்குத் தூண்டுதல்களைக் குறைப்பதும், குடிப்பவர்கள் மிதமிஞ்சிக் குடிப்பதைத் தடுப்பதுமே தங்கள் திடமான கொள்கையென அவர்கள் உறுதி கொண்டனர்; இக் கொள்கையை நிறைவேற்றி வைக்கும் வகையில் வருமானத்தைப் பிரமாதமாக நினைக்கக் கூடாதென்பதைச் சர்க்கார் ஒப்புக் கொண்டனர்.

சட்ட சபையில் உத்தியோகமுறை அங்கத்தினர்கள் அதிகமாக இருந்ததால் **கனம் சர்மாவின் தீர்மானம் தோல்வியுற்றது.** ஆனல் ஓட்டுகளைக் கணக்கிட்டதில் தெரிந்தெடுக்கப்பட்ட அங்கத்தினர்கள் அனைவரும் மது விலக்கை ஏகமுகமாக ஆதரித்தது காணப்பட்டது.

கால ரீதியில் அபிவிருத்தியடைந்த சென்னைக் கலால் முறைதான் யாவற்றிலும் சிறந்ததெனப் போற்றப் பட்டது; இதன் அம்சங்களில் சிலவற்றை இதர மாகாணங்கள் பின்பற்றின.

மதுவகைகளுக்கு வரி இருந்ததேயொழிய அவைகள் எவ்விதத் தடையுமில்லாமல் தயாரித்து விற்பனை செய்யப்பட்டு வந்ததை 1807-ம் வருஷம் **ஸர். தாமஸ் மன்ரோ** கண்டார். மதுவகைகளின் தயாரிப்பும், விற்பனையும் கண்டிராக்டர்களுக்கு விடப்பட்டு வந்தது. சில வருஷங்களில் வியாபாரத்தைக் கட்டுப்படுத்த விதிகள் தயாரிக்கப்பட்

டன. எனினும் பெருவாரியாக அதே முறைதான் அனுஷ்டானத்தி லிருந்தது. 1864-ம் வருஷத்தில் கலால் சட்டமொன்று இயற்றப்பட்டது. வருஷாந்திரத்தொகை யுடன் திருப்தி யடையாமல் தயாரிக்கப்பட்ட மதுவகை களின் அளவின் பேரில் எதிர் வரி விதிக்கவும் சர்க்கார் அதிகாரம் பெற்றனர். கள்ளத்தனமாகத் தயாரிப்பது தீமையாகக் கருதப்பட்டதால் கள்ளை வீட்டில் புளிக்க வைப்பது (முன்பு அனுமதிக்கப்பட்டது) துஷ்பிரயோ கம் செய்யப்பட மாட்டாதென நிச்சயமாகக் கருதப் பட்ட குறிப்பிட்ட சில இடங்களை தவிர மற்றபடி எல்லா இடங்களிலும் தடுக்கப்பட்டது. இருபது வருஷங்களுக் குப் பிறகு ஒரு தினுசான ஏகபோக பாத்தியதை ஏற் படுத்தப்பட்டது.

கலால் நிர்வாகம் காலரீதியில் மிகவும் முக்கிய ஸ்தா னத்தை யடைந்து விடவே ஆப்காரி கமிஷனர் என்று பிரத்யேக அதிகாரி ஒருவர் அந்த இலாகாவை நிர்வகிப்ப தற்காக 1866-ம் வருஷத்தில் நியமிக்கப்பட்டார்.

ஏகபோக உரிமை நீடித்த காலத்திற்கு அமுலிலிருக்க வில்லை. அதற்குள் இலவச சப்ளை முறை அனுஷ்டானத் திற்கு வந்தது. சென்ற நூற்றாண்டின் கடைசிச் சில வருஷங்களில் மது வகைகளைக் கட்டுப்படுத்த சென்னை யில் விசேஷ முயற்சி செய்யப்பட்டது. வருமானம் அதி கரித்திருந்தது; இந்தியா கவர்ன்மெண்டின் கொள்கைக் கிணங்க குடி வெகுவாகத் தடுக்கப் பட்டிருந்தது. 1905-6-ம் வருஷத்தில் இந்திய சர்க்காரின் கமிட்டி ஒன்று சென்னையிலும், நாட்டின் இதர பாகங்களிலும் அமுலி லிருந்த முறையைப் பரிசீலித்து, அபிவிருத்திக்கான யோசனைகளை எடுத்துரைத்தது.

மரங்களின் வரியை உடனே உயர்த்த வேண்டுமென்றும், கடைகளின் தொகையைக் குறைக்கவேண்டுமென்றும், குறைந்த பட்ச உபயோகம், அதிகப்படியான வருமானம் என்ற கொள்கையைக் கண்டிப்பாகப் பின்பற்ற வேண்டு மென்றும் வற்புறுத்தப்பட்டது. மேற்படி கமிட்டியின் யாதாஸ்தை ஆதாரமாகக்கொண்டு மதுவகைகளின் வரி விகிதங்கள் உயர்த்தப்பட்டன; கடைகளின் தொகை நிதானமாகக் குறைக்கப்பட்டது. 1906-ம் வருஷத்தில் 10,239 சாராயக் கடைகளும், 18,684 கள்ளுக் கடைகளு மிருந்தன; ஆனால் 1919-20-ம் வருஷத்திலோ 6,046 சாராயக்கடைகளும், 10,727 கள்ளுக் கடைகளும் தானிருந்தன. இங்கிலாந்தில் 360 பேர்களுக்கு ஒரு கடை வீதமும், நியூஸிலந்தில் 964 பேர்களுக்கு ஒரு கடைவீதமுமிருக்கையில் இந்தியாவில் 2394 பேர்களுக்கு ஒரு கடை வீதம் இருந்ததாக ஐ. சி. எஸ். வர்க்கத்தைச் சேர்ந்த **ஸ்ரீமான் டி. என். ஸ்டிராத்தி** கணக்கிட்டார். கட்டுப்பாடான முறைகளை அனுஷ்டித்துக் குடியைக் குறைக்கும் கொள்கை இடைவிடாது அனுஷ்டிக்கப்பட்டது. 1917-ம் வருஷத்தில் நியமிக்கப்பட்ட கமிட்டியினர் இந்தக் கொள்கை திருப்திகரமாக வேலை செய்து வருவதாக அபிப்பிராயப்பட்டனர். ஸ்தல ஜனங்களின் அபிப்பிராயத்தை அறிய முயற்சிகள் செய்யப்படவேண்டுமெனகலால் கமிட்டி சிபார்சு செய்திருந்ததால் இவ்வேலையும் மும்முரமாக நடைபெற்றது.

1906-ம் வருஷத்திலிருந்து 1926-ம் வருஷத்திற்குள் அதாவது 20 வருஷ காலத்திற்குள் நாட்டுச் சாராய வகைகளின் வரி 92.9 சத விகிதமும், கள்ளின் வரி 50 சத விகிதமும், பீரின் வரி அதிகப்படியாகவும் உயர்த்தப்பட்டது. விற்பனைக் கட்டணங்களும் உயர்த்தப்பட்டன.

# 13. இரட்டை ஆட்சியில்

1919-ம் வருஷத்திய சீர்திருத்தங்களைச் சிருஷ்டித்தவர்களின் சாமர்த்தியமே சாமர்த்தியம்! இரட்டை ஆட்சியின் பொறுப்பு வாய்ந்ததாகக் கூறப்படும் பகுதியின் மீது பொறுப்பைச் சுமத்துவதற்காக சர்க்கார் கலால் வருமானத்தை அதற்கு மாற்றினர்........ துரதிர்ஷ்டம் பிடித்த மந்திரி அந்த வருமானத்தையொழிப்பாரானால் அவர் கல்வி இலாகாவைப் பட்டினி போட வேண்டியதுதான்; ஏனெனில் அவருக்கு வேறு வழி கிடையாது.

—மகாத்மா காந்தி.

**மா**ண்டேகு-செம்ஸ்போர்டு சீர்திருத்த சகாப்தத்தில் மதுவிலக்கை அடைய படிப்படியாக முன்னேறிச் செல்ல வேண்டுமென அடிக்கடி கிளர்ச்சி செய்யப்பட்டது. சென்னையில் சட்டசபை அங்கத்தினர்கள் இரட்டை ஆட்சியின் கீழ் தங்களுக்குண்டான பொறுப்புகளை நன்கு உணர்ந்தனர். பொக்கிஷம் ஒதுக்கப்பட்ட இலாகாவாதலால் மதுவிலக்குப் பரீட்சைகளில் தாங்கள் வெகு உஷாராகவிருக்க வேண்டுமென்பதையும், இல்லையேல் வருமானத்தில் அதிக நஷ்டமேற்பட்டு அதனால் தேச அபிவிருத்தி இலாகாக்களின் முன்னேற்றத்திற்குப் பாதகமுண்டாகுமென்பதையும் அவர்கள் அறிந்திருந்தனர். பெரியகஷ்டங்களில் கொண்டுவிடத்தக்க அவசர காரியங்களில் இறங்குவதை விட்டு லட்சியத்தை அடைய முயற்சிகளைத்தொடங்கினால் போதுமென அவர்கள் எண்ணினர்.

மிதக் குடி வேலையின் இறுதியான லட்சியம் மதுவிலக்காகவே இருக்கவேண்டுமென்றும், கலால் கொள்கையின் நோக்கமும் அதுவாகவே இருக்க வேண்டுமென்றும்,

மந்திரிகள் ஒப்புக் கொண்டனர். ஆனல் அவர்கள் இத் துறையில் எவ்வித ஆரம்பமும் செய்யவில்லை. சொற்ப முயற்சிகள் செய்யப்பட்டனவாயினும் அவை நன்கு யோசிக்கப்பட்ட திட்டத்தின் ஒரு அம்சமாக ஏற்பட வில்லை. பின்னல் மதுவிலக்கினல் ஏற்படக்கூடிய வருமா னக்குறைவைச் சரிக்கட்ட என்னசெய்வது, வேறு எந்தத் துறைகளில் வருமானத்தைப் பெருக்குவது என்பதைப் பற்றிச் சர்க்கார் யோசிக்கவேயில்லை. எவ்வளவோ கஷ் டங்களுக்கிடையே மந்திரிகள் வேலைசெய்து வந்தார்கள். மந்திரிகளின் கையில் பொக்கிஷ இலாகா இராததால் பூரணமதுவிலக்குத் திட்டத்தை எந்த மந்திரி சபையாலும் நிறைவேற்றி வைக்க முடியாதென்று கூறி 1925-ம் வரு ஷத்தில் கலால் மந்திரியாக விருந்த **ஸர். ஏ. பி. பாத்ரோ** மந்திரி சபையின் திக்கற்ற தன்மையை ஒப்புக் கொண் டார்.

இது உண்மைதான். ஒதுக்கப்பட்ட இலாகாக்களின் பூரண ஒத்துழைப்பு இல்லாமல் மதுவிலக்கு லட்சியத்தில் எவ்வித முன்னேற்றமும் அடைய முடியாதுதான். இருந் தாலும் மந்திரிகள் தைர்யமான ஒரு திட்டத்தை வகுத் துக்கொண்டு காரியத்தை ஆரம்பித்திருக்கலாம். ஆனல் இந்தத் தைர்யம்தான் அவர்களுக் கில்லாமலிருந்தது.

சட்ட சபை ஏற்படுத்தப்பட்ட சிறிது காலத்திற் கெல்லாம் உத்தியோகப்பற்றற்ற மெம்பர்கள் மதுவிலக் குப் பிரச்னையைக் குறித்துச் சர்க்காரின் கவனத்தை ஈர்த் தனர். 1921-ம் வருஷத்தில் கலால் முறையைப் பரிசீ லித்து அதை அபிவிருத்தி செய்வதற்காக என்னென்ன முறைகளைக் கையாளலாமென்பது குறித்து யோசனை கூறுவதற்காகக் கமிட்டி யொன்றை நியமிக்கத் தீர்மா னிக்கப்பட்டது. **ஸ்ரீமான் ஏ. எஸ். கிருஷ்ண ராவ்**

என்பவர் இத்தீர்மானத்தைப் பிரேரித்தார். மதுவிலக்கே கலால் கொள்கையின் முடிவான லட்சியமாக விருக்க வேண்டுமென்றும், ஸ்தல இஷ்டத்தை நிறைவேற்றும் விஷயம் உடனே கவனிக்கப்பட வேண்டுமென்றும் அவர் வற்புறுத்தினர்.

பல பிரிவினரிடமிருந்தும் கமிட்டி சாட்சியங்களைச் சேகரித்தது. 57 ஐரோப்பியர்கள் உள்பட மொத்தம் 245 பேர்களுக்கு பல கேள்விகளடங்கிய நகல்கள் அனுப்பப்பட்டன. இதில் 95 பேர்கள் பூரண மது விலக்கை ஆதரித்தார்கள்; 135 பேர்கள் ஸ்தல இஷ்டத்தை நிறைவேற்றி வைப்பதை ஆதரித்தனர்.

விலைகளை உயர்த்துவதுபோன்ற வழிகளில் குடியைக் குறைப்பது சாத்தியமா என்பதைப்பற்றிக் கமிட்டியினர் யோசித்தனர். அப்பொழுது தான் சென்ற பத்து வருஷ காலத்தில் விலைகளை உயர்த்தியிருந்ததால் மறுபடியும் உயர்த்துவதென்பது சாத்தியப்படாமல் போய்விட்டது.

செல்வத் துறையில் ஏற்பட்டுள்ள வரையறைகளையும் கமிட்டியினர் உணர்ந்தனர். வேறு என்னென்ன வகைகளில் வருமானத்தைப் பெருக்கலாமென்பதைப் பற்றியும் அவர்கள் யோசித்தனர். சாராயத்தைப்போல் கள்ளு அவ்வளவு கேவலமாக ஆரோக்கியத்தைக் கெடுக்கவில்லை யென்றும், ஆகவே அதை அதிகமாகக் கட்டுப்படுத்த வேண்டியதில்லை என்றும் ஒருசிலர் அபிப்பிராயம் அறிவித்தனர். தவிரவும் கள்ளை விலக்கிவிட்டால் அந்தத் தொழிலில் ஈடுபட்டிருக்கும் பல்லாயிரக் கணக்கானவர்களுக்கு வேலை தேடிக் கொடுக்கும் பொறுப்பு சர்க்காருக்கு ஏற்பட்டு விடுமென்றும் எச்சரிக்கப்பட்டது. கள்ளு விஷயத்தைக் கமிட்டியே நேரடியாகப் பரிசீலித்தது. கள் குடியை ஏராளமான பேர்கள் வாழ்க்கைக்கு

அத்யாவசியமானதாகப் பாவித்து வந்ததைக் கமிட்டி கண்டது. சாராயத்தைப் போல் கள்ளு அவ்வளவு தீமையைப் பயக்கவில்லை யென்பதும் அறியப்பட்டது. ஸ்தல இஷ்டத்திற்கு விடுவதைச் சரியானதாகக் கமிட்டிகருதவில்லை. சாராய வியாபாரத்தை 20, 30 அல்லது 35 வருஷங்களுக்குள் ஒழித்து விடும்படியாகக் கட்டுப்படுத்த வேண்டுமெனக் கமிட்டி சிபார்சு செய்தது.

குடிப்பதற்கான தூண்டுதல்களைக் குறைக்கும் வகையில் கடைகளை எந்த இடத்தில் அமைப்பதென்பதைப் பற்றியும், கலால் நிர்வாகத்தின் முக்கிய அம்சங்களைப் பற்றியும் உத்தியோகப் பற்றற்ற பொது மக்களின் அபிப்பிராயத்தைக் கலந்தாலோசிக்க வேண்டுமென கமிட்டியினர் உணர்ந்தனர். எனவே விற்பனையைக் கட்டுப்படுத்துவது சம்பந்தமாக அதிகாரிகளுக்கு யோசனை கூறுவதற்காக 50,000 க்கும் அதிகமான ஜனங்களைக் கொண்ட பெரிய நகரப் பிரதேசங்களில் உத்தியோகப்பற்றற்ற அங்கத்தினர்களைப் பெருவாரியாக வுடைய லைசென்ஸிங் போர்டுகளையும், சிறு முனிஸிபாலிடிகள் உட்பட கிராமப் பிராந்தியங்களில் ஆலோசனைக் கமிட்டிகளையும் அமைக்க வேண்டுமெனக் கமிட்டியினர் சிபார்சு செய்தனர். இவையெல்லாம் எந்தவிதத்திலும் தீவிரமானமுயற்சிகளல்ல என்பதைக் கமிட்டி பூராவும் உணர்ந்திருந்தது.

அச்சமயத்தில் சட்டசபை அங்கத்தினராக விருந்தவரும், உத்தியோகப் பற்றற்ற அபிப்பிராயத்தை எடுத்துரைப்பதில் பிரமுகராக விளங்கினவருமான **ஸ்ரீமான் சி. வி. வெங்கடரமணய்யங்காருக்குக்** கமிட்டியின் சிபார்சுகள் திருப்தி யூட்டவில்லை. குறித்த காலத்திற்குள் பூரண **மதுவிலக்கை** அடையும்படியான வேலைத் திட்டத்தில் **சர்க்கார்** இறங்க வேண்டுமென அவர் விரும்பினர்.

**ஸ்ரீமான்கள் ஏ. ராமஸ்வாமி முதலியாரும்** (இப்பொழுது 'ஸர்') **பி. சி. எதிராஜுலு நாயுடுவும்** மேற்படி யாதாஸ்து சம்பந்தமாகத் தங்கள் மாறுபட்ட கருத்துக்களை வெளியிட்டனர். அப்பொழுதிருந்த நிலையில் பூரண மதுவிலக்கு சாத்தியப்படாது என்பதை ஒப்புக்கொள்ளத்தான் வேண்டுமென அவர்கள் கூறிவிட்டு, ஜனங்களைக் குடியினின்றும் மீட்பதற்காகச் சிறுசிறு தமாஷாக்களை ஏற்படுத்த வேண்டுமென்றும், குடி வியாபாரத்தைக் கட்டுப்படுத்தும் முக்கிய நோக்கத்துடன் தொழிலாளர்கள் கிளப்புகளையும், இதர விளையாட்டு ஸ்தாபனங்களையும் தொடங்க வேண்டுமென்றும் யோசனைகள் விடுத்தனர்.

"துணிக்குத் தக்கபடிதான் சர்க்கார் சட்டையைத் தைக்க வேண்டும்" என்று **ஸ்ரீமான் எச். பி. ஆரி கௌடர்** எடுத்துக்கூறி கலால் வருமானத்தை இழக்க அவர்கள் தயாராக விருக்க வேண்டுமென்றார். குற்றம் புரிபவர்களுக்குக் கடுமையான தண்டனைகளை விதிப்பதன் மூலம் திருட்டுச் சாராயத் தயாரிப்பையும், கள்ளத்தனமான வியாபாரத்தையும் நிறுத்திவிடலாமென அவர் நம்பிக்கை கொண்டிருந்தார்.

1925-ம் வருஷத்தில் சட்ட சபையைச் சேர்ந்த கலால் ஆலோசனைக் கமிட்டி யொன்று பூரா விஷயத்தையும் பரிசீலனை செய்தது. வகுக்கப்படும் திட்டத்தால் தானே முன்னேற்றம் ஏற்படும்படியாக இருக்கவேண்டுமென்றும், மாகாணம் பூராவுக்கும் திட்டம் அமுலுக்குக் கொண்டுவரப்பட வேண்டுமென்றும் **ஸ்ரீமான் டி. ஏ. ராமலிங்கம் செட்டியார்** அபிப்பிராயப் பட்டார். முன்னைய வருஷத்திய கணக்கைப் பார்த்து ஒவ்வொரு மாதமும் லைசென்ஸ்களைக் கொடுக்கும் முறையை அனுஷ்டிக்க

வேண்டுமென்றும், இந்தமுறை பம்பாயில் அனுஷ்டிக்கப் பட்டு வந்ததாகவும் ஸ்ரீமான் செட்டியார் கூறினர்.

இதற்குள்ளாக கலால் நிர்வாகத்தில் விசேஷ அபி விருத்தி செய்யப்பட்டது. 1906—ம் வருஷத்திலிருந்து 1926—27-ம் வருஷம் வரையிலுள்ள 20 வருஷகாலத்தில் வருமானம் வெகுவாக அதிகரித்திருந்தது. 1906-ம் வருஷத்தில் நாட்டுச் சாராய வகைகள் மூலம் 86.08 லட்சம் ரூபாய்கள் கிடைத்தன; கள்ளின் மூலமாக 99.23 லட்சம் ரூபாய்கள் கிடைத்தன. ஆனல் 1926—27 லோ நாட்டுச் சாராயங்கள் மூலம் 205.5 லட்சம் ரூபாயும், கள்ளு மூலம் 231.92 லட்சம் ரூபாயும் கிடைத்தது. வெளிநாட்டுச் சாராய வருமானம் 135 சத விகிதமாக உயர்ந்திருந்தது. விலையை அதிகரித்தது குடிப்பதற்கு உண்மையில் ஒரு தடையாக விருந்ததாகவும், ஆனல் திருட்டு முறை அதிகரித்ததாகவும் கலால் கமிஷனர் 1926—27-ம் வருஷத்திய தமது யாதாஸ்தில் குறிப்பிட்டிருந்தார்.

---

## 14. மது விலக்குப் பரீட்சார்த்தம்

பங்கியும், புகையிலையும், அபினியும் கலியுகத்தின் யமதூதர்கள்; ஈசனையும், அவனை வழிபடும் பக்தி மார்க்கத்தையும் மறந்த மானிடப் பதர்கள் இந்த யம கிங்கரர்களின் பிடாப்பிடியில் அகப்பட்டுக் கொள்ளுகின்றனர்.

—மகாத்மா கபீர்தாஸ்

சென்னைச் சட்ட சபையில் நடந்த விவாதமும், கலால் கமிஷனரின் வருஷாந்திர நிர்வாக யாதாஸ்துகளும் மிதக் குடித் துறையில் சென்னை செய்த முயற்சிகளின் விவரங்களை எடுத்துக்காட்டுகின்றன. பிற்போக்கு வகுப்பினர் நிறைந்துள்ள பிரதேசங்களிலாவது குடியை யொழித்துவிட வேண்டுமென்று கிளர்ச்சி ஏற்பட்டதன் காரணமாக 1923-ம் வருஷத்தில் நீலகிரி ஜில்லாவில் சர்க்கார் மதுவிலக்கைப் பரீட்சார்த்தமாக நடத்த ஆரம்பித்து மலை ஜாதியினருக்குக் குடிவகைகளை விற்கக்கூடாதென்று தடுத்தனர். வைத்திய சர்ட்டிபிகேட்டுகளைக் காட்டினால் தான் குடி வகைகளை வழங்கலாம். இந்தப் பரீட்சார்த்த முறை வெற்றி பெறவில்லை. குடிப்பழக்கத்தில் ஊறிக் கிடந்ததால் மலை ஜாதியினரால் அதை விட்டொழிக்க முடியவில்லை. அவர்கள் சட்டத்தை மீறுவது சர்வ சகஜமாகப் போய்விட்டது.

நீலகிரி விஷயம் எப்படி யிருந்தபோதிலும் காங்கிரஸ் மகாசபையின் பிரசாரம் காரணமாக மதுவிலக்கை ஒழித்து விடுவதற்கு ஆதரவான ஊக்கமும், உணர்ச்சியும் நாடு முழுவதும் ஓங்கியிருந்தது. மகாத்மா காந்தி குடியைப் பலமாகக் கண்டித்து வந்தார். குடியினின்றும் ஜனங்களைக் காக்கவேண்டிய அவசியத்தையும் அவர் வலியுறுத்தினர். மக்களின் தரித்திர நிலைமைக்குக் குடி ஒரு

காரணமென அவர் கூறினர். குடியையொழிக்காத மந்திரிகளைக் காங்கிரஸ்வாதிகள் அழுத்தமாகக் கண்டித்தனர். அதற்கு அனுகுணமான வசதிகளை வழங்காத மாண்டேகு — செம்ஸ்போர்டு சீர்திருத்தங்களின் மோசடியையும் அவர்கள் வெட்ட வெளிச்ச மாக்கினர். மது விலக்கு தேசத்தின் லட்சியமாகப் போற்றப்பட்டு வந்தது. ஸ்தல ஸ்தாபனங்களில் சில தங்கள் வசத்திற்குட்பட்ட மரங்களைக் கள்ளிறக்குவதற்கு விட மறுத்தன.

கள்ளு ஏராளமாக விற்கப்படும் பிராந்தியங்களில் சாராய விற்பனையை விலக்கி விடுவதைப் பரீட்சார்த்தமாக நடத்துவதென 1924-ம் வருஷத்தில் தீர்மானிக்கப்பட்டு சீகாழி, திருத்துறைப்பூண்டி, திருவதனை, தென்காசி, ஆத்தூர் இவ்விடங்களில் சாராய விற்பனை விலக்கப்பட்டது. இந்த ஐந்து தாலுக்காக்களிலும் சொந்தஉபயோகத்திற்காக அனுமதிக்கப்படும் சாராயத்தின் அளவு இரண்டு அவுன்ஸிலிருந்து ஒரு அவுன்ஸுக்கு குறைக்கப்பட்டது.

1927-28-ம் வருஷத்தில் பொதுச் சுகாதார சிப்பந்திகள் மூலம் பிரசாரத்தை நடத்த முயற்சிக்கப்பட்டது. தங்கள் உபந்நியாசங்களில் குடியொழிப்பு உபதேசத்தையும் சேர்த்துக் கொள்ளும்படி சுகாதார இலாகா அதிகாரிகளுக்கு அதிகாரமளிக்கப்பட்டது.

ஆனால் இந்தத் திட்டம் செவ்வையாக வேலை செய்யவில்லை. நல்லதைச் செய்வதற்கான சக்தி இந்தத் திட்டத்திலில்லை. குடிப்பதற்கான வசதிகள் அப்படியே இருந்தன. சாராயக் கோப்பை, கள்ளுப்பானை இவற்றின் தூண்டுதலோ அப்படியே யிருந்தது; இங்கிலேயில் கள்ளு, சாராயத்தின் தீமைகளைப்பற்றிச் சுகாதாரச் சிப்பந்திகள்

எடுத்துரைப்பதால் என்னமாகப் பலனேற்படும்? அவற்றின் தீமைகள் ஜனங்களுக்குத் தெரிந்தவை தானே.

இவையெல்லாம் அறைகுறையான முறைகள்; கடைகளை மூடுவதும் வெற்றியை யளிக்கவில்லை; திருட்டுத் தயாரிப்பும் விற்பனையும் பெருகின; குடிக்கு விரோதமாக பொது ஜன அபிப்பிராயத்தை வலுப்படுத்தினால் தான் நிலைமை சீர்படுமென கலால் கமிஷனர் கருதினார்.

குடியை யொழிக்க நிலையான முயற்சி எதுவும் செய்யப்படவில்லை; மது விலக்கு லட்சியத்தை அடைவதற்கான திடமான ஆரம்பமும் செய்யப்படவில்லை. சட்ட சபையோ சர்க்காரைச் சும்மாவிடவில்லை. சந்தர்ப்பம் நேரிட்ட பொழுதெல்லாம் சட்டசபையில் இது விஷயமாகக் கேள்விகள் கேட்கப்பட்டன. சாக்கார் மான்யக் கோரிக்கைகளுக்குவெட்டுப் பிரேரணைகள் பிரேரிக்கப்பட்டன. பிரத்யேக தீர்மானங்களின் மீது விவாதங்கள் நடத்தப்பட்டன. மந்திரிகளோ திக்கற்றவர்வளாக விருந்தனர். 1927-ம் வருஷம் மார்ச்சு மாதத்தில் கலால் மந்திரி தமது நிலைமையப்பற்றிக் குயுக்திவாதம் புரியலானார். மது விலக்கு மாகாண ஆட்சியின் எல்லைக்குள் வர முடியுமா என அவர் சந்தேகம் கொண்டார். கலால் இலாகா மாற்றப்பட்ட இனமாக விருந்தாலும் ஆப்காரி சட்டம் இத்தகைய இனங்களுடன் திட்டமாகச் சேர்க்கப் படவில்லையே என்று அவர் வாதித்தார். மதுவிலக்கை அனுஷ்டிக்க வேண்டுமானால் சட்டத்தை மீறிக் குற்றம் புரிபவர்களுக்குக் கடுமையான தண்டனைகளை விதிக்க வேண்டியிருக்குமென்றும், இதைச் செய்யவேண்டுமானால் மத்திய சர்க்காரின் நிர்வாக எல்லைக்குட்பட்ட பீனல் கோட் என்னும் சட்டத்தைத் திருத்தவேண்டுமென்றும், திருத்தினால் அச்சட்டம் சம்பந்தமான அதிகாரங்களை

மாகாண சர்க்கார் உபயோகிக்க முடியுமென்றும் அவர் கூறினர். ஆகவே மது விலக்கு ஒதுக்கப்பட்ட இனம் மட்டுமன்றி, மத்திய சர்க்காரைச் சேர்ந்த இனமென்றும் அவர் சட்டசபைக்கு அறிவித்தார்.

ஐந்து வருஷகாலத்திற்குள் மதுவிலக்கை ஏற்படுத்த வேண்டுமென்றும், உடனே ஐந்து ஜில்லாக்களில் இச்சீர் திருத்தத்தை ஆரம்பிக்க வேண்டுமென்றும் சிபார்சு செய்வதாக 1928-ம் வருஷத்தில் சபைமுன்பு ஒரு தீர்மானம் வந்தது; இதற்குத் திருத்தங்கள் பிரேரிக்கப்பட்டன; "ஐந்து வருஷகாலத்திற்குள்" என்பதை "பத்து வருஷகாலத்திற்குள்" என மாற்றவேண்டுமென்பது ஒரு திருத்தம்; இன்னொருதிருத்தம் "இருபது வருஷகாலத்திற்குள்" என வைத்துக் கொள்ள விரும்பியது. இரண்டாவது திருத்தம் நிறைவேறியது. ஆகவே இருபது வருஷங்களுக்குள் மதுவிலக்கை அமுலுக்குக் கொண்டுவரும்படி சபை சர்க்காருக்கு யோசனை கூறியது.

---

## 15. திருட்டுத் தயாரிப்பு

குடி வருமானம், ராணுவச் செலவு, லங்காஷயர் துணிகள் மூலமாக இந்தியாவைச் சுரண்டுதல் இம் மூன்று அநீதிகளும் பிரிட்டிஷ் ஆட்சியால் இந்தியாவிற்கு ஏற்பட்டவை.

—மகாத்மா காந்தி

பிரசாரம் மூலமாகவே அபிவிருத்தியை ஏற்படுத்தலாமென சர்க்கார் இன்னமும் நம்பினர். இத்துறையில் ஏற்பாடுகளை விஸ்தரிக்க அவர்கள் உறுதிகொண்டனர். 1929-30-ம் வருஷத்தின் இறுதியில் 4 லட்ச ரூபாய் செலவில் பிரசாரத் திட்ட மொன்றைச் சர்க்கார் ஆரம்பித்தனர். சென்னை நகரில் மத்தியப் பிரசார போர்டு ஒன்று அமைக்கப்பட்டது. ஜில்லாக்களில் கமிட்டிகள் நிறுவப்பட்டன. இத்திட்டத்தினால் நல்லபலன்கள் கிட்டவில்லை. ஆனால் பிரசார வேலையின் பலன்களை அவசரப்பட்டு நிதானிக்கக் கூடாது என்று கூறித் திட்டத்தைக் கண்டிப்பவர்களின் வாய்கள் அடைக்கப்பட்டன. ஸ்திரீகளை இயக்கத்தில் அதிக சிரத்தை யெடுத்துக்கொள்ளும்படி தூண்டினால் பொது ஜன அபிப்பிராயம் வலுத்துவிடுமென கலால் கமிஷனர் அபிப்பிராயப்பட்டார்.

1929—30-ம் வருஷத்தில் **சேலம்** ஜில்லாவைச் சேர்ந்த **திருச்செங்கோடு, ராசீபுரம், நாமக்கல் தாலுக்காகளில்** பூரண மதுவிலக்கின்பரீட்சார்த்தமாக 11 சாராயக் கடைகளும், 22 கள்ளுக் கடைகளும் மூடப்பட்டன. மேலும் தேர்தல்கள் நடைபெறும் தினங்களில் ஓட்டுகள் பதிவாகும் இடங்களிலிருந்து மூன்றுமைல் தூரத்திலுள்ள எல்லா சாராயக் கடைகளும் மூடப்பட்டன; விடுமுறை நாட்களிலும் சில வகைக் கடைகள் மூடப்பட்டன.

1931—32-ம் வருஷத்தில் பொருளாதார நெருக்கடி காரணமாகவும், காங்கிரஸ்காரர்கள் கள்ளு, சாராயக் கடைகளை மறியல் செய்ததனாலும் கலால் வருமானத்தில் ஒரு கோடி ரூபாய் குறைந்து விட்டது. மிதக் குடிப் பிரசாரத்தால் சிறந்த பலன்கள் ஏற்படாததாலும், போதுமான பணமில்லாததனாலும் அந்தப் பிரசாரம் 1931-ம் வருஷம் ஆகஸ்டு மாதத்தில் கைவிடப்பட்டது.

1929—30-ம் வருஷத்தில் பரீட்சார்த்தமாக நடத்தப்பட்ட பூரா மதுவிலக்கு 1931—32-ம் வருஷத்தில் தோற்றுவிட்டது. குடிகாரர்கள் மது விலக்கு அனுஷ்டிக்கப்படாத பிராந்தியங்களுக்கு நடந்து சென்று குடித்துவிட்டு வந்ததைக் கலால் கமிஷனர் கண்டார். வேலை செய்யும் நேரத்தை இங்ஙனம் தொலை தூரத்திற்கு நடந்து சென்று குடிப்பதில் செலவிட்டதால் ஏழை மக்களின் தினசரி வருமானம் குறைந்து விட்டது.

குடிக்க வேண்டுமென்ற ஆவல் உள்ள வரையிலும் அதைப் பூர்த்தி செய்து கொள்ளுவதற்கான வழிகளை மனம் கண்டு பிடித்தது. கள்ளத்தனமாகக் கள்ளு, சாராயங்களைத் தயாரிப்பதும், இதர வகைகளில் சட்டத்தை மீறுவதும் அதிகரித்தன. ஒரே ஒரு சர்க்கிளில் 1930—31-ல் 225 குற்றங்கள் நிகழ்ந்தன. 1931—32-ல் இவை 557-க்கு உயர்ந்து விட்டன.

தேர்தல் தினங்களிலும், விடுமுறை நாட்களிலும் சிற்சில கடைகளை மூடிவிட்டதால் பிரமாதமான பலன்களேற்படவில்லை. சாராயக் கடைகள் மூடப்பட்டிருந்த ஆத்தூர், தென்காசி தாலுக்காகளில் திருட்டுத் தயாரிப்பும், வியாபாரமும் பெருகியதால் 1933-ல் மூடப்பட்ட கடைகளெல்லாம் மீண்டும் திறக்கப்பட்டன.

சேலம் ஜில்லாவைச் சேர்ந்த மூன்று தாலுகாக்களில் பூரண மதுவிலக்கைப் பரீட்சார்த்தமாக அநுஷ்டித்தி தனுலும் உயரிய பலன்கள் ஏற்படவில்லை. "ஊழியர்கள் திறமையாக வேலை செய்ய வேண்டும், குடிக்கக் கூடா தென்ற பிரிதிக்ஞையை ஜனங்கள் உறுதியாக ஏற்கும்படி அவர்கள் செய்ய வேண்டும். திருட்டுத் தயாரிப்பையும், விற்பனையையும் உஷாராக கவனித்து அவற்றைத் தடுப் பதில் அவர்கள் கலால் இலாகா அதிகாரிகளுடன் ஒத் துழைக்க வேண்டும். இக்காரியங்கள் எதிர்பார்த்த அள விற்கு நிறைவேருததாலேயே பரீட் சார்த்த முறை தோற் றது" என்று கலால் கமிஷனர் காரணம் கூறினுர்.

ஆகவே 1933-ம் வருஷம் ஏப்ரல் முதல் தேதியி லிருந்து மேற்படி தாலுகாக்களில் மூடப்பட்டிருந்த கடைகளையெல்லாம் மறுபடியும் சர்க்கார் திறந்தனர். எனினும் பொது ஜனங்கள் கோரினுல் மது விலக்குத் திட்டத்தை மீண்டும் அனுஷ்டிக்கத் தயாராக விருப்ப. தாக அவர்கள் அறிவித்தனர்.

ஞாயிற்றுக் கிழமைகளில் சில பிராந்தியங்களில் கடைகளை மூடியதாலும் ஒரு பயனுமுண்டாகவில்லை. ஏனெனில் ஜனங்கள் சனிக்கிழமையன்றே நிறையசரக்கை வாங்கிக் கொண்டு அதில் ஒரு பகுதியை ஞாயிற்றுக்கிழ மைக்காக வைத்திருந்து அன்று குடித்தனர். எனவே இச்சீர்திருத்தமும் 1933-ம் வருஷம், ஏப்ரல் மாதம் முதல் தேதியன்று வாபீஸ் பெறப்பட்டது. வெளி நாட் டுச் சாராயக் கடைகள் மட்டும் அன்று மூடப்பட்டன. கள்ளு அதிகமாக உபயோகிக்கப்பட்ட சில பிராந்தியங் களில் சாராயக் கடைகளை மூடிவிடுவதும், நீலகிரியிலுள்ள மலை ஜாதியினருக்கு சாராய விற்பனையைத் தடைப்படுத் துவதும் 1934—35-ம் வருஷத்திலும் தொடரப்பட்டது

லைசென்ஸில்லாமல் தனி நபர்கள் கள்ளை வைத்திருப்பது சம்பந்தமான நிபந்தனைகளைக் கடுமையாக்க வேண்டுமென அந்த வருஷத்தில் உணரப்பட்டது. சில குறிப்பிட்ட இடங்களில் ஒரு காலன் அனுமதிக்கப்பட்டது; மற்ற இடங்களில் இந்த அளவின் எல்லை அரை காலனக்குக் குறைக்கப்பட்டு விட்டது.

கடைசியாகக் கிடைத்துள்ள யாதாஸ்திலிருந்து முனிசிபல் பிராந்தியங்களில் 15,908 பேர்களுக்கு ஒரு கடை வீதம் இருப்பதாகத் தெரிய வருகிறது. 1936-37-ம் வருஷத்தில் நாட்டுச் சாராயம் மொத்தம் 9 லட்சத்து 99 ஆயிரத்து 685 காலன்களுக்குச் செலவழிந்திருக்கிறது. இதற்கு முந்தின வருஷத்தில் 9 லட்சத்து 38 ஆயிரத்து 814 காலன்கள் செலவாயின. சாராயத்தின் விலை உயர்த்தப்பட்டதாலும், புதிய கடைகள் ஏற்பட்டதாலும், திருட்டுத் தயாரிப்பு, விற்பனை இவற்றைத் தடுக்க கண்டிப்பான முறைகள் அனுஷ்டிக்கப்பட்டதாலுமே மேற்படி உயர்வு ஏற்பட்டது.

கள்ளினின்றும் கிடைத்த வருமான மொத்தம் 2 கோடியே 15 லட்சத்து 43 ஆயிரத்து 224 ரூபாயாகும். முந்தின வருஷத்தில் 2 கோடியே 21 லட்சத்து 67 ஆயிரத்து 310 ரூபாய் கிடைத்தது.

சேலம் ஜில்லாவில் ஹோசூர் கிருஷ்ணகிரி தாலுகாக்களைத் தவிர மற்ற இடங்களில் திருட்டுச் சாராயம் ரொம்பவும் சகஜமாகிக் கொண்டு வந்தது.

[இந்த ஜில்லாவில் 1937-ம் வருஷம் அக்டோபர் மாதம் முதல் தேதியன்று மதுவிலக்கு ஏற்படுத்தப்பட்டது. எனவே மேற்கூறிய யாதாஸ்து 1937-ம் வருஷம், மார்ச் மாதத்துடன் முடிந்த வருஷத்தியதாகும்.]

ஜனங்கள் சாராயத்தையும், அபினியையும் உபயோகிப்பது அதிகரித்ததென்றும், வெளிநாட்டுச் சாராயமும் கஞ்சாவும் குறைந்து விட்டன வென்றும் மேற்படி அறிக்கை கூறுகிறது.

திருட்டுக் கள்ளையும், சாராயத்தையும் அடக்க வேண்டி 1935-ம் வருஷம், ஏப்ரல் மாதம் முதல் தேதியிலிருந்து இம்மாகாணம் முழுதும் நாட்டுச் சாராய வகைகளின் வரி கால் பங்குக்குக் குறைக்கப்பட்டது: இதன் காரணமாக 1935-36-ம் வருஷத்தில் நியாயமாக தயாரிக்கப்படும் சாராயத்தை உபயோகிப்பது முன் வருஷத்தை விட 19 சத விகிதமாக உயர்வடைந்தது. எனினும் கள்ளத் தயாரிப்பு என்னமோ ஓயவில்லை.

**கடப்பை** ஜில்லாவின் சிலபாகங்களிலும், **சிகாகோல்** சர்க்கிளிலும், இன்னும் சில பிராந்தியங்களிலும் கள்ளத் தயாரிப்பு மிகவும் அதிகமாக வியாபித்திருந்தது. போலீசார் தங்கள் பிரயாணங்களின் போது முற்றுகையிடுகையில் இவற்றைக் கண்டு பிடித்தனர்.

கள்ளு அதிகமாகக் குடிக்கப்படும் பிராந்தியங்களில் சாராயக் கடைகளை மூடி விடுவது **தஞ்சாவூர் ஜில்லாவில் சீகாழி, திருத்துறைப்பூண்டி தாலுக்காக்களிலும், ராமநாதபுரம் ஜில்லாவில் திருவாடானை, பரமக்குடி** தாலுகாக்களிலும் அமுலிலிருந்து வந்தது. இங்கு கடுமையான குற்றங்கள் எவையும் நிகழவில்லை.

---

## 16. மது விலக்கே வழி

மது வியாபாரம் சமூகத்தின் விஷமாகும். இதைக் கட்டுப்படுத்தும் முயற்சிகள் அனைத்தும் பலன் தரா மல் போவதுடன் மட்டுமன்றி தீமையை வளர்க்கவே செய்யும். எனவே இதை அடியோடு கைவிடுவது தான் வழி.

—டாக்டர் ஜேம்ஸ் ஸ்மித்

(பிரசித்தி பெற்ற அமெரிக்க மதுவிலக்குக்காரர்)

மதுவிலக்கை அடைவதற்குப் பல்வேறு வழிகளைப் பற்றி யோசிக்கப்பட்டிருக்கிறது; இவற்றில் அந்தந்த ஸ்தல இஷ்டத்திற்கு விட்டு விடுதல் ஒன்று. சில தேசங்களில் இது புகழ்பெற்றிருக்கிறது. இந்த முறைப்படி மதுவிலக்கை சர்க்கார் ஏற்படுத்துவதில்லை. அதை அந்தந்த இடத்தி லுள்ள ஜனங்களின் இஷ்டத்திற்குச் சர்க்கார் விட்டுவிடு கிறார்கள். மது விலக்கை அனுஷ்டிப்பதா வேண்டாமா என்பதை நிர்ணயிக்கும் உரிமை ஜனங்களிடம் ஒப்படைக் கப்படுகிறது. ஆனால் இதனால் சில கஷ்டங்களேற்படலாம். சில இடங்களில் நியாயமற்ற முறையில் பெரும்பாலான மக்கள் மற்றவர்கள் மீது தங்கள் கருத்தைச் சுமத்த முயற்சிக்கலாம். மேலும் இம் முறையினால் துரிதமான அபிவிருத்தி ஏற்படாது.

ஸ்தல இஷ்ட முறை 1918-ம் வருஷம் சேலத்தில் பரீட்சிக்கப்பட்டது. ஆனால் சேலத்தில் குடித் தீமை குறைந்ததாயினும் அக்கம் பக்கத்திலுள்ள பிராந்தியங் களில் இத் தீமை மிகவும் கேவலமான நிலைமையை அடைந்து விட்டது. திருட்டு வியாபாரம் முதலிய துஷ் பிரயோகங்களும் இம்முறையைத் தோற்கடித்து விட்டன.

"விஷத்தைக் கட்டுப்படுத்துவதோ அல்லது மட்டுப்படுத்துவதோ வீண் முயற்சியே யாகும்; ஏனெனில் நோய் வேரூன்றிப் போயிருப்பதால் அதை அடியோடு ஒழித்துவிட வேண்டும். ஸ்தல இஷ்ட முறை தற்காலிகமானதே தவிர முடிவான தல்ல." என்பது அமெரிக்கா தேசத்தைச் சேர்ந்த **திரு டி. லீகால்வின்** என்பவரது அபிப்பிராயமாகும். ஸ்தல இஷ்ட முறை முதல்தரமான வெற்றியுடன் நடந்தால் கூட அந்த இடத்தைச் சேர்ந்தவர்கள் இந்த முறை அனுஷ்டானத்திலில்லாத இடங்களுக்குத் தாராளமாகச் சென்று குடித்து வரலாம். ஆதலால் குடிப் பேயை யொழிப்பதற்கான ஒரே வழி மது விலக்கு தான் என்று பல அறிஞர்கள் கருதினர்.

குடித் தீமையை யொழிக்கும் பிரச்னையைப் பணத் தொல்லை என்னும் மேகம் மூடிக்கொண்டிருப்பது மிகவும் துக்கிக்கத்தக்கது. **வரி விசாரணைக் கமிட்டி** (1924-25) இந்த அம்சத்தில் தக்க கவனம் செலுத்திப் பிரச்னையின் கடுமையை நன்கு உணர்ந்தது. ஆனால் சீர்திருத்தத்தைச் செய்வதால் வருமானத்தில் நஷ்ட மேற்படுகிறதே என்பதைப்பற்றி மது விலக்குக்காரர்கள் கவலைப்படவேயில்லை. கள்ளு, சாராயம் மூலமான வருமானம் அநியாயம் என்பது அவர்களது கருத்து. அரை குறையான முறைகளால் எவ்விதப் பிரயோஜனமுமில்லை யென்றும், ஆத்மார்த்தத் துறையிலோ அல்லது பொருளாதாரத் துறையிலோ எவ்வித அனுகூலமு மில்லாமல் அவற்றால் வருமானத்தில் நஷ்டமே யுண்டாகு மென்றும் அவர்கள் கூறி வந்தனர். மது விலக்கின் நோக்கம் நிறைவேற வேண்டுமானால் திருட்டுத் தயாரிப்பையும், விற்பனையையும் தடுக்கத்தகுந்த முயற்சிகளை உடன் கையாள வேண்டும். இதைச் செய்வதிலும் பணச்சிலவாய் விடுமே

என்கிற பிரச்னை தலை தூக்குகிறது. தடுப்பு முறைகளைக் கையாளுவதற்கு பிரத்யேக சிப்பந்திகளை நியமிக்க தனிச் செலவு ஏற்படும். இதற்காக மட்டும் அமெரிக்கா தேசத்தில் 1923-ம் வருஷத்தில் 13 கோடி ரூபாய் செலவாயிற்று. இந்தியாவில் தற்போதைய மொத்த வருமானத்தில் இந்தச் செலவு 18 சத விகிதத்திற்காகுமென வரி விசாரணைக் கமிட்டியார் மதிப்பிட்டனர். ஆகவே வருமானத்திற்கு வேறு ஆதாரங்களைத் தேடினாலன்றி மது விலக்கால் சர்க்காருக்கு ஏராளமான நஷ்டம் மட்டுமல்லாமல் அதிகச் செலவும் ஏற்படுகிறதென்பது உணரப்பட்டது. இந்தியாவில் கள்ளையோ, சாராயத்தையோ தயாரிப்பதற்கான வசதிகள் வெகு சுலபமாகக் கிடைப்பதும் மதுவிலக்காளரை மலைக்கச் செய்கிறது.

தொழிலாளர் பிரச்னைகளைப்பற்றி விசாரணை செய்த **ராயல் கமிஷன்** (1929-31) குடியினால் தொழிலாள வகுப்பினருக் கேற்படும் தீமையின் கடுமையை அறிந்தது. அதிலில்லாமலிருந்தால் தொழிலாளிகள் அதிக சௌக்கியமாக வாழ்வரென்றும், அவர்களது திறமையும் அதிகரிக்குமென்றும் மேற்படி கமிஷன் அபிப்பிராயப்பட்டது.

சென்னையில் அனுஷ்டிக்கப்பட்டுவரும் முறை இன்னும் வெகுதூரத்திற்கு அபிவிருத்தி செய்யப்படவேண்டுமென ஐ. சி. எஸ். வர்க்கத்தைச் சேர்ந்த **திரு டி. என். ஸ்டிராத்தி** கருதினார். இப்பிரச்னைகளை இவர் பிரத்யேகமாக ஆராய்ந்தே இந்த முடிவிற்கு வந்தார்.

குடிப்பதிலுள்ள நபர் உரிமையை மது விலக்கு பறித்து விடுகிறதென்பது மதுவிலக்கிற்கு இன்னொரு ஆட்சேபம். மிதமாகக் குடிப்பதால் ஆரோக்கியம் கெடுவதில்லையென்றும், சிறிதளவிற்குக் குடிப்பதால் தேகச்

சோர்வு நீங்குமென்றும், ஆதலால் இச்சிறு அளவை உப யோகிக்கும் விஷயத்தில் சர்க்கார் தனிநபர் உரிமையில் தலையிடக்கூடாதென்றும் கூறப்படுகிறது. சிறிது சிறிதா கக் குடித்தால் கூட நாளடைவில் தேகாரோக்கியம் கெட்டு விடுகிறதென வைத்தியர்கள் அபிப்பிராயப் படுவதை ஏற் கனவே எடுத்துரைத்தாகி விட்டது. சொந்தச் சுதந்திர மென்னும் உரிமை ஒவ்வொருவருக்கும் உண்டு. நியாய மான வரையறைகளுக்குள் இந்தச் சுதந்திரத்தைப் பிர யோகிப்பதைச் சர்க்கார் எவ்விதத்திலும் தடுப்பதில்லை. ஆனால் தனி நபரின் ஆத்மார்த்த, பொருளாதார நல னுக்கு விரோதமான வழக்கங்களைப் பின்பற்றினால் அவர் களது க்ஷேமத்தில் கருத்துக் கொண்டுள்ள எந்தச்சர்க் காரும் அதில் தலையிடத்தான் செய்வர். அங்ஙனம் செய்ய வேண்டியதுதான் சர்க்காரின் கடமை. மது விலக்கை அனுஷ்டிப்பது நபர் சுதந்திரத்தில் எந்த விதத்திலும் தலை யிடுவதாகாது என அமெரிக்க கோர்ட்டுகள் பல முடிவு கூறி யிருக்கின்றன.

---

## 17. காங்கிரஸ் போர்

குடி மேனாட்டு நாகரிகத்தின் ஒரு அம்சமாக இருக்கிறதென்னும் எண்ணத்தினால் ஜனங்கள் அதிகமாகக் குடிப் பழக்கத்திற்கு ஆளாகி யிருக்கின்றனர் என்பதைக் கேட்க மிகவும் துக்கமாகவிருக்கிறது. பூரண மதுவிலக்கு தான் விமோசனத்திற்கான வழி என்று நம்புபவர்களில் நான் ஒருவன்.

—ஆல்பிரேட் வேப்
(பார்லிமெண்டு சபை அங்கத்தனர்)

**மா**ண்டேகு-செம்ஸ் போர்டு சீர்திருத்தத்தின் கீழ்படிப் படியாக மது விலக்கை அடைவதே கலால் கொள்கையின் லட்சியம் என அடிக்கடி பறை சாற்றப்பட்டது. பரீட்சார்த்த முறைகள் பல செய்து பார்க்கப்பட்டனவாயினும் தைர்யமான திட்டமெதுவும் அங்குரார்ப்பணம் செய்யப்படவில்லை. அரைகுறையான முறைகளால் ஜனங்கள் விமோசனம் பெற முடியாதென்பதை அனுபவம் நன்கு காட்டி விட்டது. பரீட்சார்த்த முறைகள் வெறும் பிரசார அளவிற்குப் பயன்படுமேயன்றி அவற்றால் அதிக அநுகூலம் கிட்டாதென்பதும் நிதர்சனமாகியது.

மாகாண சர்க்கார்களின் முதல் வேலை குடியை யொழிப்பதுதான் என்று **இந்திய தேசீய காங்கிரஸ்** பல வருஷங்களாக வற்புறுத்தி வந்திருக்கிறது.

1889-ம் வருஷத்தில் பார்லிமெண்டில் குடி விஷயமான விவாதம் நடக்கையில் இந்தியாவில் குடி அதிகரித்திருந்தது கண்டு காங்கிரஸ் மகாசபை பெரிதும் கவலைப் பட்டது. அடுத்த வருஷத்தில் வெளிநாட்டுச் சாராய வகைகளின் இறக்குமதி வரி உயர்த்தப்பட்டது குறித்தும், சென்னை சர்க்கார் ஏராளமான சாராயக் கடைகளை மூடி விட்டது பற்றியும் அது தனது மகிழ்ச்சியைத்

தெரிவித்தது. வருஷா வருஷம் கூடிய காங்கிரஸ் மகா சபைகளில் தலைமை வகித்தவர்கள் குடியின் தீமைகளைப் பற்றி எடுத்துரைத்தனர். 1894-ம் வருஷத்தில் சென்னையில் நடைபெற்ற காங்கிரஸில் தலைமை பூண்ட பார்லிமெண்டு சபை அங்கத்தினரான திரு ஆல்பிரேட் வெப் "நமது உயர்ந்த நாகரிகத்தையும், கலைப்பிரகாசத்தையும் நாம் ஆதியில் கீழ்த் திசை நாடுகளிலிருந்தே பெற்றோம். அதற்குப் பதிலாக நாம் சில அனுகூலங் களையும், மேனாட்டு நாகரிகத்தின் சில மட்ட ரகமான பழக்க வழக்கங்களையும் அவைகளுக்கு வழங்கி யிருக்கிறோம். குடி மேனாட்டு நாகரிகத்தின் ஒரு அம்சமாக இருக்கிற தென்னும் எண்ணத்தினால் ஜனங்கள் அதிகமாகக் குடிப் பழக்கத்திற்கு ஆளாகியிருக்கின்றனர் என்பதைக் கேட்க எனக்கு மிகவும் துக்கமாக விருக்கிறது. பூரண மது விலக்கு தான் விமோசனத்திற்கான வழி என்று நம்புபவர்களில் நான் ஒருவன்." என்று கூறினார்.

1900-ம் வருஷத்தில் கூடிய காங்கிரஸ் நாட்டில் குடி அதிகமாகப் பெருகி வருவதைக் கண்டு பீதியடைந்து, அதைக்கட்டுப்படுத்த தீவிரமுறைகளை யெடுத்துக்கொள்ள வேண்டுமென்று மன்றாடியது. இந்தக் குடிப்பழக்கம் ஆங்கிலக் கல்வியுடன் வந்ததாகச் சிலர் புகார் செய்தனர்.

ஒத்துழையா இயக்க காலம் முதற்கொண்டு மது விலக்கு விஷயத்தில் காங்கிரஸ் தீவிர சிரத்தை காட்டத் தலைப்பட்டது. மது விலக்கு தேசியப் புனருத்தாரணத் திட்டத்தின் ஒரு அம்சமாக ஏற்கப்பட்டது. இந்தியப் பிரச்னையைத் தீர்த்து வைப்பதற்காக 1930-ம் வருஷத்தில் வைஸ்ராய் அவர்களுக்கு மகாத்மா காந்தி விடுத்த 11 நிபந்தனைகளில் மதுவிலக்கையும் ஒன்றாகச் சேர்த்திருந்தார். இம்மட்டோ? பூரண மதுவிலக்கை அவர் இந்

நிபந்தனைகளில் முதலாவதாகவும் குறிப்பிட்டிருந்தார். "மது பானத்தை அடியோடு ஒழித்து விடவேண்டும்" என்பதே அந்த நிபந்தனை. வட்டமேஜை சுழித்து விட்டதற்குப் பிறகே மகாத்மாஜி மேற்படி நிபந்தனைகளை இராஜப்பிரதிநிதிக்கு விடுத்தார். இந்நிபந்தனைகள் திருப்தியாக நிறைவேற்றப்பட்டால் அதற்குப் பிறகு சட்டமறுப்புப் பேச்சே வைஸ்ராயின் காதில் விழாதென காந்திஜி இர்வின் பிரபுவிற்கு (வைஸ்ராய்) எழுதினார்.

பிரிட்டிஷ் சர்க்கார் காந்தியின் கோரிக்கைக்குப் பணிந்து வரவில்லை. எனவே **உப்பு சத்தியாக்கிரகம்** புரிவதற்காக மகாத்மாஜி சபர்மதியிலுள்ள தமது ஆசிரமத்திலிருந்து **தண்டி** என்னு மிடத்திற்குக் கால்நடையாகப் புறப்படுவதற்குப் பத்து நாட்களுக்கு முன்பு வைஸ்ராய்க்கு மீண்டு மொரு கடிதம் எழுதினார். இக்கடிதத்தில் அவர் இந்தியப் பாமர மக்களின் துர்ப்பாக்கிய நிலைமையை எடுத்துக் காட்டினார்; ஏழைகளின் மீது விதிக்கப்படும் அபாரமான நில வரிச் சுமையைப்பற்றிக் குறிப்பிட்டார்; ஏழை மக்களிடமிருந்தே கலால் வருமானமும் பெறப்படுவதாக அவர் பிரஸ்தாபித்தார்.

> "ஏழைகளிடமிருந்து தான் மதுபானத்திற்கும் லாகிரி வஸ்துக்களுக்கும் வரி வாங்கப்படுகிறது. அவர்களது சன்மார்க்கத்தையும், ஆரோக்கியத்தையும் அழிப்பது அதுவேயாகும். ஒருவனுடைய சுதந்தரத்தில் தலையிடுவதில்லை எனக் கூறப்படுவதெல்லாம் வெறும் சாக்குப் போக்குகள் என்றே நான் கூறத் துணிவேன். 1919 ல் சீர்திருத்தத்தை வழங்கிய சாமர்த்தியசாலிகள் இந்த வரி வசூல் நிர்வாகத்தை இரட்டையாட்சியின் பொறுப்பான பகுதிக்கு மாற்றினர். ஆனால் அப்பகுதிக்கோ அதிகாரமே கிடையாது. இந்த மது பான வரியை ஒழித்து விட்டால் கல்வி இலாகா தடுமாற்றமடையும். இப்பொழுது உள்ள நிலைமை

யில் அந்த வருமானத்திற்கு ஈடு செய்யப் புதிய வழிகள் எவையும் கிடையாது."

என்று காந்திஜி அக்கடிதத்தில் கண்டிருந்தார்.

தண்டி யாத்திரையின்போது அவர் பல கிராமங்களின் வழியே சென்றார். அப்பொழுது ஒவ்வொரு கிராமத்திலும் கூட்டங்கள் நடைபெற்றன. அக்கூட்டங்களில் பேசுகையில் குடியை விட்டுவிடும்படி அவர் ஜனங்களைக் கேட்டுக் கொண்டார். குடிப்பதை விட்டொழிக்கும்படி புருஷர்களுக்கு எடுத்துரைக்குமாறு அவர் ஸ்திரீகளை வேண்டினார். சில கிராமங்களில் கள்ளிறக்குவதற்காக விடப்பட்டிருந்த ஈச்சமரங்களையெல்லாம் வெட்டித் தள்ளும்படியும் அவர் ஜனங்களுக்கு உபதேசித்தார். சில இடங்களில் அவர் தாமே இக்காரியத்தை முதன் முதலாகச் செய்தார்.

கைது செய்யப்பட விருக்கும் தருவாயில் அவர் நாட்டு மக்களுக்கு ஒரு வேண்டுகோள் விடுத்தார். பற்பல வகுப்பினருக்கு பற்பல வேலைகளை யளித்த அவர் ஸ்திரீகளிடம் கள்ளு சாராயக் கடைகளை மறியல் செய்ய வேண்டிய கடமையை ஒப்படைத்தார்.

மது பானக் கடைகளை மறியல் செய்வதென்பது சட்ட மறுப்பு இயக்கத்தின் முக்கியமான திட்டமாக ஏற்பட்டிருந்தது. காந்திஜி கைதுசெய்யப்பட்டதும் இந்த வேலையை சரி வர நிறைவேற்றி வைக்குமாறு காங்கிரஸ் காரியக் கமிட்டி நாட்டு மக்களை வேண்டிக் கொண்டது. மதுவிலக்கை ஆதரித்துத் தீவிரமான பிரசாரத்தை நடத்த வேண்டிய அவசியத்தையும் காரியக் கமிட்டி வற்புறுத்தியது. காரியக் கமிட்டியின் கட்டளைக் கிணங்க நூற்றுக் கணக்கான வாலிபர்களும், ஸ்திரீ ரத்தினங்களும் மறியல் வேலையில் மும்முரமாக ஈடுபட்டனர். போலீசாரின் தடி

யடிகளுக்கும், இதர கொடுமைகளுக்கும் துளி கூட அஞ்சாது அவர்கள் மறியல் புரிந்தனர்.

1931—ம் வருஷத்தில் ஏற்பட்ட **காந்தி இர்வின் ஒப்பந்தம்** மூலமாக அன்னிய நாட்டுத் துணிக் கடைகளையும் மதுபானக் கடைகளையும் மறியலிடும் உரிமையைச் சர்க்கார் அங்கிகரித்தனர். சட்ட ரீதிக்குட்பட்ட முறைகளில் மறியல் செய்யச் சர்க்கார் அனுமதித்தனர்.

காந்தி—இர்வின் ஒப்பந்தத்திற்குப் பிறகு நடந்த கராச்சி காங்கிரஸ் குடிப்பிரச்னை சம்பந்தமாக காரியக் கமிட்டி நிறை வேற்றிய தீர்மானத்தை அங்கீகரித்தது. சென்ற பன்னிரண்டு மாதங்களில் தேசம் மதுவிலக்குத் துறையில் வெகுதூரம் முன்னேறியிருப்பதைக்கண்டு காங்கிரஸ் சந்தோஷமடைந்தது. மேலும் குடியொழிப்புப் போரைத் தீவிரமாக நடத்துமாறு அது எல்லாக் காங்கிரஸ் ஸ்தாபனங்களுக்கும் உத்தரவிட்டது.

மக்களின் ஜீவாதாரமான உரிமைகளைப் பற்றிய கராச்சி தீர்மானத்தில் மது விலக்கைப்பற்றிப் பிரஸ்தாபிக்கப்பட்டிருக்கிறது. மருந்துகளைத் தயாரிப்பதற்காகத் தவிர மற்றபடி லாகிரி வஸ்துக்களைப் பூரணமாக விலக்கிவிட வேண்டுமென்று கராச்சி காங்கிரஸ் பொருளாதார,சமூக முன்னேற்றத்திட்டமொன்றையும் வகுத்தது.

பொதுத் தேர்தல்கள் முடிந்தவுடனும், மாகாண சுயவாட்சி அங்குரார்ப்பணம் செய்யப்படுவதற்கு முந்தியும் 1937—ம் வருஷம், பிப்ரவரிமாதம் 28—ந்தேதி காங்கிரஸ் காரியக் கமிட்டிக் கூட்டம் நடை பெற்றதில் காங்கிரஸ் சட்டசபைக் கட்சி அனுஷ்டிக்க வேண்டிய திட்டத்தின் பூரா விவரங்களும் தயாரிக்கப்பட்டன. இவற்றில் மதுவிலக்கு ஒன்று. மது விலக்கை நிலைநாட்டுவதற்கு அனுகூலமான பொது ஜன அபிப்பிராயத்தைத் திரட்ட

வும் வேலை செய்ய வேண்டுமென விதிக்கப்பட்டது. ஆகஸ்ட் மாதத்தில் நடைபெற்ற காரியக் கமிட்டிக் கூட்டத்திலும் இவ்விஷயம் ஆலோசிக்கப்பட்டது. அப்பொழுது மகாத்மா காந்தி மதுவிலக்கைப்பற்றிய தமது கருத்துக்களை எல்லா அங்கத்தினருக்கும் பறிமாறினார். சில மணி நேர விவாதத்திற்குப் பிறகு கீழ்க்கண்ட தீர்மானம் அங்கீகரிக்கப்பட்டது:

"1920-ம் வருஷம் ஒத்துழையாமை இயக்கம் ஆரம்பிக்கப்பட்ட காலத்திலிருந்து மதுவிலக்கு காங்கிரஸ் திட்டத்தில் முக்கிய ஸ்தானத்தை வகித்து வந்திருக்கிறது; இதைச் சித்திப்பதற்காக ஆயிரக் கணக்கான புருஷர்களும், ஸ்திரீகளும் சிறைக்குச் சென்றிருக்கின்றனர்; தடியடி முதலிய கொடுமைகளுக்கும் ஆளாகி யிருக்கின்றனர்; எனவே இவ் விஷயத்தை மேற்கொண்டு வேலை செய்ய வேண்டியது காங்கிரஸ் மந்திரிகளின் கடமை யென காரியக்கமிட்டி அபிப்பிராயப் படுகிறது; மந்திரிகள் தங்கள் தங்கள் மாகாணங்களில் மூன்று வருஷங்களுக்குள்ளாக பூரண மது விலக்கை ஏற்படுத்தி விடுவரென காரியக் கமிட்டி எதிர்பார்க்கிறது. ஜனங்களின் சன்மார்க்க வாழ்விற்கும், சமூக முன்னேற்றத்திற்கும் ஆதாரமான இந்தத் திட்டத்தை ஏற்று நடத்தும்படி இதர மாகாணங்களிலுள்ள மந்திரிகளையும், இந்திய சமஸ்தானங்களையும் காரியக் கமிட்டி கேட்டுக் கொள்ளுகிறது."

காங்கிரஸ் கட்சியினர் ஜூலை மாதத்தில் உத்தியோக மேற்றனர். ஆறு மாகாணங்களில் காங்கிரஸ் மந்திரி சபை அமைக்கப்பட்டதும் தேசமக்களின் க்ஷேமத்தைக் கருதி அவர்கள் வேலைசெய்வதற்காகத் திட்டமொன்றைச்சமர்ப்பித்து **காந்திஜி "ஹரிஜன்"** பத்திரிகையில் ஒரு கட்டுரை எழுதினார். அந்தத் திட்டத்தில் உடனே மது விலக்கை அனுஷ்டிக்க வேண்டியதும் சேர்க்கப்பட்டிருந்தது.

---

## 18. மந்திரிகளின் கடமை

மதுவிலக்கினுல் வருமானத்தில் நமக்குச் சிறிது நஷ்ட மேற்படலாம். ஆனுல் நாம் தேசத்தின் உண்மையான செல்வத்தைப் பெருக்கவும், ஜனங்களை ஆரோக்கியமும் செழிப்பும் வாய்ந்தவர்களாகச் செய்யவும் முற்பட்டிருக்கிரேம். இதற்கு அஸ்திவாரமிடுவதற்கு மதுவிலக்கு அத்தியாவசியமாகும்.

—பண்டித ஜவஹரிலால் நேரு

இந்திய நிர்வாகத்தின் ஒரு அம்சம் கலால் வருமானம். இதிலிருந்து தான் கல்வித் துறையில் பணம் செலவழிக்கப்பட்டு வருகிறது. மதுவிலக்கை ஏற்படுத்த வேண்டிய அவசியத்தைச் சீர்திருத்தக்காரர்கள் வற்புறுத்தும் பொழுதெல்லாம் அல்லது மிதக் குடி பிரசாரத்தைத் தீவிரமாக்க வேண்டுமெனக் கோரும்பொழுதெல்லாம் அவற்றை நிறைவேற்றினுல் கலால் வருமானம் போய்விடு மென்றும், அதனுல் கல்வி வேலைக்கு ஆபத்து நேரிடுமென்றும் சர்க்கார் பதிலளித்து வந்தனர். 1937-ம் வருஷம், ஆகஸ்ட் மாதம் 21-ந் தேதியன்று "ஹரிஜன்" பத்திரிகையில் எழுதிய கட்டுரை யொன்றில் மகாத்மா காந்தி இதைக் குறிப்பிட்டு "நம்முடைய குழந்தைகளுக்குக் கல்வி போதிப்பதற்காக நாம் மது பான வருமானத்தை எதிர் நோக்கி நிற்பது புதிய சீர்திருத்தத்தின் கொடுமையாகும்" என்று வருந்தினர். "இது கல்வித் துறையான ஒரு புதிர்தான்" என்பதை மகாத்மாஜி ஒப்புக் கொண்டார். "இருந்தாலும் என்ன நேரிடுவதாயினும் சரி மதுவிலக்கு லட்சியத்தை விட்டுக் கொடுக்கவே கூடாது" என்று அவர் அழுத்தமாகக் கூறினர்.

"அன்னிய பாஷையில் அவர்கள் தங்கள் பாடங்களைக் கற்கும் நிர்ப்பந்தத்தினின்றும் குழந்தைகளை விடுவிக்க நீங்கள் தீர்மானித்து, அவர்களது கைகால்களைக் கொண்டு உழைக்கும்படி போதித்தால் கல்வித் துறையான புதிர் தீர்க்கப்பட்டு விடும்; அந்நிலைமையில் குடி மூலமான பூரா வருமானத்தையும் கைவிடலாம்; முதலில் இந்த வருமானத்தைக் கைவிட முடிவு செய்ய வேண்டும்; கல்வியைப்பற்றிப் பிறகு வழிகளைத் தேட முயற்சிக்க வேண்டும். இந்த மகத்தான காரியத்தை ஆரம்பித்து விடுங்கள்." இதுவே காந்திஜியின் யோசனை.

தமது (காந்திஜி) கட்டுரையைப்பற்றித் தமது (ஸ்ரீமான் ஷா) அபிப்பிராயத்தைத் தெரிவிக்குமாறு காந்திஜி **ஸ்ரீமான் கே. டி.** ஷாவைக்கேட்டுக்கொண்டார். ஸ்ரீமான் ஷா பிரசித்திபெற்ற அர்த்த சாஸ்திர நிபுணர். அவரது கருத்துக்களுக்குக் காந்திஜி எப்பொழுதும் விசேஷ மதிப்பு வைப்பதுண்டு. "உடனே" என்னும் விஷயத்தில் தமக்குச் சற்று சந்தேகமாக விருக்கிறதே தவிர மற்றபடி பூரண மது விலக்கை ஏற்படுத்தலாமென ஸ்ரீமான் ஷா அறிவித்தார். ஆனால் 'உடனே' என்னும் பதத்திற்குக் குறுகிய காலம் அதாவது ஐந்து வருஷம் என்று வைத்துக் கொண்டால் அப்பொழுது கல்வித் துறைக்கு விசேஷ பாதகமேற்படாமல் பூரண மது விலக்கை நடத்தி வைக்க முடியுமென்றும் அவர் அபிப்பிராயப்பட்டார். ஸ்ரீமான் ஷா பூரண மதுவிலக்கை ஏற்படுத்துவதற்கான காலத்தை 5 வருஷங்களாக விதித்தார். ஆனால் 1937-ம் வருஷம், ஆகஸ்ட் மாதம் 28-ந் தேதி கூடிய காரியக் கமிட்டி இக்கால அளவை மூன்று வருஷங்களாக நிர்ணயித்தது.

அமெரிக்காவில் மது விலக்கு இயக்கம் தோற்று விட்டதிலிருந்து இந்தியா பாடம் கற்றுக்கொள்ள வேண்டு மெனச் சொல்லுபவர்களுக்கு “ அந்தத் தேசத்தில் குடிப் பது பாபமாகக் கருதப்படவில்லை ; அங்கு லட்சக்கணக் கானவர்கள் வழக்கமாகக் குடிக்கிறார்கள். ஆனால் இந் தத் தேசத்திலோ எல்லா மதங்களும் குடிப்பதைப்பாப மாகக் கருதுகின்றன. மேலும் இங்கு லட்சக்கணக்கான வர்கள் குடிப்பதில்லை ; தனி நபர்கள் தான் குடிக்கின் றனர் ” என்று காந்திஜி பதில் கூறுகிறார்.

அமெரிக்காவில் குடிப்பது சமூக வழக்கமாகவும், சொகுசான காரியமாகவும் அமைந்திருக்கிறது. ஆனால் இந்தியாவிலோ அப்படியல்ல. அமெரிக்காவில் குடிப்பது வெட்ககரமான செயலாகக் கருதப்படவில்லை ; ஆனால் இந்தியாவிலோ குடியுடன் வெட்கமும் கலந்திருக்கிறது. மேலும் அமெரிக்காவைப் போல் மது விலக்குச் சட் டத்தை எதிர்க்க இங்கு பணக்காரர்களும், செல்வாக்கு மிகுந்தவர்களும் கிடையாது. இந்தியா மது விலக்கில் வெற்றிபெற்றால் அதைக்கண்டு அமெரிக்காவும் ஒருவேளை மறுபடியும் மதுவிலக்குக்குத் திரும்பினாலும் திரும்பலா மென காந்திஜி நம்பினார்.

மது விலக்கை நடத்தியே தீரவேண்டுமென மகாத் மாஜி உறுதிகொண்டிருக்கிறார். ஆனால் எல்லாச் சீர்த் திருத்தங்களையும் போலவே இதிலும் ஊழியர்கள் நம் பிக்கையுடனும், மன உறுதியுடனும்: ஊக்கத்துடனும் வேலை செய்யவேண்டுமென்பதை அவர் வற்புறுத்துகிறார். சட்டபூர்வமாக சீர்திருத்தத்தைத் தொடங்கி விடுவதால் மாத்திரம் முன்னேற்றத்தை அடைந்து விட முடியாது. சீர்திருத்தத்தில் இறங்கி அனைவரும் ஜீமூதமாக வேலை செய்ய வேண்டுமென அவர் கோருகிறார். தவிரவும் மது

விலக்குத் திட்டத்துடன் நிர்மாண வேலைகளிலும் சர்க்கார் கவனம்செலுத்த வேண்டுமென அவர் விரும்புகிறார்.

தேர்தலில் காங்கிரஸ் கட்சிக்குப் பெருவாரியான வெற்றி கிடைத்திருப்பதாலும், நிர்வாகத்தை நடத்தும் பொறுப்பை அவர்கள் ஏற்றுக் கொண்டிருப்பதாலும் தேர்தல் உறுதிமொழிகளை நிறைவேற்றிவைக்க அவர்கள் கடமைப் பட்டவராயினர். அதன் வேலைத் திட்டத்தில் மதுவிலக்கு முக்கியமானதாக இருந்ததால் இந்த லட்சியத்தை அமுலுக்குக் கொண்டு வருவதே மந்திரி சபைகளின் கடமையாக இருந்தது. அதைப்பற்றி வெறுமனே விவாதித்துக் கொண்டிருக்க காந்திஜி மந்திரிகளுக்கு அவகாசம் அளிக்கவில்லை.

1937-ம் வருஷம் ஜூலை மாதம் 13-ந் தேதி "ஹரிஜனி"ல் அவர் மந்திரி சபைகளின் முதல் கடமையைப் பற்றி நினைவூட்டி, இரண்டே வருஷங்களில் மதுவிலக்கை ஏற்படுத்துவது சாத்தியமென்றும், ஆயினும் நிர்வாக சம்பந்தமான கஷ்டங்களை உத்தேசித்துத் தாம் ஜூலை மாதம் 14-ந் தேதி முதல் (சென்னையில் காங்கிரஸ் மந்திரி சபை ஏற்பட்ட தினம்) மூன்று வருஷ காலத்தை நிர்ணயித்திருப்பதாகவும் குறிப்பிட்டார்.

"கலால் வருமானம் நஷ்டமானால் அதைப்பற்றி நான் துளிகூட கவலைப்படவில்லை. முதல்தரமான தேசீயச் சீர்திருத்த விஷயத்தில் காங்கிரஸ் கட்சியினர் லாப நஷ்டத்தைக் கணக்கிட்டுக் கொண்டிருப்பராயின் மது விலக்கு ஒரு நாளும் சித்திக்காது." என்றும் அவர் குறிப்பிட்டார்.

மதுவிலக்கு விஷயமாக காங்கிரஸ் காரியக் கமிட்டி செய்த தீர்மானத்தை மகத்தான காரியமென மகாத்மாஜி அழைத்தார். மது விலக்கு முழக்கம் 1920-ம் வருஷத்தி

லேயே ஏற்பட்டதென்றும், அப்பொழுதிருந்து அது காங்கிரஸ் நிர்மாணத் திட்டத்தில் முதன்மை ஸ்தானம் வகித்து வந்திருக்கிறதென்றும், இந்தியாவின் எந்தப் பகுதியிலும் காங்கிரஸ் அதிகாரத்திற்கு வந்ததும்இதைத் தான் முதன்மையாகக் கவனிக்க வேண்டுமென்றும், காங் கிரஸ் பதவி வகிக்கும் ஆறு மாகாணங்களையும் (இப்பொ ழுது ஏழு) சேர்த்தாலும் கூட மதுவிலக்கினால் மொத்தம் 11 கோடி ரூபாய்தான் நஷ்டமேற்படுமென்றும் அவர் எடுத்துக் காட்டினார். காங்கிரஸ் உறுதிமொழியை நிறை வேற்றவும், போதையூட்டும் பானங்களை அருந்துபவர் களின் வாழ்க்கை பலதுறைகளிலும் கெட்டு விடுவதைக் காக்கவுமே காரியக் கமிட்டி மதுவிலக்கை அனுஷ்டிக்க வேண்டுமெனத் தீர்மானித் திருக்கிறதென்றும், இத்தீர் மானம் காங்கிரஸல்லாத மாகாணங்களுக்கும், இந்திய சமஸ்தானங்களுக்கும் சிறந்த வழிகாட்டியாக விளங்குகிற தென்றும் காந்திஜி அபிப்பிராயப்பட்டார்.

உத்தமமான லட்சியத்தை அடைவதற்கான தீவிர உணர்ச்சி நாட்டிலே பரவியிருப்பதில் மகாத்மா உறுதி யும், நம்பிக்கையும் கொண்டிருந்தார். "மது விலக்கு உண்மையாக நிறைவேறுவதாயின் அதன் சித்திக்காக நாம் மூன்று வருஷ காலம் காத்திருக்க வேண்டிய தில்லை. ஆறே மாதங்களில் நாம் அதைக் காண லாம். அதைக் கண்டவுடன் இதுகாறும் பின் வாங்கி யிருந்த மாகாணங்களும் சமஸ்தானங்களும் அதற் குத் தலை வணங்குவது திண்ணம்" என்று மகாத்மா கருதினார். எனவே நாட்டு மக்களின் ஆன்மார்த்த முன் னேற்றத்திற்காகக் காணப்பட்டுள்ள இவ்வியக்கத்திற்கு இந்தியாவிலுள்ள சகல கட்சியினரும், உலகிலுள்ள சிறந்த அறிஞர்களும் அனுதாபமும், ஆதரவும் காட்டுவரென

எதிர்பார்க்க காங்கிரஸுக்குச் சர்வ உரிமையுமுண்டு என்றும் அவர் எண்ணினர்.

மது விலக்கை அனுஷ்டிக்க காங்கிரஸ் மந்திரிகள் கடமைப்பட்டிருந்தனர். இயக்கத்தை ஆரம்பித்தாக வேண்டியிருந்தது. இக்காரியத்திற்கு காந்திஜிக்கு அடுத்த படியாக மது விலக்கு இயக்கத்தில் தீவிரப் பங்கெடுத்து உழைத்து வந்திருக்கும் சென்னைப் பிரதம மந்திரி **கனம் ஸ்ரீ இராஜகோபாலாச்சாரியாரை** விட அதிகத் தகுதி படைத்தவர்கள் யாரிருக்கிறார்கள்? இருபது வருஷங்களுக்கும் அதிகமாகக் குடியை யொழிக்க அவர் சலியாமல் ஊக்கம் காட்டி வந்திருக்கிறார். கிராமங்களிலேயே ஏழைமக்களின் மத்தியிலே பல வருஷகாலம் தங்கியிருந்து குடிப் பிசாசினால் அவர்களின் குடும்பங்கள் பாழ்பட்டு வருவதை அவர் நேரில் கண்டிருப்பவர்.

மதுவிலக்கு என்னும் ஆங்கில மாதப் பத்திரிகையின் ஆசிரியராக விருந்தவர். தமிழில் "**விமோசனம்**" என்னும் மாதப் பத்திரிகையை சொந்தத்தில் நடத்தி குடியின் கேடுகளை மக்களுக்குப் போதித்தவர். மது விலக்குத் துறையில் இந்தியாவில் இவரை விட அதிக அனுபவம் வாய்ந்தவர்கள் ஒருவருமில்லை யென்றும் கூறலாம்.

குடியை யொழிப்பதில் அவர் துடிப்பு மிகுந்தவர். இதில் துளிக்கூட தாமதம் காட்டப்படக் கூடாதென்பது அவர் நம்பிக்கை. எனவே அவரைப் பிரதம மந்திரியாகக் கொண்டசென்னை காங்கிரஸ் மந்திரி சபை இந்தியாவிலேயே முதல்முதலாக மதுவிலக்குத் துவஜாரோகணத்திலிறங்கியதில் ஆச்சரிய மெதுவு மில்லை.

---

## 19. சட்ட சபையில் மசோதா

ஜூலை மாத மத்தியில் ஸ்ரீமான் ஸி. ராஜகோபாலாச் சாரியார் தமது மந்திரி சபையை அமைத்தார். அப்பொழுது முதல் மதுவிலக்குத் திட்டத்தை எப்படி அமுலுக்குக் கொண்டுவருவது என்பதுபற்றி மந்திரிசபை யோசிக்கலாயிற்று. பதவி யேற்ற இரண்டு மாதங்களுக் குள் வரவு செலவுத் திட்டத்தை ஆஜர்படுத்தவேண்டிய நிர்ப்பந்த மேற்பட்டதாயினும் அதில் மதுவிலக்கிற்கு வகை காணப் பிரதம மந்திரி முயன்றது பெரிதும் பாராட் டத்தக்கதாகும்.

செப்டம்பர் மத்தியில் ஜனப்பிரதிநிதி சபை முன்பு கனம் ராஜாஜி தமது வரவு செலவுத் திட்டத்தைச் சமர்ப் பித்துப் பேசுகையில் 1937-ம் வருஷம் அக்டோபர் மாதம் முதல் தேதியிலிருந்து சேலம் ஜில்லாவில் பூரண மது விலக்கை அனுஷ்டிக்கச் சர்க்கார் முடிவு செய்திருக்கின் றன ரென்றும், அங்குள்ள எல்லாக் கள்ளு, சாராயக்கடை களும் மூடப்படுமென்றும் அவர் அறிவித்ததைத் தமிழ்நாடு மட்டுமென்றி இந்தியா தேசமே உவகையுடன் வரவேற்றது.

"மக்களின் க்ஷேமத்திற்கு மது விலக்கு மிகவும் அவசியமானதாகையால் அதனால் என்ன நஷ்ட முண் டானாலும் சரி, அதை உடனே ஆரம்பித்துத் தீருவதே சரி என்று நாங்கள் உணர்ந்தோம். மாகாணத்தின் செல்வத் துறை அஸ்திவாரத்தில் குடி மூல்யமான வரு மானத்திற்கு முக்கியஸ்தானம் அளிக்கப் பட்டிருப்பதால் மதுவிலக்குக் காரியம் சிக்கலாக இருந்து வந்திருக்கிறது. குடி வியாபாரத்தில் ஈடுபட்டு அதன் மூலமாகச் சம்பாத் தியத்தைப் பெற்று ஜீவித்து வந்த குடும்பத்தினருக்கு வேறு ஜீவனத்தைத் தேடித்தரவேண்டிய பொறுப்பு சர்க்-

காருக்கிருக்கிறது. இது போன்ற இன்னும் பல பிரச்னை களுமிருக்கின்றன. இவற்றை யெல்லாம் தீர்த்து வைக்க வேண்டி யிருப்பதால் சர்க்கார் மதுவிலக்கை படிப்படி யாக அநுஷ்டானத்திற்குக் கொண்டு வருவதென முடிவு செய்திருக்கின்றனர்'' என்று ஸ்ரீமான் இராஜகோபாலாச் சாரியார் கூறினர்.

சேலம் மதுவிலக்கு வெறும் பரீட்சார்த்தமல்ல வென் றும், அது மது விலக்குத் திட்டத்தின் முதல் படி என்றும் கனம் ராஜாஜி எடுத்துரைத்தார்.

"எங்கள் கொள்கையை நாங்கள் இறுதியாக முடிவு செய்துவிட்டோம்; இனி அதனின்றும் பின்வாங்குவ தென்பதில்லை'' என்று அவர் உறுதியாக உரைத்தார். "திட சங்கல்ப மில்லாத ஜனங்களின் வாழ்வைக் கெடுத்து, அவர்களது குடும்பங்களைச் சேர்ந்த ஸ்திரீகளை யும், குழந்தைகளையும் பட்டினி போடவல்ல பொல்லாத் தூண்டுதல்களை ஏற்படுத்துவதில் சர்க்கார் உடந்தையாக விருப்பது தவறு என்பது எங்கள் உறுதி. செல்வத் துறையான சரிக்கட்டுதலுக்குச் சிறிது அவகாசம் வேண் டும்; மதுவிலக்கை அநுஷ்டிப்பதில் அநுபவம் வேண் டும். இவ்விரண்டு மிருந்து விட்டால் மாகாணம் பூராவும் மதுவிலக்கை அநுஷ்டிப்பது சாத்தியமாகி விடும். சேலத்தில் மதுவிலக்கை ஆரம்பிப்பதால் நமக்கு 26 லட் சம் ரூபாய் நஷ்ட மேற்படுகிறது. ஆனல் அதனல் ஏற் படும் லாபமென்ன? சேலம் ஜில்லாவிலுள்ள விவசாய மக் களிடமும், தொழிலாள வகுப்பினரிடையேயும் வருஷா வருஷம் ஒரு கோடி ரூபாய்க்குக் குறையாத தொகை தங்கிப் பல காரியங்களுக்குப் பயன்படுகிறது. மது விலக்கை நாம் விஸ்தரிக்க விஸ்தரிக்க இந்த அநுகூலமும் அதிகரிக்கும். ஆனல் ஒரே அடியில் மாகாணம் பூராவும்

மதுவிலக்கை அனுஷ்டித்துவிடவேண்டு மென்பவர்களைச் சற்று பொறுமையுட னிருக்கும்படி நாம் கேட்டுக் கொள்ள வேண்டி யிருக்கிறது'' என்றார் கனம் இராஜ கோபாலாச்சாரியர்.

சர்க்காரின் முடிவைப் பல பிரமுகர்கள் வரவேற்ற னர். முன்னம் கவர்னராக வேலை பார்த்தவரும், '**ஜஸ் டிஸ்**' கட்சியின் தலைவர்களில் ஒருவரும், சென்னை ராஜாங்கசபை எதிர்க்கட்சித் தலைவருமான **ஸர் முகம்மது உஸ்மான்** மதுவிலக்குத் திட்டத்திற்காக மந்திரி சபை யைப் பாராட்டி, இவ் விஷயத்தில் அது காட்டியுள்ள உறுதியையும், சிரத்தையையும் சிலாகித்தார். சர்க்கா ரின் மதுவிலக்குக் கொள்கை வெறும் பரீட்சார்த்தமல்ல என்பதைக் கேள்வியுற்று அவர் சந்தோஷமடைந்தார்.

மது விலக்கை ஆதரித்தவர்கள் சீர்திருத்தத்தை எவ் வளவு குதூகலத்துடன் வரவேற்றார்களோ அதைப்போல் மதுவிலக்கை எதிர்த்தவர்கள் தீவிரமாக அதை எதிர்த்த னர். மது விலக்குத் திட்டத்திற்கான அவர்களது ஆட் சேபணைகள் மூன்றாகும். நாளெல்லாம் உழைத்ததற்குப் பிறகு தங்கள் அலுப்பையும், சிரமத்தையும், கவலையையும் மறந்திருப்பதற்கான சாதனம் ஏழை மக்களுக்குக் குடி ஒன்றுதான். பாமர மக்களின் சகஜமான குடியாகிய கள்ளு அவ்வளவாகத் தீமை பயப்பதில்லை யாதலால் மது விலக்கை ஏற்படுத்துவதற்கே அவசிய மில்லை என்பது முதல் ஆட்சேபம். என்னதான் உஷாராக விருந்தாலும் திருட்டுத்தனமாக மது வகைகள் தயாரிப்பது நிற்கா தாதலால் மதுவிலக்கு பயன்பெறாது என்பது இரண்டா வது ஆட்சேபம். சர்க்காருக்குப் பெருத்த நஷ்ட மேற் படுவதுடன் நாட்டிற்கு எவ்வித அனுகூலமு முண்டாகா தெனக் கருதப்பட்டது. மனித சுபாவம் மாறினாலல்

லாது மது விலக்கு வெற்றிபெறு தென்பது மூன்றுவது ஆட்சேபம். குடிப்பழக்கத்தில் ஊறிப் போனவர்கள் மதுவிலக்கு இருந்தாலும் சரி இல்லாவிடினும் சரி குடித்துக் கொண்டுதானிருப்பார்கள் என்றும் இந்தக் கோஷ்டியினர் கூறினர்.

வரவு செலவுத் திட்டத்திற்குப் பதிலளிக்கையில் அனைவரையும் நம்பிக்கை கொள்ளப் பிரதம மந்திரி வேண்டினர். குடிப்பதற்கான தூண்டுதல்களிருப்பதால் தான் இந் நாட்டில் மக்கள் குடிக்கின்றனரே யன்றி, கடைகளையொழித்து விட்டால் அவர்கள் குடிக்க மாட்டார்களென்றும் அவர் குறிப்பிட்டார்.

"ஏழை மக்களின் மத்தியிலே நான் பல வருஷ காலம் வசித்திருக்கிறேன். "இந்தக் கள்ளுக்கடைகளினின்றும் நீங்கள் எங்களைக் காக்க மாட்டீர்களா?" என அவர்கள் என்னை எத்தனையோ தடவை கேட்டிருக்கிறுர்கள். அப்படியிருக்கையில் நான் பதவியிலிருக்கும் பொழுது அவர்களையும், அவர்களது கோரிக்கையையும் என்னமாக மறக்க முடியும்? என்னுடைய முயற்சியில் ஒரு வேளை நான் வெற்றி பெறுமலிருக்கலாம்; ஆனல் நான் முயற்சி செய்ய என்னமாக மறுக்க முடியும்? அவர்களுடைய பணம் நமக்கு வேண்டி யிருப்பதால் நாம் இந்த முயற்சியி லிறங்காமலிருந்து விடுவதா? கள்ளுக் கடைக்குப் போய் குடிப்பவர்களின் குடும்பங்களைச் சேர்ந்த பெண்மணிகள் இந்தக் கள்ளுக் கடைகளால் தங்கள் வாழ்வே கெட்டு விடுவதாகவும் ஆகவே இவற்றை எடுத்து விடுமாறும் நம்மை மன்றுடிக் கேட்டுக் கொள்ளுகையில் இந்தக் கடைகளை நாம் வைத்துக்கொண்டிருப்பது சுத்த அற்பத்தனம் என்றே நான் சொல்லுகிறேன். ஏழை மக்கள் சுகமாக வாழவேண்டு

மென்பதில் எல்லோரும் ஒரு மனப்பட்டிருக்கிறார்கள். அப்படியிருக்கையில் கள்ளுக் கடைகளை யொழிக்கும் விஷயத்தில் நாம் சிரத்தை செலுத்த வேண்டாமா? குடி வெறிக்கும், குடிக்கும் வித்தியாசமிருக்கிறது. குடியில் ஊறிப் போனவர்களின் குடி வெறியைக் கண்டு கூட நான் அஞ்சவில்லை. பகிரங்கமாகவும், உள்ளன்புடனும் சொல்கிறேன். குடி வெறியில் ஊறிப்போயுள்ளவர்களைப் பற்றி எனக்கு கவலையில்லை. அவர்கள் எப்படியாவது தொலைந்து போகிறார்கள். ஆனால் மிதக் குடியினால் வருங்கால சந்ததியினருக்கு ஏற்படும் ஆபத்தைக் கண்டுதான் நான் நடுங்குகிறேன்; ஏனெனில் இன்று மித மாக விருப்பது நாளைக்கும் மிதமாகவே இருப்பதில்லை.

"மதுவிலக்குத் திட்டத்தை ஆரம்பிப்பதில் சர்க் காருக்கு நஷ்டமுண்டாகிறதெனச் சிலர் கூறினர். குடி வியாபாரத்தைச் சர்க்கார் நடத்தவே கூடாது. செல்வம் சீரழிந்து போவதாயினும் சரி ஜனங்களைக் குடிக்கும்படி சர்க்கார் விடக்கூடாது; குடிப்பதில் என்னென்ன தடை களை விதிக்க முடியுமோ அத்தனையையும் விதிக்கவேண்டி யது சர்க்கார் கடமை. ஏழை மக்களிடமிருந்து இத் தகைய வழிகளில் பணத்தைக் கொள்ளையடித்தால் தான் துரைத்தனத்தை நடத்த முடியுமென்றால் அத்தகைய துரைத்தனத்திற்கு ஆட்சி புரியத் தகுதியே யில்லை.

"மதுவிலக்கு விஷயமாக மறு தேர்தலுக்கு நிற்க நான் தயார். குடிப்பவர்கள் மீது நாம் வரி சுமத்த முடி யாது. குடித்தீமைக்கு இடம் கொடுக்கவும் முடியாது. இந் தத் தேசத்தை நான் ஆள வேண்டுமென நீங்கள் விரும்பு கிறீர்களா? வேண்டாமாயின் என்னைத் தள்ளி விடுங்கள். ஆனால் நீங்கள் உங்கள்மீது கொஞ்சம் அதிக வரிகளை ஏற் றுக்கொள்ளாமல் நாங்கள் இந்தச் சர்க்காரை நடத்தமுடி

யாது. இல்லையேல் சில வசதிகளைக் கைவிடத் தயாராக விருக்கவேண்டும் என்று நான் மகா ஜனங்களுக்கும், வாக்காளருக்கும் சொல்லுவேன். கள்ளுப் பானை மூலமாக ஏழையினிடமிருந்து பணத்தைப் பறிக்காமல் வேறு வழிகளில் சௌகரியங்களை ஏற்படுத்திக் கொள்ள விரும்பினால் தேச மக்கள் இன்னும் சில அதிகமான வரிகளைத் தாங்கத் தயாராக விருப்ப ரென்பதில் எனக்குப் பூரண நம்பிக்கையுண்டு.

"இந்த மசோதா தான் இம்மாகாணத்தில் நமது சர்க்காரின் கியாதியை நிலைநாட்டவோ அல்லது கெடுக்கவோ போகிறது. இந்தத் தீரமான துறையில் இறங்குவதற்கு ஒரு சந்தர்ப்ப மளிக்கும்படி நான் இந்தச் சபையை வேண்டிக் கொள்ளுகிறேன்." என்று ராஜாஜி கூறினார்.

தனிக் கமிட்டியொன்று மசோதாவைப் பரிசீலனை செய்து ஒரு சில மாறுதல்களைச் செய்ததும் மசோதா இரண்டு சபைகளிலும் சில மணி நேரங்களுக்கு விவாதிக்கப்பட்டுச் சட்டமாயிற்று. மேன்மை தங்கிய கவர்னர் அவர்களது அங்கீகாரமும் அதற்குக் கிடைத்தது.

---

## 20. கள்ளரக்கன் வதம்

*எனது சர்க்கார் மேற்கொண்டுள்ள மது விலக்குக் கொள்கையைப் பலர் ஆதரித்து மிருக்கின்றனர்; பலர் எதிர்த்து மிருக்கின்றனர். ஆனால் தேச மக்களின் க்ஷேமத்தைக் கோரித்தான் இந்த முயற்சி ஆரம்பிக்கப்பட்டிருப்ப தென்பதில் ஒருவரும் சந்தேகம் கொள்ள முடியாது.*

—எர்ஸ்கின் பிரபு
(சென்னைக் கவர்னர்)

**1937**-ம் வருஷம் அக்டோபர் மாதம் 1-தேதியன்று **சேலத்தில் மதுவிலக்கு அமுலுக்கு வந்தது.** முதல் நாள் இரவு ரெவினியூ அதிகாரிகளின் மேற்பார்வையில் ஒவ்வொரு தாலுகாவிலுமுள்ள கள்ளு, சாராயக் கடைகள் யாவும் மூடப்பட்டன; இதர வகையான போதையூட்டும் சரக்குகள் விற்கப்பட்டு வந்த கடைகளும் மூடப்பட்டன. இவை யாவற்றிற்கும் ஸீல் வைக்கப்பட்டது. விற்பனையாகாமலிருந்த மதுவகைகள் எல்லாம் அழிக்கப்பட்டன. அவ்வப்பொழுது குடித்து வந்த போலீசாரிடமிருந்து அவர்கள் இனிமேல் கண்டிப்பாகக் குடிப்பதில்லை என்று உறுதி மொழி வாங்கப்பட்டது. உறுதிமொழியை மீறினால் கடுமையான தண்டனை கிடைக்குமென அவர்களுக்குக் கூறப்பட்டது. போலீசாரில் குடிப் பழக்கத்திற்கு ஆளாகிக் கிடந்தவர்கள் வேறு ஜில்லாக்களுக்கு மாற்றப்பட்டனர்.

கிராமந்தோறும் மதுவிலக்குப் பிரசாரம் தொடங்கப்பட்டது. மதுவிலக்குத் திட்டத்தின் தத்துவம் மகா ஜனங்களுக்கு எடுத்துரைக்கப் பட்டது. அக்டோபர் முதல் தேதியிலிருந்து 10 தினங்களுக்குப் பிரதம மந்திரி

கனம் ராஜாஜியும், கலால் மந்திரி கனம் வி. ஐ. முனுஸ்வாமி பிள்ளையும், விளம்பர மந்திரி கனம் எஸ். ராமநாதனும் சேலம் ஜில்லாவில் சுற்றுப்பிரயாணம் செய்தனர். சென்றவிடமெல்லாம் மக்கள் அவர்களை ராஜோபசாரமாக வரவேற்றனர். மக்கள் காட்டிய உற்சாகத்திற்கு அளவேயில்லை. ஸ்திரீகளும், குழந்தைகளும் மந்திரிகளைத் தங்கள் குடும்பங்களுக்குச் சௌக்கியத்தையும், சந்துஷ்டியையும் கொண்டுவந்த தேவ தூதர்களாகக் கொண்டாடினர். கள்ளரக்கன் தொலைந்த நற் செய்தியை ஒருவருக்கொருவர் சொல்லிக் கொண்டு களிக் கூத்தாடினர். தொலைந்தது குடி, உயர்ந்தது வாழ்வு என்ற கோஷமே எங்கும் ஒலித்தது. வறுமையினின்றும், பட்டினியினின்றும் தங்களைக் காக்க முற்பட்ட காங்கிரஸ் மந்திரிகளைப் பல்லாயிரக் கணக்கான கைகள் கூப்பி நமஸ்கரித்தன; பல்லாயிரக்கணக்கான வாய்கள் அவர்களை வாழ்த்தின; பழைய சேலம் போய் புதிய சேலம் சிருஷ்டியாகி விட்டதென மக்கள் உணர்ந்தனர்.

தாலுகா தாலுகாவாக மந்திரிகள் விஜயம் செய்து பல்லாயிரக் கணக்கானவர்களடங்கிய பொதுக்கூட்டங்களில் பேசினர். குடிக்கும் பழக்கத்தை விட்டொழிக்கும்படி அவர்கள் மகாஜனங்களை வேண்டினர். புருஷர்களைத் தீய வழக்கத்தி லிறங்காமல் பார்த்துக்கொள்ளும்படி அவர்கள் ஸ்திரீகளைக் கேட்டுக் கொண்டனர்.

ஜில்லா பூராவும் சிதறிக் கிடந்த மதுபானக் கடைகளில் பல ஒரே ராத்ரியில் வாசகசாலைகளாகவும், விளையாடு மிடங்களாகவும், பஜனை மடங்களாகவும் மாறின. சமூகத் தொண்டர்கள் கிராமம் கிராமமாகச்சென்று மது விலக்குச் செய்தியைப் பரப்பினர். கள்ளரக்கன் வதையை ஜில்லா முழுதும் மக்கள் திருவிழாப்போல் கொண்டாடி

னர். கள்ளுப்பானைகளும், சாராயப் புட்டிகளும் தடிகளால் அடித்து உடைக்கப்பட்டதே இத் திருவிழாவின் லட்சணம். குடிப்பழக்கத்தில் மூழ்கி, அதற்கு அடிமையாகிக் கிடந்தவர்களில் பலரும் பொழுது விடிந்தால் கள்ளு, சாராயம் எதுவும் அகப்படாதே என்பதற்காக 1937-ம் வருஷம், செப்டம்பர் மாதம் 30-ந் தேதி யன்று இரவே தங்கள் மனம் குளிரக் குடித்தனர்.

சேலம் மதுவிலக்கு சேலம் ஜில்லாவில் மட்டு மன்றி, சென்னை மாகாணத்தில் மட்டுமன்றி, இந்தியா பூராவு மட்டு மன்றி, உலகத்திலேயே புதிய விழிப்பை உண்டு பண்ணியது. இங்கிலாந்திலுள்ள மிதக் குடிப் பிரசாரகர்களும், சீமைப் பத்திரிகைகளும் இந்தச் சீர்திருத்தத்தை உவகையுடன் வரவேற்று, இதற்குக் காரண மானவர்களுக்கு ஆசி வழங்கினர்.

லண்டனிலுள்ள சுதேசிகள் சங்கக் காரியதரிசியும் சாராய வியாபார ஐக்கியக் கமிட்டிக் காரியதரிசியும் (இவற்றின் தலைவர் வெஸ்ட்மின்ஸ்டர் கோமகன்) காண்டர்பரி பாதிரியாரும், யார்க் பாதிரியாரும், இதர பாதிரிமார்களும் சென்னையில் மதுவிலக்கை அங்குரார்ப்பணம் செய்ததற்காக இந்திய மகா ஜனங்களுக்கு ஆசிகூறி, தங்கள் பாராட்டைத் தெரிவித்தனர். கிறிஸ்தவர்கள், பாதிரிமார்களின் சங்கங்கள் இவற்றின் பூரண ஆதரவு மதுவிலக்குக்குக் கிடைத்தது. தென்னிந்திய ஐக்கிய கிறிஸ்தவர்களின் பொதுச் சபையும், இந்தியத் தேசிய கிறிஸ்தவ சபைக் காரியதரிசியும், மாணவர் கிறிஸ்தவ இயக்கத்தின் பொதுக் காரியதரிசியும் சென்னைச் சர்க்காரின் முயற்சிகளைப் பாராட்டியும், மதுவிலக்குத் திட்டத்திற்குப் பூரண ஆதரவளிக்கத் தயாராக விருப்பதாக உறுதி கூறியும் தீர்மானங்கள் நிறைவேற்றினர்.

1937-ம் வருஷம் கிறிஸ்துமஸ் வாரத்தில் கல்கத்தாவில் இந்தியக் கிறிஸ்தவர்கள் அகில இந்திய மகாநாட்டில் மதுவிலக்கை ஆதரித்துத் தீர்மானமொன்று நிறைவேறியதுடன், இச்சீர்திருத்தத்திற்குத் தங்கள் முழு ஆதரவையும் அளிக்குமாறு கிறிஸ்தவ, ஸ்தாபனங்களையும், பாதிரிமார்கள் சங்கங்களையும், மாதா கோயில்களையும் மகாநாடு கேட்டுக் கொண்டது.

> 'இன்று பலரது கண்களும் சேலத்தையே நோக்குகின்றன. எனது சர்க்கார் மேற்கொண்டுள்ள மது விலக்குக் கொள்கையைப் பலர் ஆதரித்து மிருக்கின்றனர்; பலர் எதிர்த்துமிருக்கின்றனர். ஆனல் தேசமக்களின் க்ஷேமத்தைக் கோரித்தான் இந்த முயற்சி ஆரம்பிக்கப்பட்டிருக்கிற தென்பதில் ஒருவரும் சந்தேகம் கொள்ள முடியாது'

சென்னைக் கவர்னர் மேன்மை தங்கிய எர்ஸ்கின் பிரபுவின் வார்த்தைகள் இவை. 1937-ம் வருஷம், அக்டோபர் மாதம் சேலம் ஜில்லாவில் சுற்றுப் பிரயாணம் செய்கையில் அவர் இக்கருத்துக்களை வெளியிட்டார்.

காயமுண்டுபண்ணுதல், அடித்தல் முதலியவை போன்ற சிறு குற்றங்களுக்கான காரணங்களில்குடி மயக்கம் ஒன்று. ஆனல் மது விலக்கை ஏற்படுத்தியதற்குப் பிறகு சேலம் ஜில்லாவில் இத்தகைய குற்றங்களெல்லாம் குறைந்து விட்டன. ஒரு சில மாதங்களுக்குள்ளேயே இத்தகைய குற்றங்கள் 50 சத விகிதம் குறைந்து விட்டதாகப் போலீஸ் அறிக்கை ஒன்றில் குறிப்பிடப்பட்டிருந்தது.

"கிராம வாழ்விற் குகந்த தமாஷாக்களை அந்தந்த இடத்தின் நிலைமைக் கேற்றவாறு ஏற்படுத்த முயற்சி செய்ய வேண்டும். முன்பு குடித்துக் கொண்டிருந்து இப்பொழுது அதை விட்டுவிட்டதால் கையில் சொற்ப

தொகையைச் சேர்த்து வைத்திருப்பவர்களின் பணத்தைச் சேவிங்ஸ் பாங்கிகளிலும், கூட்டுறவு சொஸைடிகளிலும் போட்டு வைக்க ஏற்பாடு செய்ய வேண்டும்.'' என்று தமது வேண்டுகோளில் ஸ்ரீமான் இராஜகோபாலாச்சாரியார் குறிப்பிட்டார்.

மேற்குறித்த வேலைகளை நிர்மாணிப்பதற்காக சர்க்கார் கிராம அபிவிருத்தி அதிகாரி என்று பிரத்யேகமாக ஒரு அதிகாரியை நியமித்தனர். கலெக்டருக்கு உதவியாக இருந்து கிராம நிர்மாணத் திட்ட வேலைகளை நிறைவேற்றுவதே இவரது வேலை எனச் சர்க்கார் தங்கள் அறிக்கை யொன்றில் கூறினர்.

இந்தச் சீர்திருத்தத்தால் தங்களுக்கு எவ்வளவோ நன்மைகள் ஏற்பட்டிருக்கிறதென்பதை சேலம் ஜில்லா வாசிகள் ஒப்புக்கொள்ளுகிறார்கள். முன்பு கள்ளுக் கடைக்குப் போய்க் கொண்டிருந்த காசு இப்பொழுது குடும்பச் செலவுக்காக உபயோகிக்கப்படுகிறது. இப்பொழுது தொழிலாளி தானும் நன்றாக உண்டு, உடுத்துகிறான்; வீட்டிலுள்ளவர்களும் சுகமாக வாழ்கிறார்கள்; குழந்தைகளும் சௌக்கியப்படுகின்றன. எல்லோரும் வயிறாரப் புசித்துப் போதுமான ஆடை அணிந்து மகிழ்கிறார்கள். இன்று சேலம் ஜில்லாவிலுள்ள எல்லாக் கிராமங்களிலும் இதே மாறுதல்தான் ஏற்பட்டிருக்கிறது. எனவே இவ்வெற்றியைக் கண்ட சர்க்கார் 1938-ம் வருஷம் அக்டோபர் மாதம் முதல் கடப்பை, சித்தூர் ஜில்லாக்களிலும் மது விலக்கை அனுஷ்டிக்க முடிவு செய்து விட்டார்கள்.

**திரு ஜான் பர்னபாஸ்** என்பவர் பெரிய சீர்திருத்தக்காரர். இவர் சமீபத்தில் மகாத்மாவின் “ஹரிஜன்” பத்திரிகைக்கு ஒரு கட்டுரை எழுதி, மதுவிலக்கின் சமூக அம்சத்தைப் பற்றி அதில் சில விஷயங்களைக் குறிப்பிட்

டிருந்தார். சாதாரண மனிதன் வேண்டுமென்றே குடிக்க வில்லையென்றும், தன்னுடைய கவலையும், அலுப்பும் தீருவதற்காகவே அவன் கள்ளுக் கடைக்குப் போகிருனென்றும் வேறு வகையில் வாழ்வில் மகிழ்ச்சியும், சந்துஷ்டியும் பெற அவனுக்கு மார்க்க மில்லாத்தாலேயே அவன் அங்கு செல்கிருனென்றும், கள்ளுக் கடைகளை ஒழித்ததும் இதே அனுபவங்களை அவன் பெறுவதற்கான வேறு சாதனமொன்றை நிறுவ வகை செய்யவேண்டுமென்றும் அவர் எடுத்துரைத்தார். காந்திஜி இந்த யோசனையை ஏற்று, இக்கட்டுரையைக் கலால் மந்திரிகள் வாசிக்கும்படி சிபார்சு செய்தார். "ஒவ்வொரு கள்ளு, சாராயக் கடையும் சிற்றுண்டிக்கடையாக மாற்றப்படவேண்டும்" என்பதை அவர் வற்புறுத்தினுர்.

இத்தேவையின் அவசியத்தை சென்னைச் சர்க்கார் உணர்ந்திருக்கின்றனர். மேற்படி யோசனையை நிறைவேற்ற வேண்டுமென்பதை கனம் ராஜாஜி ராஜாங்க சபையில் ஒப்புக் கொண்டார். இதை எந்தெந்த வகைகளில் செய்யலாம் என்பது குறித்துச் சிந்திக்கக் கொஞ்சம் அவகாசம் வேண்டுமென்றும் அவர் கோரினுர்.

"**நாற்பது வருஷகாலத்தில் சென்னை மாகாணத்தின் முன்னேற்றம்**" என்ற சிறந்த நூலின் கர்த்தாவான **திவான்பகதூர் எஸ். ஸ்ரீனிவாஸ ராகவய்யங்கார்** கலால் வருமானம் பூராவையும் மக்களின் நல்வாழ்வைப் பெருக்குவதற்கான துறைகளில் செலவிடப்பட வேண்டும் என்று கூறினுர். மக்களின் சன்மார்க்க நெறியையும், அறிவையும் வளர்க்க வேண்டுமென அவர் வற்புறுத்தினர்.

கள்ளு, சாராயக் கடைகளுக்குப் பதிலாக வாசகசாலைகள், நந்தவனங்கள், ரேடியோ (ஒலிபரப்பும்) வசதிகள், விளையாடு மிடங்கள், சிற்றுண்டிக் கடைகள் இவற்றை

## ‘நான் சர்வாதிகாரியானுல்—’

இந்திய நாட்டிற்கு சர்வாதிகாரியாக என்னை ஒரு மணி நேரத்திற்கு நியமித்தால் எல்லாக் கள்ளுக் கடைகளையும் மூடுவது தான் எனது முதல் வேலையாக இருக்கும்.

அடுத்தபடியாக தொழிற்சாலைகளில் தொழிலாளிகளுக்குக்கென்று சிறந்த பானங்களும், விளையாட்டுகளும் கிடைக்கும்படி செய்வேன். அவ்வாறு செய்வதற்குப் பணமில்லை யென்று முதலாளிகள் சொல்லுவார்களானுல் அவர்களது தொழிற்சாலைகளை மூடி விடுவேன்.

இந்த நாட்டிலுள்ள ஐரோப்பியர், வியாதியஸ்தர் முதலியவர்களுக்கு பிராந்தி வேண்டுமானுல் அதைச் சர்க்கார் செலவில், பெரிய வைத்தியர்களின் மேற்பார்வையில் வழங்குவதற்கு ஏற்பாடு செய்வேன்.

—மகாத்மா காந்தி



## கள்ளுக்

இருந்தால்—

பண விரயம், போதைத் தொல்லை, அறிவு மயக்கம், வறுமை, தரும நாசம், வீட்டில் அடிதடி, கொலை களவு புரிதல், போலீஸ் தண்டனை.

## கடைகள்

ஒழிந்தால்—

காசு சேர்க்கை, கவலை நீக்கம், வயிறார உணவு, சண்டை சச்சரவின்மை, சந்துஷ்டி வாழ்வு, சத்காலக்ஷேபம்.



## இயந்திரம் பாழாவதா ?

மனிதனுடைய தேகத்திற்கு என்ன விலை மதிப்பிடலாம் ? கோடி ரூபாய் கொடுத்தாலும் இந்த இயந்திரத்தை நம்மால் செய்ய முடியாது. தன்னைத் தானே பழுது பார்த்துக் கொள்ளும் விசித்திர சக்தி அதற்குண்டு. பகுத்தறிவு என்னும் அதி நுட்பமான சக்தி இந்த இயந்திரத்தின் ஒரு சிறப்பான அமைப்பு.

இந்த அமைப்பு கெட்டுப் போகும்படியாக கள்ளையும், சாராயத்தையும் உள்ளே கவலையின்றி செலுத்துவது என்ன அறியாமை ? தினம் ஒரு தடவை கெட்டுப் போய், தடுமாறி, தலை கீழாக நடத்தப்பட்டு வந்தால் எந்த இயந்திரம் தான் சரியாக வேலை செய்யும் ? விலை மதிப்பற்ற ஒரு இயந்திரத்தை இங்ஙனம் பாழ்படுத்தலாமா ?

*சக்கரவர்த்தி இராஜகோபாலாச்சாரியார்*

ஏற்படுத்த வேண்டு மென்பதே மகாத்மாஜியின் அபிப்பிராயம்.

ஆனால் இத்துறைகளில் இறங்கி சர்க்காராலேயே எல்லாவற்றையும் செய்துவிட முடியாது. ஏனெனில் புதிய சர்க்கார்கள் மது விலக்கு போல் இன்னும் எத்தனையோ திட்டங்களில் கவனம் செலுத்த வேண்டியிருக்கிறது. ஆகவே மதுவிலக்கைப் பூரண வெற்றியுடன் நடத்திவைக்க வேண்டிய மகத்தான பொறுப்பு மகாஜனங்களையே சார்ந்திருக்கிறது. உத்தியோகப்பற்றற்ற ஸ்தாபனங்கள் இத்தகைய வேலைகளைச் செய்ய முன் வர வேண்டும்.

இந்தியாவில் மதுவிலக்கை அங்குரார்ப்பணம் செய்த பெருமை சென்னைக்கே உரியது. காங்கிரஸ் அதிகாரத்திலுள்ள இதர மாகாணங்களில் பலவும் ஏற்கனவே சென்னையைப் பின்பற்ற ஆரம்பித்து விட்டன. படிப்படியாக மது விலக்கை அனுஷ்டிப்ப தென்று அவையும் முடிவு செய்திருக்கின்றன. திட்டத்தின் அம்சங்கள் மகாணத்திற்கு மகாணம் மாறுப்பட்டிருப்பினும் கொள்கை என்னமோ ஒன்று தான்.

குறை கூறுபவர்கள் சேலம் மதுவிலக்கிற்கு எந்த வகைகளில் கரிபூச முற்பட்டாலும் சரி அது வெற்றிகரமாக நடந்து வருகிற தென்பதில் துளிகூட சந்தேகமேயில்லை. நிஷ்பட்சபாதமாக நோக்குபவர்கள் இக்கருத்தையே வெளியிட்டு வருகிறார்கள்.

---

# சென்னை
# மது விலக்குச் சட்டம்

சென்னைப் பிரதிநிதி சபையிலும், ராஜாங்க சபையிலும் நிறைவேறி 1937-ம்வருஷம், அக்டோபர் மாதம் 1-ந்தேதி யன்று மேன்மை தங்கிய கவர்னவர்களின் அங்கீகாரத்தைப் பெற்ற சென்னை மதுவிலக்குச் சட்டத்தின் பூரா விவரமும் சர்க்காரால் பிரசுரிக்கப் பட்டுள்ளபடி கீழே தரப்பட்டிருக்கிறது :—

## 1937-ம்வருத்து 10-வது சட்டம்

**சென்னை மாகாணத்தில் போதையுண்டாக்கத்தக்க மதுவகைகளையும் லாகிரி வஸ்துக்களையும் செய்வதையும் விற்பனை செய்வதையும் உபயோகிப்பதையும் தடுக்தும் ஏற்பாட்டை பரவச்செய்வதற்கான சட்டம்.**

வைத்திய சம்பந்தமான அல்லது சாஸ்திர சம்பந்தமான அல்லது கைத்தொழில் சம்பந்தமான காரியங்களுக்காகவாவது அவைகளைப் போன்ற காரியங்களுக்காகவாவது அன்றி மற்றப்படி, சென்னை மாகாணத்தில் போதையுண்டாக்கத்தக்க மது வகைகளையும் லாகிரி வஸ்துக்களையும் உண்டாக்குவதையும், செய்வதையும், வைத்திருப்பதையும், எற்றுமதி செய்வதையும், இறக்குமதி செய்வதையும், கொண்டுபோவதையும், விலக்கு வாங்குவதையும், விற்பனை செய்வதையும், உபயோகிப்பதையும் தடுக்கும் ஏற்பாட்டைக் கூடிய சீக்கிரத்தில் அமுலுக்குக் கொண்டுவருவது யுக்தமா யிருக்கிறபடியாலும்,

ஷை மாகாணத்தில் பொறுக்கியெடுத்த சில விஸ்தீர்ணங்களில் மேற் சென்ன ஏற்பாட்டை அமுலுக்குக் கொண்டுவந்து, அங்கே ஏற்படும் அனுபவத்தையொட்டி மாகாணத்தின் இதர விஸ்தீர்ணங்களிலும் அந்த ஏற்பாடு வியாபிக்கும்படிச் செய்

வது மூலமாய் அதை அனுஷ்டானத்துக்குக் கொண்டுவருவது உசிதமாயிருக்கிறபடியாலும்,

இதனுல் விதிக்கப்படுவது என்னவென்ருல்:—

## 1-ம் அத்தியாயம்.—பீடிகை.

1. (1) இந்தச் சட்டத்தை மதுவிலக்கைக் குறித்த சென்ன பட்டணம் 1937-ம்ஞூத்திய சட்டம் என்று சொல்லலாம்.

(2) இது சென்னை மாகாணம் முழுமையும் வியாபிக்கும்.

(3) (a) இந்தப் பிரிவும் 3-வது, 6-வது பிரிவுகளும் சென்னை மாகாணம் முழுமையிலும் உடனே அமுலுக்கு வரத் தொடங்கும்.

(b) இந்தச் சட்டத்தில் மீதியுள்ள பாகம்—(i) சேலம் ஜில்லாவில் உடனேயும், (ii) சென்னை மாகாணத்திலுள்ள வேறே யாதொரு பிரதேச விஸ்தீர்ணத்தில் மாகாண கவர்மெண்டார் விளம்பர மூலமாய் நியமிக்கக்கூடிய தேதியன்றைக்கும் அமுலுக்கு வரத் தொடங்கும்.

2. இந்தச் சட்டத்தில் கண்ட 1-வது, 3-வது, 6-வது பிரிவுகள் தவிர இதர நிபந்தனைகள் யாதொரு பிரதேச விஸ்தீர்ணத்தில் அமுலுக்கு வரத் தொடங்கும் தேதியிலிருந்து ஷெட்யூலில் கண்ட சட்ட திட்டங்கள் அந்த ஷெட்யூலில் நாலாவது கலத்திலே குறிப்பிட்டுள்ள அளவுக்கு ஷை விஸ்தீர்ணத்தில் செலா வணியாவது நின்றுபோகும்.

ஆனுல், மாகாணகவர்மெண்டார் விளம்பரம் பிரசுரித்து அதன் மூலமாய், இந்த ஆக்டில் கண்ட 1-வது 3-வது 6-வது பிரிவுகள் தவிர இதர நிபந்தனைகள் ஷை விளம்பரத்திலே குறிப்பிடப்படும் தேதிகளில் எந்தப் பிரதேச விஸ்தீர்ணத்திலாகிலும் செலாவணியாவது நின்றுபோகுமென்று பிரசித்தம் செய்யலாம் ; அதன்மேல், ஷை ஷெட்யூலில் கண்ட சட்டதிட்டங்கள், பிற்பட்டு அவைகளுக்குச் சட்ட மூலமாய்ச் செய்யப்படும் எவையேனும் திருத்தங்களுடன்கூட, அந்தத் தேதியன்றைக்கும் அந்தத் தேதியிலிருந்தும் மீண்டும் செலாவணியாகத் தொடங்கி ஷை விஸ்தீர்ணத்தில் அமுலுக்கு வரும்.

3. இந்த ஆக்டிலே, சங்கதியினாலாவது முன்பின் தொடர்ச்சியினாலாவது விரோத மொன்றும் இல்லாவிட்டால்—

(1) "புட்டியில் அடைப்பது" என்பது - (சரக்கு) செய்வதற்கான யாதொரு முறை அனுசரிக்கப்பட்டாலுஞ்சரி, அனுசரிக்கப்படாவிட்டாலுஞ்சரி, விற்பனை செய்யும் காரியத்துக்காக மதுவை யாதொரு பீப்பாயிலிருந்தாவது வேறே பாத்திரத்திலிருந்தாவது ஒரு புட்டிக்காகிலும் ஜாடிக்காகிலும் குப்பிக்காகிலும் குடத்துக்காகிலும் அம்மாதிரியான யாதொரு ஏனத்துக்காகிலும் மாற்றுவது என்று அர்த்தமாவதுமல்லாமல், அதிலே மறுபடியும் புட்டியில் அடைப்பது என்பதும் அடங்கும்.

(2) "வாங்குவது" அல்லது "வாங்கிக்கொண்டிருப்பது" என்பதில் தானமாகப் பெறுவது உள்பட எந்த விதத்திலாகிலும் பெற்றுக்கொள்வது என்பதும் அடங்கும்.

(3) கலெக்டர் - என்பது நிலவரி வசூல் செய்யும் கலெக்டரென்றாவது, இந்த ஆக்டின்படிக் கலெக்டருக்குள்ள அதிகாரங்கள் எல்லவற்றையுமாகிலும் அவைகளில் எதையாகிலும் செலுத்தவாயினும் அந்தப்படி அவருக்குள்ள அலுவல்கள் எல்லாவற்றையுமாகிலும் அவைகளில் எதையாகிலும் செய்யவாயினும் 25-வது பிரிவைச் சேர்ந்த (b) பகுதியின்படி நியமிக்கப்படும் யாதொரு நபரென்றாவது அர்த்தமாகும்.

(4) "கமிஷனர்" என்பது 25-வது பிரிவைச் சேர்ந்த (a) பகுதியின்படி நியமிக்கப்படும் உத்தியோகஸ்தர் என்று அர்த்தமாகும்.

(5) "பயிரிடுவது" என்பதில், யாதொரு செடி வளர்ந்து கொண்டிருக்கையிலே அதைப் பராமரிப்பது அல்லது காப்பாற்றுவது என்பதும் அடங்கும்; விதை போட்டு அதைப் பயிராக்குவதென்று அது அர்த்தமாகவேண்டுமென்பதில்லை.

(6) "எற்றுமதி" என்பது—

(a) இந்த ஆக்ட் பிரயோகப்படும் எந்தப் பிரதேச விஸ்தீர்ணத்திலிருந்தாகிலும் சென்னை மாகாணத்திலுள்ளதாய் இந்த ஆக்ட் வியாபிக்கும்படிச் செய்யப்பட்டிராத வேறே

யாதொரு பிரதேச விஸ்தீர்ணத்துக்குக் கொண்டுபோவது என்று அர்த்தமாகும்; அல்லது

(b) மத்திய கவர்மென்டாரால் அர்த்தம் சொல்லப் பட்ட படியுள்ள யாதொரு சுங்க எல்லையைக் கடந்தன்றி மற்றப்படி, சென்னை மாகாணத்திலிருந்து வெளியே கொண்டு போவது என்று அர்த்தமாகும்.

(7) "இறக்குமதி" என்பது—

(a) சென்னை மாகாணத்திலுள்ளதாய் இந்த ஆக்ட் வியாபிக்கும்படிச் செய்யப்பட்டிராத வேறே யாதொரு பிரதேச விஸ்தீர்ணத்திலிருந்து இந்த ஆக்ட் பிரயோகப்படும் எந்தப் பிரதேச விஸ்தீர்ணத்துக்குள்ளாகிலும் கொண்டுவருவது என்று அர்த்தமாகும்; அல்லது

(b) மத்திய கவர்மென்டாரால் அர்த்தம் சொல்லப் பட்டபடியுள்ள யாதொரு சுங்க எல்லையைக் கடந்தன்றி மற்றப் படி, சென்னை மாகாணத்துக்குள் கொண்டுவருவது என்று அர்த்தமாகும்.

(8) "லாகிரிவஸ்து" என்பது—

(i) பங்கி, சித்தி அல்லது கஞ்சா என்று சொல்லப் படும் சகல வகைகளும் உள்பட, (Cannabis sativa L.) இந்திய சணற்செடியின் இலைகளும் சிறு காம்புகளும் புஷ்பிக்கும் அல்லது காய்க்கும் நுனி பாகங்களும் என்று அர்த்தமாகும்;

(ii) (Charas)சாராஸ், அதாவது, இந்திய சணற் செடியிலிருந்து கிடைத்து, சிப்பங்கட்டுவதற்கும் கொண்டு போவதற்கும் செய்யவேண்டிய வேலைகளல்லாத வேறெந்தவேலைகளும் செய்யப்பட்டிராததாயுள்ள பிசின் என்று அர்த்தமாகும்:

(iii) லாகிரிவஸ்துவின் மேலே கண்ட வகைகளில் எந்த வகைகளாகிலும் ஒன்றாய்ச் சேர்க்கப்பட்டுள்ள யாதொரு கலவையுடன் இதர வஸ்துக்களின் குணத்தைப் பாதிக்காத சரக்குகள் சேர்க்கப்பட்டிருந்தாலுஞ்சரி, சேர்க்கப்படாமலிருந்தாலுஞ் சரி அப்படிப்பட்ட யாதொரு கலவையொன்றாவது அவைகளிலிருந்து தயார் செய்யப்படும் யாதொரு பானம் என்றாவது அர்த்தமாகும்;

(iv) மாகாண கவர்ன்மென்டார் விளம்பர மூலமாய் லாகிரி வஸ்து என்று பிரசித்தம் செய்யக்கூடிய வேறே யாதொரு லாகிரிவஸ்து அல்லது மயக்கந்தரத்தக்க வஸ்து என்று அர்த்தமாகும்; அப்படிப்பட்ட வஸ்துவானது அபினியாகவோ, கோகா இலையாகவோ, அபாயகரமான மருந்துச் சரக்குகளைக் குறித்த 1930-ஆம் வருஷத்திய ஆக்ட் 2-வது பிரிவில் அர்த்தம் சொல்லப்பட்டபடியுள்ள தயார் செய்யப்பட்ட யாதொரு மருந்துச் சரக்காகவோ இருக்கக்கூடாது;

(9) "மது" என்பதில், கள், ஸ்பிரிட்ஸ் ஆவ் ஒயின், மிதிலெடெட் ஸ்பிரிட்ஸ், ஸ்பிரிட் வகைகள், ஒயின், பீர், ஆல்கஹாலாலான அல்லது அது அடங்கியுள்ள சகல திரவப் பொருள்கள் ஆகிய இவைகள் அடங்கும்;

(10) "பிரதேச அதிகார சபை" என்பது - சென்னை நகர் விசாரணைச் சங்கம் என்றாவது, 1920-ம் வருஷத்திய சென்னை பட்டணத்து டிஸ்ட்ரிக்ட் மியுனிஸிபாலிடிகளாக்டின்படிக்கு ஏற்படுத்தப்பட்டுள்ள யாதொரு மியுனிஸிபாலிடி என்றாவது 1920-ம் வருஷத்திய சென்னப்பட்டணத்து லோகல் போர்டுகளாக்டின்படி ஏற்படுத்தப்பட்டுள்ள யாதொரு லோகல் போர்ட் என்றாவது அர்த்தமாகும்;

(11) "செய்வது" என்பதில், புளிப்பேறிப் பொங்கும் யாதொரு மதுவாவது யாதொரு லாகிரி மதுவாவது போதையுண்டாக்கத்தக்க யாதொரு மதுவாவது யாதொரு லாகிரி வஸ்துவாவது எந்த வேலைமுறைப்படி உண்டாக்கப்படுகிறதோ தயார்செய்யப்படுகிறதோ அல்லது கலக்கப்படுகிறதோ அந்த வேலைமுறை இயற்கையானதாயிருந்தாலுஞ்சரி, செயற்கையானதாயிருந்தாலுஞ்சரி, அப்படிப்பட்ட ஒவ்வொரு வேலைமுறையும் என்பதும் அடங்கும்; மேலும் அதில் மதுவை மறுபடியும் காய்ச்சி வடிப்பதென்பதும் மதுவைச் சுத்தப்படுத்துவதற்கானபிரதி வேலைமுறையும் என்பதும் அடங்கும்;

(12) "இடம்" என்பதில், வீடு, கொட்டகை, அடைப்பு, கட்டிடம், கடை, கூடாரம், மரக்கலம் என்பவைகளும் அடங்கும்;

(13) "போலீஸ் ஸ்டேஷன்" என்பதில், மாகாண கவர்ன்மெண்டார் இந்த ஆக்டின் காரியங்களுக்காக போலீஸ் ஸ்டேஷனென்று விளம்பர மூலமாய்ப் பிரசித்தம் செய்யக் கூடிய யாதொருஇடமென்பதும் அடங்கும் ;

(14) "மதுவிலக்கு உத்தியோகஸ்தர்" என்பது கமிஷனரென்றாவது யாதொரு கலெக்டரென்றாவது, 25-வது பிரிவின்படிச் சட்டப் பிரகாரம் நியமிக்கப்பட்டாகிலும் அதிகாரங்கள் கொடுக்கப் பெற்றாகிலுமுள்ள யாதொரு உத்தியோகஸ்தர் அல்லது வேறே நபரென்றாவது அர்த்தமாகும் ;

(15) "சுத்தப்படுத்துவது" என்பதில், எந்த வேலைமுறையினால் ஸ்பிரிட் வகைகள்சுத்தமாக்கப்படுகின்றனவோ அல்லது அவைகளோடு யாதொரு சரக்கைச் சேர்த்து அவைகளுக்கு நிறமுண்டாக்கப்படுகிறதோ அல்லது மணமுண்டாக்கப்படுகிறதோ அப்படிப்பட்ட ஒவ்வொரு வேலை முறையும் என்பதும் அடங்கும் ;

(16) "விற்பனை" அல்லது 'விற்பது' என்பதில், தானமாகக் கொடுப்பது உள்பட, எவ்விதமாகவேனும் ஒருவர் வசத்திலிருந்து மற்றொருவர் வசத்துக்குப் போவது என்பதும் அடங்கும் ;

(17) "ஸ்பிரிட் வகைகள்' என்பது ஆல்கஹால் அடங்கியுள்ளதாய், காய்ச்சி வடிப்பதனால் கிடைக்கும் யாதொரு மது (சுபாவ விரோதமாக்கப்பட்டிருந்தாலுஞ்சரி இராவிட்டாலுஞ் சரி, அப்படிப்பட்ட யாதொரு மது) என்று அர்த்தமாகும் ;

விவரம் :—"சுபாவ விரோதமாக்கப்பட்ட" என்பது மனிதர் உட்கொள்வதற்குத் தகுதியற்றதாகும் காரியத்துக்காக விளம்பர மூலமாய் மாகாண கவர்ன்மெண்டார் நிர்ணயிக்கும் யாதொரு வேலை முறை உட்படுத்தப்பட்டஎன்று அர்த்தமாகும்;

(18) 'பதநீர்' என்பது எவ்விதமாகவேனும் புளிப்பேறிப் பொங்காதபடிப் பதப்படுத்தப்பட்டிருக்கும் பாத்திரங்களில் இறக்கப்படும் சாறு என்று அர்த்தமாகும் ;

(19) 'கள்' என்பது தென்னைமரம், பனைமரம், ஈச்சமரம் அல்லது வேறே யாதொரு மரத்திலிருந்து இறக்கப்பட்டுப்

புளிப்பேறிப் பொங்கினதாகவாவது பொங்காததாகவாவது உள்ள சாறு என்று அர்த்தமாகும்;

(20) "கொண்டுபோவது" என்பது இந்த ஆக்ட் பிரயோகப்படும் எந்தப் பிரதேச விஸ்தீர்ணத்துக்குள்ளாகிலும் ஓரிடத்திலிருந்து மற்றோரிடத்துக்குக் கொண்டுபோவது என்று அர்த்தமாகும்.

## 12-ம் அத்தியாயம்—தடைகளும் தண்டனைகளும்

4. (1) எவராகிலும்—

(a) மதுவையாவது லாகிரி வஸ்துவையாவது இறக்குமதிசெய்தாலும் யாதொரு ஏற்றுமதி செய்தாலும் கொண்டுபோனாலும் அல்லது வைத்திருந்தாலும்,

(b) மதுவையாவது யாதொரு லாகிரிவஸ்துவையாவது செய்தாலும்,

(c) இது விஷயத்தில் மாகாண கவர்ன்மெண்டார் செய்யும் விதிகளின் பிரகாரமின்றி மற்றபடி, (Cannabis sativa) சணற் செடியைப் பயிரிட்டாலும், அந்தச் செடியின் எந்தப் பாகத்திலிருந்து யாதொரு லாகிரிவஸ்து செய்யக்கூடுமோ அப்படிப்பட்ட யாதொரு பாகத்தைச் சேகரித்தாலும்,

(d) கள் தரும் எந்த மரத்திலாவது பாளைதட்டிச் சீவினாலும், தமக்குச் சொந்தமான அல்லது தம்முடைய சுவாதீனத்திலுள்ள கள் தரும் எந்த மரத்திலாவது பாளைதட்டிச் சீவ அனுமதி கொடுத்தாலும் அந்தப்படிச் சீவவிட்டாலும்,

(e) எந்த மரத்திலிருந்தாவது கள் இறக்கினாலும், தமக்குச் சொந்தமான அல்லது தம்முடைய சுவாதீனத்திலுள்ள எந்த மரத்திலிருந்தாவது கள் இறக்க அனுமதி கொடுத்தாலும் அந்தப்படி இறக்கவிட்டாலும்,

(f) மது காய்ச்சி வடிக்கும் யாதொரு இடத்தையாவது மது காய்ச்சும் யாதொரு சாலையையாவது கட்டினாலும் அதில் வேலை நடத்தினாலும்,

(g) கள்ளுக்காகப் பாளைதட்டிச் சீவவாவது மதுவை அல்லது யாதொரு லாகிரிவஸ்துவைச் செய்யவாவது எந்தச்

சரக்குகளையாயினும் வாலையையாயினும் பாத்திரத்தையா யினும் கருவியையாயினும் உபகரணத்தையாயினும் உபயோகித்தாலும், வைத்திருந்தாலும், தம்முடைய சுவாதீனத்தில் வைத்திருந்தாலும்,

(h) விற்பனை செய்யும் காரியங்களுக்காக எந்த மதுவையாவது புட்டியில் அடைத்தாலும்,

(i) மதுவையாவது யாதொரு லாகிரி வஸ்துவையாவது விற்றாலும்,

(j) மதுவையாவது யாதொரு லாகிரி வஸ்துவையாவது உபயோகித்தாலும் வாங்கினாலும்,

(k) நேரே தம்முடைய சுவாதீனத்திலுள்ள வளவில் மேற்சொன்ன காரியங்களில் எதையேனும்செய்யாவிட்டாலும் அவருக்கு ஆறு மாதத்துக்கு மேற்படாத காவல் தண்டனையாவது ஆயிர ரூபாய்க்கு மேற்படாத அபராத தண்டனையாவது இவ்விரண்டு தண்டனைகளுமாவது விதிக்கப்படும் :

ஆனால், இந்த உட்பிரிவில் கண்டதெதுவும் இந்த ஆக்டில் கண்ட நிபந்தனைகளின்படியும் அவைகளின் பிரகாரமும் அல்லது இந்த ஆக்டின்படிப் பிறப்பிக்கப்படும் யாதொரு விதி, விளம்பரம், உத்தரவு, லைஸென்ஸ் அல்லது அனுமதிச் சீட்டில் கண்ட ஷரத்துக்களின்படியும் அவைகளின் பிரகாரமும் செய்யப்படும் எந்தக் காரியத்துக்கும் பிரயோஜனப்படமாட்டாது.

(2) (a) (1) உட்பிரிவைச் சேர்ந்த (a) முதல் (j) வரையிலுள்ள பகுதிகளின்படிக்கான எந்தக் குற்றத்தையாகிலும் செய்திருப்பதாகக் குற்றம் சாட்டப்பட்ட யாதொரு நபர் யாதொரு மது அல்லது லாகிரி வஸ்துவையாவது, கள்ளுக்காகப் பாளை தட்டிச் சீவுவதற்கான அல்லது மதுவை அல்லது யாதொரு லாகிரி வஸ்துவைச் செய்வதற்கான எந்த வாலை, பாத்திரம், கருவி அல்லது உபகரணத்தையேனுமாவது, கள்ளுக்காகப் பாளை தட்டிச் சீவுகையிலாயினும் மதுவை அல்லது யாதொரு லாகிரிவஸ்துவைச் செய்கையிலாயினும் சாதாரணமாய் உபயோகிக்கப்படும் எவையேனும் சரக்குகளையாவது தம்முடைய சுவாதீனத்தில் வைத்திருப்பதற்குத் திருப்திகரமாய்க் காரணம்

சொல்ல முடியாதவராயிருந்தால், அப்படிப்பட்ட மது, லாகிரி வஸ்து, வாலே, பாத்திரம், கருவி, இடிகரணம் அல்லது சரக்குகள் சம்பந்தமாய் ஷை குற்றத்தைச் செய்திருப்பதாகவும்

(b) (1) உட்பிரிவைச் சேர்ந்த (k) பகுதியின்படிக்கான எந்தக் குற்றத்தையாகிலும் செய்திருப்பதாகக் குற்றம் சாட்டப்பட்ட யாதொரு நபரின் சுவாதீனத்திலேயேயுள்ள வளவில் யாதொரு மது அல்லது லாகிரி வஸ்து சம்பந்தமாகவாவது கள்ளுக்காகப் பாளை தட்டிச் சீவுவதற்கான அல்லது மதுவை அல்லது யாதொரு லாகிரிவஸ்துவைச் செய்வதற்கான எந்த வாலே, பாத்திரம், கருவி அல்லது உபகரணம் சம்பந்தமாகவேனுமாவது, கள்ளுக்காகப் பாளைதட்டிச் சீவுகையிலாயினும் மதுவை அல்லது யாதொரு லாகிரிவஸ்துவைச் செய்கையிலாயினும் சாதாரணமாய் உபயோகிக்கப்படும் எவையேனும் சரக்குகள் சம்பந்தமாகவாவது யாதொரு குற்றம் செய்யப்பட்டிருப்பதாக ருஜுவானல், அவர் ஷை குற்றத்தைச்செய்திருப்பதாகவும்,

இதற்கு விரோதமாய் எண்பிக்கப்படுகிற வரையில் நிச்சயமாய்க் கொள்ளப்படும்.

5. எவராகிலும் சுபாவ விரோதமாக்கப்பட்ட யாதொரு ஸ்பிரிட்டானது ப்ரிடிஷ் இந்தியாவில் செய்யப்பட்டிருந்தாலுஞ் சரி இராவிட்டாலுஞ்சரி, அதை மனிதர் உட்கொள்ளத் தகுதியுள்ளதாக்கினுலும் அல்லது தகுதியுள்ளதாக்க எத்தனித்தாலும், எந்த ஸ்பிரிட்டின் விஷயத்தில் அப்படிப்பட்ட எத்தனம் ஏதாகிலும் செய்யப்பட்டிருக்கிறதென்று தமக்குத் தெரிந்திருக்கிறதோ அல்லது தாம் நம்புவதற்கு நியாயமிருக்கிறதோ அப்படிப்பட்ட யாதொரு ஸ்பிரிட்டைத் தம்முடைய சுவாதீனத்தில் வைத்திருந்தாலும், அவருக்கு ஆறு மாதத்துக்கு மேற்படாத காவல் தண்டனையாயினும் ஆயிர ரூபாய்க்கு மேற்படாத அபராத தண்டனையாயினும் இவ்விரண்டு தண்டனைகளுமாயினும் விதிக்கப்படும்.

இந்தப் பிரிவின் காரியத்துக்காக, எந்த ஸ்பிரிட்டையாவது ரசாயன ரீதியாய்ப் பாகுபாடு செய்து பார்ப்பதன்மேல்

அதில் நிர்ணயிக்கப்பட்ட சுபாவ விரோதமாக்கும் வஸ்துக்களில் எதுவாகிலும் எவ்வளவேனும் அடங்கி யிருப்பதாக எண்பிக்கப்பட்டால், இதற்கு விரோதமாய் எண்பிக்கப்படுகிற வரையில் ஷை ஸ்பிரிட்டானது சுபாவ விரோதமாக்கப்பட்ட ஸ்பிரிட்டென்றாகிலும், அதில் அப்படிப்பட்ட ஸ்பிரிட் அடங்கியிருக்கிறதென்றாகிலும், அது அப்படிப்பட்ட ஸ்பிரிட்டிலிருந்து உண்டாக்கப்பட்டிருக்கிற தென்றாகிலும் நிச்சயமாய்க் கொள்ள வேண்டும்.

6. எவராகிலும் 16-வது பிரிவின்படி நிவாரணை செய்யப்பட்ட அல்லது மருந்தாக உபயோகிக்கப்படத் தக்கதென்று 1914-ம்ஹூத்திய சென்னப்பட்டணத்து வைத்திய சம்பந்தமான ரெஜிஸ்ட்ரேஷன் ஆக்டின்படி ஏற்படுத்தப் பட்டிருக்கும் மெடிகல் கௌன்ஸில் என்னும் வைத்திய ஆலோசனைச் சங்கத்தால் பிரத்தியேகமாய் அங்கீகரிக்கப்பட்ட மது அல்லது லாகிரிவஸ்துக்களல்லாத வேறே எந்த மதுவையாவது லாகிரி வஸ்துவையாவது பாராட்டும் அல்லது உபயோகிக்கும்படிக் கேட்டுக்கொள்ளும் அல்லது கொடுப்பதாய்ச் சொல்லும் யாதொரு விளம்பரத்தையோ இதரவிஷயத்தையோ யாதொரு சமாசாரப் பத்திரிகையிலாயினும் புஸ்தகத்திலாயினும் துண்டுப் பிரசுரத்திலாயினும் சிறு புஸ்தகத்திலாயினும் வேறே யாதொரு தனிப் பிரசுரம் அல்லது குறித்த காலத்துக் கொருமுறை வெளிவரும் பிரசுரத்திலாயினும் அச்சிட்டால் அல்லது பிரசித்தம் செய்தால் அல்லது வேறே விதமாய்க் காட்டிவைத்தால் அல்லது விநியோகம் செய்தால், அவருக்கு ஆயிர ரூபாய்க்கு மேற்படாத அபராத தண்டனை விதிக்கப்படும்:

ஆனால், இந்தப் பிரிவானது—

(a) கமிஷனரால் பொதுவாகவோ பிரத்தியேகமாகவோ அங்கீகரிக்கப்படக்கூடிய வெறும் (காட்லாக்) விவர ஜாபிதாக்கள், விலைப்பட்டிகள் ஆகிய இவைகளுக்காவது,

(b) இந்த மாகாணத்துக்கு வெளியே சட்டப்படி அச்சிட்டுப் பிரசித்தம் செய்யப்படும் சமாசாரப் பத்திரிகைகளும் குறித்த காலத்துக்கொருமுறை பிரசுரிக்கப்படும் பத்திரிகை

களும் புஸ்தகங்களும் இந்த மாகாணத்துக்குள் சாதாரணமாய் வழங்கி வருவதற்காவது,

(c) 1938-ம் வருஷம் ஜனவரி மீ முதல் தேதிக்குள் இந்த மாகாணத்தில் அச்சிட்டுப் பிரசித்தம் செய்யப்படும் யாதொரு சமாசாரப் பத்திரிகையில் அடங்கியுள்ள எந்த விளம்பரத்துக் காவது பிரயோகப்படமாட்டாது.

7. இரண்டு அல்லது அதற்கு மேற்பட்ட நபர்கள்—

(a) 4-வது பிரிவைச் சேர்ந்த (1) உட்பிரிவின்படியாவது 5-வது பிரிவின்படியாவது எந்தக் குற்றத்தையாகிலும் செய்யவாயினும் செய்விக்கவாயினும்,

(b) இந்த ஆக்ட் செலாவணியாகும் யாதொரு விஸ்தீர்ணத்தில் இந்த ஆக்டில் கண்ட நிபந்தனைகளினின்றும் தப்பித்துக்கொள்ளவாயினும் அவைகளை நிஷ்பிரயோசனமாக்கவாயினும் உடன்படிக்கை செய்துகொண்டால், அப்படிப்பட்ட நபர்களில் ஒவ்வொருவருக்கும், ஷை உடன்படிக்கை செய்து கொண்டதைத் தவிர அதை அனுசரித்து எந்தக்காரியத்தையும் அதற்குச் சம்பந்தப்பட்டவர்களில் எவரும் செய்யாமலிருந்த போதிலும் அல்லது ஷை உடன்படிக்கையானது இந்த ஆக்ட் வியாபிக்கும்படிச் செய்யப்பட்டிராத யாதொரு விஸ்தீர்ணத்தில் செய்துகொள்ளப் பட்டிருந்தபோதிலும் அல்லது அதன்படிச் செய்யப்பட்ட காரியங்கள் ஷை விஸ்தீர்ணத்தில் நடந்திருந்தபோதிலும் பாதகமில்லாமலே, மூன்று வருஷத்துக்கு மேற்படாத காவல் தண்டனையாவது ஐயாயிர ரூபாய்க்கு மேற்படாத அபராத தண்டனையாவது இவ்விரண்டு தண்டனைகளுமாவது விதிக்கப்படும்.

8. இந்த ஆக்டின்படிக்கான அதிகாரங்களைச் செலுத்தும் யாதொரு உத்தியோகஸ்தர் அல்லது நபர்—

(a) சந்தேகிப்பதற்கு நியாயமான காரணமில்லாமலே, மூடியிருக்கும் யாதொரு இடத்துக்குள் நுழைந்தாலும் அதைச் சோதனை போட்டாலும் சோதனை போடுவித்தாலும்,

(b) இந்த ஆக்டின்படிப் பறிமுதலுக்குள்ளாகத்தக்க எதையாகிலும் கைப்பற்றுவதாகவாவது அதற்காகச் சோதனை

போடுவதாகவாவது சாக்கிட்டுக்கொண்டு யாதொரு நபருடைய சொத்தைத் தொந்தரவுண்டாக்கக்கூடிய விதமாகவும் அனுவசியமாகவும் கைப்பற்றினாலும்,

(c) எந்த நபரையாவது தொந்தரவுண்டாக்கக்கூடிய விதமாகவும் அனுவசியமாகவும் மறியல் செய்தாலும் சோதனை போட்டாலும் பிடித்தாலும்,

(d) சோதனை போடுவதற்காவது கைப்பற்றுவதற்காவது மறியல் செய்வதற்காவது ஆளைப் பிடிப்பதற்காவது எதுவாயிருக்கும்படிக் கெட்ட எண்ணத்துடனும் பொய்யாகவும் சங்கதி தெரிவித்தாலும்,

(e) சட்டப்படித் தமக்குள்ள அதிகாரங்களை வேறே எந்த விதத்திலாகிலும் கெட்ட எண்ணத்துடன் மீறி நடந்தாலும்,

அவருக்கு ஆறு மாதத்துக்கு மேற்படாத காவல் தண்டனையாகிலும் ஐந்நூறு ருபாய்க்கு மேற்படாத அபராத தண்டனையாகிலும் இவ்விரண்டு தண்டனைகளுமாகிலும் விதிக்கப்படும்.

9. இந்த ஆக்டின்படிக்கான அதிகாரங்களைச் செலுத்தும் யாதொரு உத்தியோகஸ்தர் அல்லது நபர் இந்த ஆக்டின்படிப் பிடிக்கப்பட்ட எந்த நபரையாவது கைப்பற்றப்பட்ட எந்த வஸ்துவையாவது 38-வது பிரிவில் சொல்லியிருக்கிறபடி யாதொரு மதுவிலக்கு உத்தியோகஸ்தரிடத்திலாகிலும் அதிசமீபத்திலுள்ள போலீஸ் ஸ்டேஷன் விசாரணை உத்தியோகஸ்தரிடத்திலாகிலும் அனுப்புவதில் தொந்தரவுண்டாக்கக்கூடிய விதமாகவும் அனுவசியமாகவும் ஆலசியம் செய்தால், அவருக்கு இருநூறு ருபாய்க்கு மேற்படாத அபராத தண்டனை விதிக்கப்படும்.

10. இந்த ஆக்டின்படிக்கான அதிகாரங்களைச் செலுத்தும் யாதொரு உத்தியோகஸ்தர் அல்லது நபர்—

(a) இந்த ஆக்டின்படிப் பிடிக்கப்பட்ட யாதொரு நபரைச் சட்டவிரோதமாய் விடுதலை செய்தாலும் அவர் தப்பித்துக்கொண்டு போவதற்கு உடந்தையாயிருந்தாலும், இந்த ஆக்டுக்கு விரோதமாக யாதொரு குற்றத்தைச் செய்வதற்கு உடந்தையாயிருந்தாலும்,

(b) எந்தக் காரியத்தைச் செய்வதனால் இந்த ஆக்டில் கண்ட நிபந்தனைகளில் எதனின்றாகிலும் தப்பித்துக்கொள்ளலாமோ அல்லது அதை மீறி நடக்கலாமோ அப்படிப்பட்ட யாதொரு காரியத்தை எந்த நபராகிலும் செய்யக்கூடியவராயிருக்கும்படிச் செய்யும்பொருட்டு தம்முடைய கடமைக்குப் பொருத்தமில்லாத எந்த விதத்திலாவது பிரவர்த்தித்தாலும் அந்த நபருக்கும், இந்த ஆக்டுக்கு விரோதமாக யாதொரு குற்றத்தைச் செய்வதற்கு மாகாண கவர்ன்மெண்டாரின் அல்லது யாதொரு பிரதேச அதிகார சபையாரின் வேறே எந்த உத்தியோகஸ்தராகிலும் உடந்தையா யிருந்தால் அந்த உத்தியோகஸ்தருக்கும் ஆறுமாதத்துக்கு மேற்படாத காவல் தண்டனையாவது ஐந்நூறு ரூபாய்க்கு மேற்படாத அபராத தண்டனையாவது இவ்விரண்டு தண்டனைகளுமாவது விதிக்கப்படும்.

11. எவராவது இந்த ஆக்டில் கண்ட நிபந்தனைகளில் எதற்காகிலும் அல்லது இந்த ஆக்டின்படிச் செய்யப்பட்ட விதி, விளம்பரம் அல்லது உத்தரவு எதற்காகிலும் விரோதமாக வேண்டுமென்றே யாதொரு காரியத்தைச் செய்திருந்து அல்லது வேண்டுமென்றே யாதொரு காரியத்தைச் செய்யாமலிருந்து அந்தக் குற்றத்துக்காக இந்த ஆக்டில் வேறே விதமாய் நிபந்தனை கண்டிராத பட்சத்திலே, அவருக்கு இருநூறு ரூபாய்க்கு மேற்படாத அபராத தண்டனை விதிக்கப்படும்.

12. இந்த ஆக்ட் வியாபிக்கும்படிச் செய்யப்பட்டிருக்கும் யாதொரு விஸ்தீர்ணத்தில் அதற்கு விரோதமாக யாதொரு குற்றம் செய்யப்பட்டால், அந்தக் குற்றத்தில் அடங்கிய காரியங்களில் எதையாகிலும் எவராவது செய்தாலும் செய்ய எத்தனித்தாலும் செய்வதற்கு உடந்தையாயிருந்தாலும், அந்தப்படிச் செய்தது, எத்தனித்தது அல்லது உடந்தையாயிருந்தது ஷை விஸ்தீர்ணத்துக்குள் நடந்திருந்தாலுஞ்சரி ஷை விஸ்தீர்ணத்துக்கு வெளியே நடந்திருந்தாலுஞ்சரி, அவர் அதற்காக தண்டனை விதிக்கப்படுவதற்குள்ளாவார்.

13. இந்த ஆக்டுக்கு விரோதமாகக் குற்றஞ் செய்யப்பட்டிருக்கும் யாதொரு விஷயத்திலே, எந்த மது, லாகிரிவஸ்து, சரக்கு

வாலே, பாத்திரம், கருவி அல்லது உபகரணம் சம்பந்தமாய் அல்லது மூலமாய் ஷை குற்றஞ் செய்யப்பட்டிருக்கிறதோ அந்த மது, லாகிரிவஸ்து, சரக்குகள், வாலே, பாத்திரம், கருவி அல்லது உபகரணமானது, அவைகளை வைத்திருப்பதற்காக அல்லது கொண்டுபோவதற்காக உபயோகிக்கப்படும் ஏனங்கள், சிப்பங்கள், மூடிகள், பிராணிகள், மரக்கலங்கள், பார வண்டிகள் அல்லது இதர வண்டிகளோடு கூடப் பறிமுதல் செய்யப்படுவதற்குள்ளாகும்.

14. (1) குற்றஞ்செய்தவர் குற்றவாளியென்று தீர்மானிக்கப்பட்டாலும், இந்த ஆக்டுக்கு விரோதமாய் யாதொரு குற்றஞ் செய்திருப்பதாகக் குற்றஞ் சாட்டப்பட்ட நபர் குற்றவாளியென்று தீர்மானிக்கப்படாமல் விடுதலை செய்யப்பட்டிருந்த போதிலும் யாதொரு வஸ்து பறிமுதல் செய்யப்படுவதற்குள்ளாகுமென்று கோர்ட்டார் தீர்மானித்தாலும், அந்தப்படிப் பறிமுதல் செய்யவேண்டுமென்று கோர்ட்டார் உத்தரவு பண்ணலாம்.

(2) இந்த ஆக்டுக்கு விரோதமாய் யாதொரு குற்றம் செய்யப்பட்டிருந்து குற்றஞ்செய்தவர் இன்னார் என்று தெரியாவிட்டாலும் அவர் அகப்படாவிட்டாலும், இந்த ஆக்டின்படிப் பறிமுதல் செய்யப்படுவதற்குள்ளாயிருந்து யாதொரு நபருடைய சுவாதீனத்தில் இராத யாதொருவஸ்துவைக்குறித்துத் திருப்திகரமான முகாந்தரம் சொல்லமுடியா திருந்தாலும், அந்த விஷயத்தைப்பற்றி பிரஸ்தாப ஜில்லாவின் விசாரணை வகிக்கும் கலெக்டராவது இதர மதுவிலக்கு உத்தியோகஸ்தராவது மாகாண கவர்ன்மென்டாரிடமிருந்து இது விஷயத்தில் அதிகாரம் பெற்றிருக்கும் வேறே யாதொரு உத்தியோகஸ்தராவது விசாரணை செய்து தீர்மானிக்கவேண்டும்; அவர் அந்தப்படிப் பறிமுதல் செய்யவேண்டுமென்று உத்தரவு பண்ணலாம்:

ஆனால், பறிமுதல் செய்ய உத்தேசிக்கப்படும் வஸ்துக்களைக் கைப்பற்றும் தேதியிலிருந்து பதினைந்து தினம் கழிந்து போகிற வரையிலாவது, அவைகளுக்கு எவ்விதமான பாத்தியதையாகிலும் கொண்டாடும் நபர்கள் எவரேனும் இருந்தால்

அவர்களை விசாரணை செய்யாமலும் தங்கள் பாத்தியதைக்கு ஆதாரமாக அவர்கள் சாட்சியம் ஏதேனும் கொண்டுவந்தால் அதைக் கேட்காமலுமாவது அப்படிப்பட்ட உத்தரவு எதையும் செய்யக்கூடாது.

15. இந்த ஆக்டின்படிக்கான சகல குற்றங்களும் பிடித்து விசாரிக்கப்படத்தக்கவையாகும்; மேலும், பிடித்து விசாரிக்கப் படத்தக்க குற்றங்கள் சம்பந்தமாய் 1898-ம்ஹூத்து க்ரிமினல் ப்ரொஸீஜர் கோட் என்னும் குற்ற விசாரணைச் சட்டத்தில் கண்ட நிபந்தனைகள் அவைகளுக்குப் பிரயோகப்படும்.

## III-ம் அத்தியாயம்—நிவாரணைகளும் லைசென்ஸுகளும்

16. (1) மாகாண கவர்ன்மெண்டார் விளம்பர மூலமாகவும் தங்களுக்குத் தகுதியாய்த் தோற்றும் திட்டங்களுக்குட்பட்டும், குறிப்பிட்ட யாதொரு மதுவாவது லாகிரிவஸ்துவாவது அப்ப டிப்பட்ட மது அல்லது லாகிரிவஸ்து அடங்கியுள்ள யாதொரு பொருளாவது வைத்திய சம்பந்தமான அல்லது சாஸ்திர சம் பந்தமான அல்லது கைத்தொழில் சம்பந்தமான யாதொரு காரி யத்துக்காகிலும் அதைப்போன்ற யாதொரு காரியத்துக்காகி லும் வேண்டியிருக்கிறதென்னும் காரணத்தைக்கொண்டு, ஷை மது லாகிரிவஸ்து அல்லது பொருள் விஷயத்தில் இந்த ஆக் டில்கண்ட நிபந்தனைகள் எல்லாவற்றையுமோ அவைகளில் யாதொன்றையோ அனுசரித்து நடக்க வேண்டியதில்லை யென்று நிவாரணை செய்யலாம்.

(2) (1) உட்பிரிவின்படி யாதொரு விளம்பரத்தை வெளி யிடும்போது, பிரஸ்தாப நிவாரணையானது எந்த திட்டங்களுக் குட்பட்டுப் பிரசித்தம் செய்யப்படுகிறதோ அந்த திட்டங்களில் எதுவாகிலும் மீறி நடக்கப்படும் விஷயத்தில் ஆறு மாதத் துக்கு மேற்படாத காவல் தண்டனையாவது ஆயிர ரூபாய்க்கு மேற்படாத அபராத தண்டனையாவது இவ்விரண்டு தண்டனை களுமாவது விதிக்கப்படுமென்று நிபந்தனை ஏற்படுத்த மாகாண கவர்ன்மெண்டாருக்கு அதிகாரமுண்டு.

17. மாகாண கவர்ன்மெண்டார் விளம்பர மூல்மாய் வேறே விதமாகக் கட்டளையிடுகிறவரையில் இந்த ஆக்டில் கண்ட நிபந்தனைகள்—

(a) வாஸ்தவமான பிரயாணிகள் இந்த ஆக்ட் செலாவணியாய்க் கொண்டிருக்கும் யாதொரு பிரதேச விஸ்தீர்ணத்தின் வழியாய்ப் போய்க்கொண்டிருக்கும்போது தங்களுடைய சொந்த உபயோகத்துக்காக வென்றே வைத்துக்கொண்டிருக்கும் மதுவுக்காவது,

(b) அப்படிப்பட்ட யாதொரு பிரதேச விஸ்தீர்ணத்தின் மூலமாயாகிலும் அந்த விஸ்தீர்ணத்துக்குள்ளாகிலும் யாதொரு ரெயில்வே பரிபாலனத்தாரால் கொண்டுபோகப்படும் மது அல்லது லாகிரி வஸ்துக்களின் சட்ட சம்மதமான சிப்பங்கள் முதலியவைகளுக்காவது பிரயோகப்படுவதாகக் கருதப்படமாட்டா.

18. மாகாண கவர்ன்மெண்டாராவது மாகாண கவர்ன்மெண்டாருடைய மேல் விசாரணைக்குட்பட்டு கலெக்டராவது யாதொரு மது, லாகிரிவஸ்து அல்லது அந்த மது அல்லது லாகிரிவஸ்து அடங்கிய யாதொரு பொருள் வாஸ்தவமாய் வைத்திய சம்பந்தமான அல்லது சாஸ்திர சம்பந்தமான அல்லது கைத்தொழில் சம்பந்தமான யாதொரு காரியத்துக்காகிலும் அதைப் போன்ற யாதொரு நபருக்கு அல்லது யாதொரு ஸ்தாபனத்தின் விஷயத்தில் வேண்டியிருக்கிறதென்னும் காரணத்தைக்கொண்டு, அப்படிப்பட்ட மது, லாகிரி வஸ்து அல்லது பொருளைச் செய்யவோ, ஏற்றுமதி செய்யவோ, இறக்குமதி செய்யவோ கொண்டு போகவோ, விற்பனை செய்யவோ, வைத்திருக்கவோ ஷை நபருக்காயினும் ஷை ஸ்தாபனத்தின் விஷயத்திலாயினும் லைசென்ஸுகள் கொடுக்கலாம்; ஷை ஸ்தாபனம் கவர்ன்மெண்டாருடைய நிர்வாகத்தில் இருந்தாலும் இருக்கலாம், இல்லாமலும் இருக்கலாம்.

19. மாகாண கவர்ன்மெண்டாரின் மேல் விசாரணைக்குட்பட்டு, கலெக்டராவது அவரிடமிருந்து அதிகாரம் பெற்ற யாதொரு உத்தியோகஸ்தராவது—

(a) பதநீரைப் புளிப்பேற்றிப் பொங்கச் செய்யாமல் உபயோகிப்பதற்காகவாகிலும் அதிலிருந்து வெல்லம் செய்வதற்காகவாகிலும் அதற்காக எவையேனும் மரங்களில் பாளை தட்டிச் சீவுவதற்கான லைஸென்ஸுகளையாயினும்,

(b) பதநீரை வைத்திருப்பதற்கான அல்லது கொண்டு போவதற்கான அல்லது விற்பனை செய்வதற்கான அனுமதிச் சீட்டுகளையாயினும் கொடுக்கலாம்.

20. மாகாண கவர்ன்மெண்டாராவது இது விஷயத்தில் அவர்களிடமிருந்து அதிகாரம் பெற்ற யாதொரு உத்தியோகஸ்தராவது—

(a) எந்த நபராகிலும் யாதொரு மதுவை அல்லது லாகிரி வஸ்துவை உபயோகிப்பதையும் சொந்த உபயோகத்துக்காக வைத்திருப்பதையும் அனுமதிக்கும் அனுமதிச் சீட்டுகளையும்,

(b) யாதொரு நபர் அல்லது ஸ்தாபனம் புராதன வழக்கத்தின் பிரகாரம் மத சம்பந்தமான யாதொரு காரியத்துக்காக எந்த மதுவையாவது வைத்திருப்பதையும் உபயோகிப்பதையும் அனுமதிக்கும் அனுமதிச் சீட்டுகளையும்,

(c) யாதொரு ஸ்தாபனத்துக்கு மதுவை வைத்திருப்பதற்கும், (a) பகுதியின்படிக்கான அனுமதிச்சீட்டுகளை வைத்திருக்கும் அதன் மெம்பர்களுக்கு அதைக் கொடுப்பதற்குமான லைஸென்ஸுகளையும்,

(d) போஜனம் முதலியவைகள் சர்பரா செய்வதற்காக யாதொரு ரெயில் வண்டித் தொடருடன் சேர்த்துள்ள வண்டியின் விசாரணை வகிக்கும் யாதொரு நபருக்கு மதுவை வைத்திருப்பதற்கும் அந்த வண்டித் தொடரில் பிரயாணம் செய்யும் வாஸ்தவமான பிரயாணிகளுக்குப் பரிமாறுவதற்குமான லைஸென்ஸுகளையும் கொடுக்கலாம்.

21. 18-வது, 19-வது அல்லது 20-வது பிரிவின்படிக் கொடுக்கப்படும் ஒவ்வொரு லைசென்ஸும் அல்லது அனுமதிச் சீட்டும் பொதுவாகவாவது குறித்த யாதொரு விஷயத்திலாவது மாகாண கவர்ன்மெண்டார் கட்டளையிடக்கூடிய

(1) கட்டணங்கள் எவையேனும் இருந்தால் அவை செலுத்தப்படுவதன்மேலும் அவர்கள் அந்தப்படிக் கட்டளை யிடக்கூடிய கால அளவுக்கும் அவர்கள் அந்தப்படிக் கட்டளை யிடக்கூடிய நிர்ப்பந்தங்கள், வரையறைகள், திட்டங்கள் ஆகிய இவைகளுக்கு உட்பட்டும் கொடுக்கப்படவேண்டும்;

(2) நமூனுப்படியும் விவரங்கள் அடங்கியதாயுமிருக்க வேண்டும்.

22. 18-வது, 19-வது அல்லது 20-வது பிரிவின்படி யாதொரு லைசென்ஸ் அல்லது அனுமதிச்சீட்டு பெறும் நபர் ஒவ்வொரு வரையும், தம்முடைய லைசென்ஸ் அல்லது அனுமதிச்சீட்டின் கருத்துக் கிணங்க எதிரிடை உடன்படிக்கையொன்று எழுதிக்கொடுக்கும்படியும் தம்முடைய உடன்படிக்கையின் பிரகாரம் தாம் நடந்துகொள்வதற்காகக் கலெக்டர் கேட்கக்கூடிய ஜாமீன் கொடுக்கும்படியும் கேட்கலாம்.

23. (1) அப்படிப்பட்ட யாதொரு லைசென்ஸ் அல்லது அனுமதிச்சீட்டைக் கலெக்டரானவர்—

(a) அதைப் பெற்றிருப்பவர் செலுத்தவேண்டிய யாதொரு கட்டணம் கிரமமாய்ச் செலுத்தப்படாவிட்டாலும்,

(b) ஷை லைசென்ஸ் அல்லது அனுமதிச்சீட்டைப் பெற்றிருப்பவராவது அவருடைய ஊழியக்காரர்களாவது வெளிப்படையாகவாகிலும் குறிப்பாகவாகிலும் கொடுக்கப்படும் அவருடைய அனுமதியின்பேரில் அவர் சார்பாகப் பிரவர்த்திக்கும் யாதொரு நபராவது அந்த லைசென்ஸ் அல்லது அனுமதிச்சீட்டின் ஷரத்துகள் அல்லது திட்டங்களில் எதையாயினும் எவ்விதமாகவேனும் மீறி நடந்தாலும்,

(c) அதைப் பெற்றிருப்பவர் இந்தஆக்டுக்கு விரோதமான யாதொரு குற்றத்தையாவது பிடித்து விசாரிக்கக்கூடியதும் ஜாமீன் வாங்கக் கூடாததுமான யாதொரு குற்றத்தையாவது செய்ததாகத் தீர்மானிக்கப்பட்டாலும்,

(d) இஷ்டமானபோது அந்த லைசென்ஸ் அல்லது அனுமதிச்சீட்டை ரத்துசெய்யலாமென்றாவது சிறிது காலத்

துக்குச் செலாவணியாகாமல் நிறுத்தி வைக்கலாமென்ருவது அதன் திட்டங்களில் கண்டிருந்தாலும்,

(e) அந்த லைஸென்ஸ் அல்லது அனுமதிச்சீட்டானது எந்தக் காரியத்துக்காகக் கொடுக்கப்படுகிறதோ அந்தக் காரியம் இனி இல்லாமற்போய் விட்டாலும்,

ரத்துசெய்யலாம் அல்லது சிறிது காலத்துக்குச் செலாவாணியாகாமல் நிறுத்தி வைக்கலாம்.

(2) மாகாண கவர்ன்மெண்டார் அப்படிப்பட்டயாதொரு லைஸென்ஸ் அல்லது அனுமதிச்சீட்டை மேலே சொன்ன காரணங்களையோ வேறே எவையேனும் காரணங்களையோ சொல்லாமலே ரத்துசெய்யலாம் அல்லது சிறிது காலத்துக்குச் செலவாணியாகாமல் நிறுத்திவைக்கலாம்.

24. ஷை லைசென்ஸ் அல்லது அனுமதிச் சீட்டைப் பெற்றிருப்பவராவது அவருடைய ஊழியக்காரர்களாவது வெளிப்படையாகவாகிலும் குறிப்பாகவாகிலும் கொடுக்கப்படும் அவருடைய அனுமதியின் பேரில் அவர் சார்பாகப் பிரவர்த்திக்கும் யாதொரு நபராவது அந்த லைசென்ஸ் அல்லது அனுமதிச்சீட்டின் ஷரத்துகள் அல்லது திட்டங்களில் எதையாயினும் எவ்விதமாகவாகிலும் மீறி நடந்தால், அந்தப்படி எவ்விதமாகவேனும் மீறி நடப்பதைத் தடுக்கும் பொருட்டுச் செய்யவேண்டிய நியாயமான சகல முன்னெச்சரிக்கையான ஏற்பாடுகளையும் தாம் செய்ததாக அவர் எண்பித்தாலன்றி மற்றப்படி, அவருக்குக் கொடுக்கப்பட்டிருக்கும் லைஸென்ஸ் அல்லது அனுமதிச்சீட்டு ரத்துசெய்யப்படுவதுமல்லாமல் அல்லது சிறிது காலத்துக்குச் செலவாணியாகாமல் நிறுத்திவைக்கப்படுவதுமல்லாமல், அவருக்கு ஆறு மாதத்துக்கு மேற்படாத காவல் தண்டனையாவது ஆயிர ரூபாய்க்கு மேற்படாத அபராத தண்டனையாவது இவ்விரண்டு தண்டனைகளுமாவது விதிக்கப்படும்.

அந்தப்படி எவ்விதமாகவேனும் மீறி நடக்கும் எந்த நபராகிலும் அந்த லைசென்ஸ் அல்லது அனுமதிச்சீட்டைப் பெற்றிருப்பவரின் அனுமதியுடன் பிரவர்த்தித்தாலுஞ்சரி அனுமதி

யில்லாமல் பிரவர்த்தித்தாலுஞ்சரி, அவர் அதே தண்டனை விதிக்கப்படுவதற்குள்ளாவார்.

## IV-ம் அத்தியாயம்—சிப்பந்தியும் மேல் விசாரணையும்

25. மாகாண கவர்ன்மெண்டார் அப்போதைக்கப்போது விளம்பரம் பிரசுரித்து அதன் மூலமாய்—

(a) இந்த ஆக்ட் அமுலிலிருக்கும் பிரதேச விஸ்தீர்ணங்களெல்லாம், இந்த ஆக்டின் யாதொரு கலெக்டருக்குள்ள சகல அதிகாரங்களையும் செலுத்தவும் அந்த விஸ்தீர்ணங்களில் இந்த ஆக்டில் கண்ட நிபந்தனைகளின்படி நடக்கும் விவகாரங்களை மேல் விசாரணை செய்யவும் ஒரு உத்தியோகஸ்தரை நியமிக்கலாம்;

(b) நிலவரி வசூல் செய்யும் கலெக்டரோடு கூடவாகிலும் அவரோடன்றிப் பிரத்தியேகமாகவாகிலும் மாகாண கவர்ன்மெண்டார் அப்போதைக்கப்போது கட்டளையிடக்கூடிய மேல் விசாரணைக்குட்பட்டு யாதொரு ஜில்லாவிலே இந்த ஆக்டின்படி ஒரு கலெக்டருக்குள்ள அதிகாரங்கள் எல்லாவற்றையுமாவது அவைகளில் எதையாவது செலுத்துவதற்கும் அவருடைய கடமைகள் எல்லாவற்றையுமாவது அவைகளில் எதையாவது செய்வதற்கும் நிலவரி வசூல்செய்யும் கலெக்டரல்லாத வேறே யாதொரு நபரை நியமிக்கலாம்;

(c) கமிஷனருக்காவது நிலவரி வசூல் செய்யும் கலெக்டருக்காவது இந்த ஆக்டினுல் கொடுக்கப்பட்டுள்ள அதிகாரங்களில் எதையாகிலும் அவைகள் எல்லாவற்றையுமாகிலும் அவரிடமிருந்து வாபஸ் வாங்கிக்கொள்ளலாம்;

(d) சம்பளம் பெறும் உத்தியோகஸ்தர்களையாவது கௌரவ உத்தியோகஸ்தர்களையாவது மாகாண கவர்ன்மெண்டாருக்கு யுக்தமாய்த் தோற்றக்கூடிய உத்தியோகப் பெயர்களுடனும் அதிகாரங்களுடனும் கடமைகளுடனும் நியமிக்கலாம்.

(e) (d) பகுதியின்படி எவருக்காவது ஏற்படுத்தபட்டுள்ள அதிகாரங்கள், கடமைகள் எல்லாவற்றையுமாவது அவை

களில் எதையாவது ஏற்கெனவேயுள்ள யாதொரு கவர்ன் மெண்ட் உத்தியோகஸ்தராகிலும் வேறே யாதொரு நபராகி லும் செலுத்த வேண்டுமென்றும் செய்ய வேண்டுமென்றும் உத் தரவு பண்ணலாம்;

(f) இந்த ஆக்டின்படித் தங்களுக்குள்ள அதிகாரங்கள் எல்லாவற்றையுமாவது அவைகளில் எதையாவது எந்த மது விலக்கு உத்தியோகஸ்தருக்காகிலும் பிரித்துக்கொடுக்கலாம்.

26. (1) யாதொரு ஜில்லாவின் விசாரணை வகிக்கும் கலெக்ட ராவது வேறே மதுவிலக்கு உத்தியோகஸ்தராவது இந்த ஆக் டின் நோக்கங்களை அந்த ஜில்லாவில் நிறைவேற்றுவதில் தமக்கு உதவி செய்வதற்காக இதைச் சேர்ந்த தாலூகா ஒவ் வொன்றிலும் மதுவிலக்குக் கமிட்டிகளை ஏற்படுத்தலாம்.

(2) யாதொரு மதுவிலக்குக் கமிட்டியின் மெம்பர் ஒவ் வொருவரும் தம்முடைய தாலூகாவில் இந்த ஆக்டின்படி நடக் கும் விவகாரங்களைக் கவனித்து அவைகளைப்பற்றியும் அவை களுக்குச் சம்பந்தப்பட்ட ஒவ்வொரு விஷயத்தைப்பற்றியும் நிர் ணயிக்கப்பட்ட காலத்துக்கொரு முறையும் தமக்கு யுக்தமாய்த் தோற்றும் வேறே யாதொரு சமயத்திலும் மேலே சொல்லப் பட்ட கலெக்டருக்காவது இதர மதுவிலக்கு உத்தியோகஸ்த ருக்காவது ரிபோர்ட் செய்யவேண்டும்.

(3) யாதொரு மதுவிலக்குக் கமிட்டியின் மெம்பர் ஒவ் வொருவரும் தம்முடைய தாலூகாவில் இந்த ஆக்டுக்கு விரோத மாகக் குற்றம் ஏதாவது செய்யப்பட்டதாகச் சந்தேகிக்கப்பட் டால், அதைப்பற்றி அந்தத் தாலூகாவிலுள்ள எந்த போலீஸ் ஸ்டேஷனிலாகிலும் தகவல் தெரிவிக்க பாத்தியதையுடைய வராவர். அந்த ஸ்டேஷனின் விசாரணை வகிக்கும் உத்தியோ கஸ்தர் அந்தத் தகவலின் மீது நடவடிக்கை எடுத்துக்கொண்டு அந்த விஷயத்தைப்பற்றி 1898-ம் ௵த்து க்ரிமினல் ப்ரொஸீ ஜர் கோட் என்னும் குற்ற விசாரணைச் சட்டத்தில் நிர்ணயிக் கப்பட்டுள்ள விதமாக விசாரணை நடத்த வேண்டும்.

27. மாகாண கவர்ன்மெண்டார்—விளம்பரம் பிரசுரித்து, அதன் மூலமாகவும் அந்த விளம்பரத்தில் நிர்ணயிக்கப்படக்

கூடிய திட்டங்களுக்குட்பட்டும், 32-வது பிரிவின்படிப் பிடிக் கப்பட்ட யாதொரு நபர் ஆஜராகும்படி ஸம்மன் பிறப்பிக்கப் படும்போது அல்லது வேறே விதமாய்க் கட்டளையிடப்படும் போது தாம் எந்தக் குற்றத்துக்காகப் பிடிக்கப்பட்டிருக்கி ருரோ அந்தக் குற்றத்தைப்பற்றி விசாரிப்பதற்கான விசா ரணை அதிகாரமுடைய யாதொரு போலீஸ் அல்லது மது விலக்கு உத்தியோகஸ்தர் முன்பாவது மாஜிஸ்ட்ரேட் முன்பா வது ஆஜராவதாக ஜாமீன் கொடுத்தால் அவரை அப்படிப் பட்ட ஜாமீன்பேரில் விடுதலை செய்ய இந்த மாகாண முழுவ திலுமாயினும் யாதொரு பிரதேச விஸ்தீர்ணத்திலாயினும் இருப்பவர்களாய், ஷை பிரிவில் சொல்லப்பட்டுள்ள உத்தியோ கஸ்தர்கள் அல்லது வகுப்புகளைச்சேர்ந்த உத்தியோகஸ்தர்கள் அல்லது நபர்கள் எல்லாருக்குமாகிலும் அவர்களில் எவருக்கா கிலும் அதிகாரம் கொடுக்கலாம்; மேலும், அவர்கள் அந்த விளம்பரத்தை ரத்து செய்யலாம் அல்லது மாற்றலாம்.

## V-ம் அத்தியாயம்—உத்தியோகஸ்தர்களின் அதிகாரங்கள், கடமைகள், அவர்கள் அனுசரிக்கவேண்டிய நடவடிக்கை முறை முதலியவை.

28. யாதொரு கலெக்டராவது மதுவிலக்கு உத்தியோகஸ்த ராவது மாஜிஸ்ட்ரேட்டாவது தகவல் கிடைப்பதன் பேரிலும் தமக்கு அவசியமாய்த் தோற்றக்கூடிய விசாரணை செய்த பிற கும், 4-வது பிரிவைச் சேர்ந்த (1) உட்பிரிவின்படி யாதொரு குற்றம் செய்யப்பட்டிருப்பதாக நம்புவதற்கு நியாயமிருந்தால், அவர் எந்த மது, லாகிரிவஸ்து, சரக்குகள், வாலை, பாத்திரம் கருவி அல்லது உபகரணம் விஷயமாய் அந்தக் குற்றஞ் செய் யப்பட்டிருப்பதாகச் சொல்லப்படுகிறதோ அதற்காகச் சோ தனை போடுவதற்கான வாரண்ட் பிறப்பிக்கலாம். சோதனை போடப்பட்ட இடத்தில் காணப்படும் யாதொரு நபர் இந்த ஆக்டின்படிக்கான யாதொரு குற்றத்தைச் செய்திருப்பதாக அப்படிப்பட்ட யாதொரு வாரண்டை நிறைவேற்றும் பொறுப்பு ஒப்புவிக்கப்பெற்ற எந்த நபராகிலும் நம்புவதற்கு நியாயமிருந்

தால், அவர் அந்த நபரை மறியல்செய்து சோதனை போடுவ துடன், தமக்குத் தகுதியாகத் தோற்றினால் பிடித்தும் வைக்க லாம் :

ஆனால், இந்தப் பிரிவின்படிப் பிடிக்கப்பட்ட யாதொரு நபர் சந்தர்ப்பத்துக்கேற்றபடி யாதொரு மாஜிஸ்ட்ரேட் முன் பாவது யாதொரு போலீஸ் அல்லது மதுவிலக்கு உத்தியோ கஸ்தர் முன்பாவது ஆஜராவதற்குப் போதுமான ஜாமீன் கொடுப்பதாகச் சொல்லப்பட்டால், அப்படிப்பட்ட ஒவ்வொரு நபரையும் அவரைப் பிடித்தவர் ஜாமீன்பேரில் விடுதலை செய்ய வேண்டும்.

அப்படிப்பட்ட வாரன்டைப் பிறப்பிப்பதற்குமுன் கலெக் டர் அல்லது மதுவிலக்கு உத்தியோகஸ்தர் அல்லது மாஜிஸ்ட் ரேட்டானவர் தகவல் தெரிவித்தவரைப் பிரமாணத்தின்மேல் விமரிசை செய்யவேண்டும் ; அந்த விமரிசையானது சுருக்க வகையாக எழுதிவைக்கப்பட வேண்டியது மல்லாமல், அதில் தகவல் தெரிவித்தவரும் கலெக்டர் அல்லது மதுவிலக்கு உத்தி யோகஸ்தர் அல்லது மாஜிஸ்ட்ரேட்டுங்கூடக் கையெழுத்து செய்யவும் வேண்டும்.

29. 4-வது பிரிவைச் சேர்ந்த (1) உட்பிரிவின்படி யாதொரு குற்றம் செய்யப்பட்டிருக்கிறதென்றும், 28-வது பிரிவின் படிச் சோதனை வாரன்ட் பெற்றுக்கொள்வதனாலேற்படும் ஆல சியத்தினால் அதை நிறைவேற்றுவதற்குத் தடை யேற்படுமென் றும் யாதொரு கலெக்டராவது, மாகாண கவர்ன்மென்டார் நிர் ணயிக்கக்கூடிய அந்தஸ்துக்குக் குறையாத அந்தஸ்துடைய யாதொரு மதுவிலக்கு உத்தியோகஸ்தராவது, ஸப்-இன்ஸ் பெக்டரின் அந்தஸ்துக்குக் குறையாத அந்தஸ்துடைய யாதொரு போலிஸ் உத்தியோகஸ்தராவது, போலிஸ் ஸ்டேஷ னின் விசாரணை வகிக்கும் யாதொரு உத்தியோகஸ்தராவது, இது விஷயமாய் மாகாண கவர்ன்மென்டாரிடமிருந்து அதிகா ரம் பெற்றிருக்கும் வேறே யாதொரு சம்பளம்பெறும் அல்லது கௌரவ உத்தியோகஸ்தராவது நம்புவதற்கு நியாயமிருக்கும் போதெல்லாம், அவர் தம்முடைய காரணங்களையும் அப்படித்

தாம் நம்புவதற்குண்டான ஆதாரங்களையும் எழுதிவைத்தபிறகு, பகலிலாவது இரவிலாவது எப்போதாகிலும் யாதொரு இடத்தில் பிரவேசித்துச் சோதனைபோட்டு, அங்கே காணப்படும் யாதொரு வஸ்து இந்த ஆக்டின்படிப் பறிமுதல் செய்யப்படத் தக்கதென்று தாம் நம்ப நியாயமிருந்தால் அதைக் கைப்பற்றலாம்; மேலும், அந்த இடத்தில் காணப்படும் எந்த நபராயினும் இந்த ஆக்டின்படிக்கான யாதொரு குற்றத்தைச் செய்திருப்பதாகத் தாம் நம்புவதற்கு நியாயமிருந்தால், அவர் அந்த நபரை மறியல்செய்து சோதனை போடுவதுடன், தமக்குத் தகுதியாகத் தோற்றினுல் பிடித்தும் வைக்கலாம்:

ஆனுல், இந்தப் பிரிவின்படிப் பிடிக்கப்பட்ட யாதொரு நபர் சந்தர்ப்பத்துக் கேற்றபடி யாதொரு மாஜிஸ்ட்ரேட் முன்பாவது யாதொரு போலீஸ் அல்லது மதுவிலக்கு உத்தியோகஸ்தர் முன்பாவது ஆஜராவதற்குப் போதுமான ஜாமீன் கொடுப்பதாகச் சொல்லப்பட்டால், மேலே கண்ட உத்தியோகஸ்தர் அப்படிப்பட்ட ஒவ்வொரு நபரையும் ஜாமீன்பேரில் விடுதலை செய்யவேண்டும்.

30. கலெக்டராவது மாகாண கவர்ன்மென்டார் நிர்ணயிக்கக் கூடிய அந்தஸ்துக்குக் குறையாத அந்தஸ்துடைய யாதொரு மதுவிலக்கு உத்தியோகஸ்தராவது இது விஷயமாய் மாகாண கவர்ன்மென்டாரிட மிருந்து அதிகாரம் பெற்ற யாதொரு போலீஸ் உத்தியோகஸ்தராவது இதர சம்பளம் பெறும் அல்லது கௌரவ உத்தியோகஸ்தராவது எந்த நபராகிலும் கள் இறக்குவ தாகவோ வேறே யாதொரு மதுவை அல்லது யாதொரு லாகிரிவஸ்துவைச் செய்வதாகவோ யாதொரு மது அல்லது லாகிரிவஸ்துவைச் சேர்த்துவைப்பதாகவோ நியாயமாய்ச் சந்தேகிக்கப்படும் எந்த இடத்திலாகிலும் பகலிலாயினும் இரவிலாயினும் எந்த நேரத்திலும் பிரவேசித்து, அதைப் பார்வையிடலாம்; மேலும் அவர் யாதொரு நபர் யாதொரு மதுவையாவது லாகிரி வஸ்துவையாவது விற்பனைக்காக வைத்திருப்பதாக நியாயமாய்ச் சந்தேகிக்கப்படும் யாதொரு இடத்தில் எப்போதாகிலும் பிரவேசித்து அதைப் பார்வையிடலாம்;

அல்லாமலும் அந்த இடத்தில் காணப்படும் யாதொரு சரக்கு, வாலை, பாத்திரம், கருவி, உபகரணம், மது அல்லது லாகிரிவஸ்துவைப் பரிசிலனை செய்யலாம், பரீட்சித்துப் பார்க்கலாம் அளக்கலாம் அல்லது எடைபோடலாம்.

31. 28-வது பிரிவின்படியாவது 29-வது பிரிவின்படியாவது 30-வது பிரிவின்படியாவது பிரவேசிக்க அதிகாரம் கொடுக்கப்பட்டுள்ள எந்த உத்தியோகஸ்தராகிலும் வேறே விதமாய் அந்தப்படிப் பிரவேசிக்க முடியாவிட்டால், அவர் யாதொரு வெளிப்புறத்து அல்லது உட்புறத்துக் கதவையோ ஜன்னலையோ உடைத்துத் திறப்பதும், அப்படிப்பட்ட யாதொரு இடத்துக்குள் தாம் பிரவேசிப்பதற்குள்ள வேறே எவையேனும் தடைகளை அப்புறப்படுத்துவதும் சட்டசம்மதமாகும்.

32. யாதொரு மதுவிலக்கு உத்தியோகஸ்தரும் போலீஸ் அல்லது நிலவரி இலாகாவைச் சேர்ந்த யாதொரு உத்தியோகஸ்தரும் இது விஷயமாய் அதிகாரம் கொடுக்கப்பெற்ற வேறே யாதொரு நபரும்—

(a) 4-வது பிரிவைச் சேர்ந்த (1) உட்பிரிவின்படித் தண்டிக்கப்படத்தக்க யாதொரு குற்றத்தைச் செய்துகொண்டிருக்கையில் கண்டுபிடிக்கப்படும் எந்த நபரையாகிலும் வாரன்டில்லாமலே பிடிக்கலாம்;

(b) இந்த ஆக்டின் பிரகாரம் பறிமுதல் செய்யப்படத்தக்கதா யிருப்பதாக நம்புவதற்கு நியாயமிருக்கும் யாதொரு மது, லாகிரிவஸ்து அல்லது இதர பொருளைக் கைப்பற்றி மறியல்செய்யலாம்; மேலும்,

(c) எந்த நபரிடமாவது எந்த மரக்கலம், வண்டி, பிராணி, சிப்பம், எனம் அல்லது மூடியிலாவது அதன்மேலாவது அப்படிப்பட்ட யாதொரு மது, லாகிரிவஸ்து அல்லது இதர பொருள் இருப்பதாகவோ மறைத்துவைக்கப்பட்டிருப்பதாகவோ தாம் சந்தேகிப்பதற்கு நியாயமான காரணமிருந்தால் அந்த நபரையாவது அந்த மரக்கலம் முதலியவைகளையாவது சோதனை போடலாம்:

ஆனால், இந்தப் பிரிவின்படி ஆளைப் பிடிக்கும் உத்தியோகஸ்தர் அல்லது நபர் ஜாமீன்பேரில் விடுதலை செய்ய 27-வது பிரிவின்படி அதிகாரம் பெற்றிராவிட்டால், அந்தப்படி அதிகாரம் பெற்ற யாதொரு உத்தியோகஸ்தர் ஆள் பிடிக்கப்பட்ட இடத்திலிருந்து ஐந்து மைல் தூரத்துக்குள் இருப்பதாகத் தெரிந்திருக்கும்பட்சத்தில், பிடிக்கப்பட்ட நபரை உடனே அந்த உத்தியோகஸ்தரிடம் அனுப்பவேண்டும். மேலும் ஷை நபர் அந்தக் கேஸை விசாரிப்பதற்கான விசாரணை அதிகாரமுடைய யாதொரு போலீஸ் உத்தியோகஸ்தர் முன்பாவது மதுவிலக்கு உத்தியோகஸ்தர் முன்பாவது மாஜிஸ்டிரேட் முன்பாவது ஆஜராவதற்குப் போதுமான ஜாமீன் கொடுப்பதாகச் சொல்லப்பட்டால், அந்த நபரை ஜாமீன்பேரில் விடுதலை செய்வது மேலே கண்டபடி அதிகாரம் பெற்ற உத்தியோகஸ்தரின் கடமையாகும்.

33. எந்த நபராகிலும் இந்த ஆக்டுக்கு விரோதமாய் யாதொரு குற்றம் செய்ததாகக் குற்றம் சாட்டப்பட்டிருந்து அல்லது நியாயமாய்ச் சந்தேகிக்கப்பட்டிருந்து, யாதொரு மதுவிலக்கு உத்தியோகஸ்தராவது போலீஸ் அல்லது நிலவரி இலாகாவைச் சேர்ந்த யாதொரு உத்தியோகஸ்தராவது இதுவிஷயமாய் அதிகாரம் பெற்ற வேறே யாதொரு நபராவது கேட்கும்போது தம்முடைய பெயரையும் இருப்பிடத்தையும் கூற மறுத்தால் அல்லது ஷை உத்தியோகஸ்தராவது நபராவது பொய்யென்று நம்புவதற்கு நியாயமிருக்கக்கூடிய பெயரையோ இருப்பிடத்தையோ கூறினால், அவருடைய பெயரையும் இருப்பிடத்தையும் நிச்சயித்தறியும்பொருட்டு அவரை ஷை உத்தியோகஸ்தராவது நபராவது பிடித்துவைக்கலாம்.

34. இந்த ஆக்டில் கண்ட நிபந்தனைகளின்படிப் போடப்படும் சகல சோதனைகளையும் 1898-ம் ௵த்து க்ரிமினல் ப்ரொஸீஜர் கோட் என்னும் குற்ற விசாரணைச் சட்டத்தின் நிபந்தனைகளை அனுசரித்துப் போடவேண்டும்.

35. இந்த ஆக்டின் நிபந்தனைகளை நிறைவேற்றுவதில் யாதொரு மதுவிலக்கு உத்தியோகஸ்தருக்கு அல்லது போலீஸ்

உத்தியோகஸ்தருக்கு ஒத்தாசை செய்ய மாகாண கவர்ன்மென்டின் சகல இலாகாக்களையும் சகல பிரதேச அதிகார சபைகளையும் சேர்ந்த உத்தியோகஸ்தர்கள் சட்டப்படிக் கடமைப்பட்டவர்களாவார்கள்.

36. யாதொரு பொலீஸ் உத்தியோகஸ்தர் அல்லது மது விலக்கு உத்தியோகஸ்தர் நீங்கலாக, மாகாண கவர்ன்மென்டாராலாவது யாதொரு பிரதேச அதிகார சபையாராலாவது வேலையில் அமர்த்திக் கொள்ளப்பட்டிருக்கும் ஒவ்வொரு உத்தியோகஸ்தரும், இந்த ஆக்டின் நிபந்தனைகளில் எதுவாகிலும் மீறப்பட்டதாகத் தமக்குத் தெரியவரும் சகல விஷயங்களைக் குறித்தும் அதிசமீபத்திலுள்ள பொலீஸ் ஸ்டேஷனிலாவது யாதொரு மதுவிலக்கு உத்தியோகஸ்தரிடமாவது உடனே தகவல் தெரிவிக்கக் கடமைப்பட்டவராவார்; அப்படிப்பட்ட சகல உத்தியோகஸ்தர்களும் அந்தப்படி மீறிநடக்கும் குற்றங்கள் எவையேனும் செய்யப்படப்போவதாகவோ வெகுவாய்ச் செய்யப்படக்கூடுமென்றோ தங்களுக்குத் தெரிந்தால் அல்லது அப்படித் தாங்கள் நம்புவதற்கு நியாயமிருந்தால், அந்தப்படிச் செய்யப்படுவதைத் தடுப்பதற்குத் தங்கள் சக்திக்கியன்றமட்டும் நியாயமான சகல ஏற்பாடுகளையும் செய்யக் கடமைப்பட்டவர்களாவார்கள்.

37. எந்த நிலத்தின்மேல் அல்லது எந்த வீட்டுச் சொத்தில் எவ்விதமாகவாகிலும் கள்ளுக்காகப் பாளைதட்டிச் சீவும் வேலையாவது மது அல்லது லாகிரிவஸ்துக்கள் செய்யும் வேலையாவது நடக்கிறதோ அந்த நிலம் அல்லது வீட்டுச் சொத்துக்குச் சொந்தக்காரராயிருக்கும் அல்லது அதைக் கைப்பற்றிய வைத்திருக்கும் சகல ஜமீன்தார்களும் பூஸ்திதிக் குடையவர்களும் பாயக்காரிகளும் கீழ்ப்பாயக்காரிகளும் சாகுபடி செய்பவர்களும் அந்த விஷயம் தங்களுக்குத் தெரிந்தவுடனே அதை யாதொரு மாஜிஸ்ட்ரேட்டுக்காகிலும் மதுவிலக்கு உத்தியோகஸ்தருக்காகிலும் போலீஸ் அல்லது நிலவரி இலாகாவைச் சேர்ந்த யாதொரு உத்தியோகஸ்தருக்காகிலும் தெரிவிக்காமலிருப்ப

தற்கு நியாயமான காரணம் இராதபோது அதை அவருக்குத் தெரிவிக்கக் கடமைப்பட்டவர்களாவார்கள்.

38. (1) 28-வது, 32-வது அல்லது 33-வது பிரிவில் கண்ட நிபந்தனைகளின்படி எந்த நபராகிலும் பிடிக்கப்பட்டால், 28-வது, 29-வது அல்லது 32-வது பிரிவில் கண்ட நிபந்தனைகளின்படி ஜாமீன் ஏற்றுக்கொள்ளப்பட்டிருந்தாலன்றி மற்றப்படி, அவரைப் பிடிப்பவர் எந்த சந்தர்ப்பங்களில் அவர் பிடிக்கப்பட்டாரென்பதைப்பற்றிய ரிபோர்ட் சகிதமாய் அதிசமீபத்திலுள்ள பொலீஸ் ஸ்டேஷனுக்காவது யாதொரு மதுவிலக்கு உத்தியோகஸ்தரிடமாவது அவரை உடனே அனுப்பவேண்டும்.

(2) அப்படிப்பட்ட யாதொரு நபர் மேலேகண்டபடி யாதொரு பொலீஸ் ஸ்டேஷனுக்குக் கொண்டுவரப்படுவதன் பேரில் அந்த ஸ்டேஷனின் விசாரணை வகிக்கும் உத்தியோகஸ்தரானவர் - ஆஜராகும்படி ஸம்மன் அனுப்பப்படும்போது தம்முன்பாவது, எந்த மதுவிலக்கு உத்தியோகஸ்தர் அல்லது பொலீஸ் உத்தியோகஸ்தரின் விசாரணை அதிகாரப் பிரதேச எல்லைக்குள் அந்த நபர்மீது சாட்டப்பட்டிருக்கும் குற்றம் செய்யப்பட்டிருப்பதாகச் சந்தேகிக்கப்படுகிறதோ அந்த மதுவிலக்கு உத்தியோகஸ்தர் எவரேனுமிருந்தால் அவர் முன்பாவது அந்தப் பொலீஸ் உத்தியோகஸ்தர் முன்பாவது ஆஜராவதாக ஷை நபர் ஜாமீன் கொடுத்தால் அவரை அந்த ஜாமீன் பேரில் விடுதலைசெய்யவேண்டும் அல்லது ஜாமீன் கொடுக்கத் தவறும் பட்சத்தில் அவரை அப்படிப்பட்ட உத்தியோகஸ்தரிடம் காவலுடன் அனுப்பவேண்டும்.

(3) அப்படிப்பட்ட நபர் எவராகிலும் மேலேகண்டபடி ஒரு மதுவிலக்கு உத்தியோகஸ்தர் முன்பாவது பொலீஸ் உத்தியோகஸ்தர் முன்பாவது காவலுடன் கொண்டுவரப்படுவதன் மேல் அல்லது அப்படிப்பட்ட உத்தியோகஸ்தர் முன்பு ஜாமீன் பேரில் ஆஜராவதன்மேல் அல்லது மேலேகண்ட உத்தியோகஸ்தர் தாமே அவரைப் பிடித்திருக்கும் விஷயத்தில், அந்த உத்தியோகஸ்தர் தமக்கு அவ்சியமாகத் தோற்றக்கூடிய விசா

ரணை நடத்தி, ஷை நபரை விடுதலை செய்யவேண்டும். அல்லது பிரஸ்தாப கேஸை விசாரிக்கவோ பரிசீலனை செய்யவோ அதிகாரமுடைய மாஜிஸ்ட்ரேட்டிடம் அவரைக் காவலுடன் அனுப்பவேண்டும் அல்லது ஷை மாஜிஸ்ட்ரேட்முன் ஆஜராவதாக ஷை நபர் ஜாமீன் கொடுத்தால் அவரை அந்த ஜாமீன்பேரில் விடுதலை செய்யவேண்டும்.

ஆனல், ஷை நபர் அந்த உத்தியோகஸ்தரால் பிடிக்கப்படும் அல்லது அவர்முன் கொண்டுவரப்படும் அல்லது ஆஜராகும் தினத்தில் அப்படிப்பட்ட விசாரணை ஆரம்பித்து முடிக்கப்படாவிட்டால், அந்த உத்தியோகஸ்தரானவர் பிடிக்கப்பட்ட நபர் ஆஜராவதற்குப் போதுமான ஜாமீன் கொடுப்பதாகச் சொல்லப்படும்பட்சத்தில், அதற்குப்பின் ஏதாவதொரு தினத்தில் தமக்கு முன்பாவது அந்தக் கேஸை விசாரிக்க அதிகாரமுடைய வேறே யாதொரு உத்தியோகஸ்தர் முன்பாவது அந்த நபர் ஆஜராவதாக ஜாமீன் கொடுத்தால் அவரை அந்த ஜாமீன்பேரில் விடுதலை செய்யவேண்டும்.

39. 28-வது அல்லது 29-வது பிரிவில் கொடுக்கப்பட்ட அதிகாரத்தைக் கொண்டு எந்த நபரையாவது பிடிக்கும் யாதொரு உத்தியோகஸ்தரும், பிடிக்கப்பட்ட நபர் 38-வது பிரிவில் கண்ட நிபந்தனைகளின்படி யாதொரு பொலீஸ் ஸ்டேஷனின் விசாரணை வகிக்கும் எந்த உத்தியோகஸ்தருக்குமுன் அல்லது எந்தப் போலீஸ் அல்லது மதுவிலக்கு உத்யோகஸ்தருக்குமுன் கொண்டுவரப்படுகிருரோ அல்லது ஆஜராகிருரோ அந்த உத்தியோகஸ்தரும் சந்தர்ப்பத்துக்கேற்றபடி ஒரு பொலீஸ் அல்லது மதுவிலக்கு உத்தியோகஸ்தர் முன்பாவது ஒரு மாஜிஸ்ட்ரேட் முன்பாவது அந்த நபர் ஆஜராவதற்குப் போதுமான ஜாமீன் கொடுப்பதாகச் சொல்லப்படும்பட்சத்தில் அவரை ஜாமீன்பேரில் விடுதலைசெய்யக் கடமைப்பட்டவர்களாவார்கள்.

40. (1) யாதொரு நபர் ஜாமீன்பேரில் விடுதலை செய்யப்படுவதற்கு முன்பாக, அவரை ஜாமீன்பேரில் விடுதலை செய்யும் உத்தியோகஸ்தருக்கு எவ்வளவு தொகைக்கு வாங்குவது அதிகமானதாயிராமல் போதுமானதாயிருப்பதாய்த் தோற்றுகிறதோ

அவ்வளவு தொகைக்கு அந்த நபரும் ஒன்று அல்லது பல ஜாமீன்தாரர்களும் ஒரு முச்சிலிக்கா எழுதிக்கொடுக்கவேண்டும். அந்த நபர் ஷை முச்சிலிக்காவின் ஷரத்துகளின்படி ஆஜராகவேண்டுமென்றும், சந்தர்ப்பத்துக்கேற்றபடி யார் முன்பு ஆஜராவதற்காக அவரிடமிருந்து ஜாமீன் வாங்கப்பட்டதோ அந்தப் போலீஸ் அல்லது மதுவிலக்கு உத்தியோகஸ்தராவது பிரஸ்தாப மாஜிஸ்ட்ரேட்டாவது வேறே விதமாய்க் கட்டளையிடும் வரையில் ஆஜராய்க்கொண்டே யிருக்கவேண்டுமென்றும் அந்த முச்சிலிக்காவில் நிபந்தனை கண்டிருக்கவேண்டும்.

ஆனல், அப்படிப்பட்ட யாதொரு நபரை ஜாமீன்பேரில் விடுதலை செய்யும் உத்தியோகஸ்தருக்கு யுக்தமாய்த் தோற்றினல், அவர் அந்த நபரால் எழுதிக் கொடுக்கப்படும் முச்சிலிக்காவுக்கு ஜாமீன்தாராவது ஜாமீன்தாரர்களாவது இருக்கவேண்டுமென்னும் நிபந்தனையை விட்டுவிடலாம்.

(2) யாதொரு பிரதேச விஸ்தீரணத்தில் உபயோகிக்கப் படவேண்டிய முச்சிலிக்கா இன்ன நமூனைப்படி இருக்கவேண்டுமென்று மாகாண கவர்ன்மெண்டார் அப்போதைக்கப்போது நிர்ணயிக்க வேண்டும்.

41. யாதொரு போலீஸ் அல்லது மதுவிலக்கு உத்தியோகஸ்தர் முன்பு ஆஜராவதாகக் கொடுக்கப்பட்ட ஜாமீன் பேரில் விடுதலை செய்யப்பட்ட நபர் அப்படி ஆஜராகத் தவறிய காரணத்தினல் ஜாமீன்பேரில் விடுதலை செய்யப்பட்ட நபரிடமிருந்து வாங்கப்பட்ட முச்சிலிக்காவிலாவது ஜாமீன்தாரர் அல்லது ஜாமீன்தாரர்களிடமிருந்து வாங்கப்பட்ட முச்சலிக்காவிலாவது கண்டுள்ள அபராதத் தொகை அல்லது தொகைகளைச் செலுத்தும்படி நிர்ப்பந்திப்பதற்காக நடவடிக்கைகள் நடத்த வேண்டுமென்று ஷை உத்தியோகஸ்தர் அபிப்பிராயப் படுகிறபட்சத்தில், அவர் ஜாமீன்பேரில் விடுதலை செய்யப்பட்டவர்மீது என்ன குற்றம் சாட்டப்பட்டிருக்கிறதோ அந்தக் குற்றத்தை விசாரிக்க அல்லது பரிசீலனை செய்ய அதிகாரமுடைய மாஜிஸ்ட்ரேட்டுக்கு அந்த முச்சிலிக்காவை அனுப்பவேண்டும். அந்த மாஜிஸ்ட்ரேட்டானவர் தம்முடைய கோர்ட்டிலேயே

ஆஜராவதாகக் கொடுக்கப்பட்ட ஜாமீன்பேரில் விடுதலை செய்யப்பட்ட யாதொரு நபர் ஆஜராகத் தவறும் அது போன்ற விஷயத்தில் அபராதத் தொகைகளை வசூலிப்பதற்கு 1898-ம் ஷூத்து க்ரிமினல் ப்ரொஸீஜர் கோட் என்னும் குற்ற விசாரணைச் சட்டத்தில் நிபந்தனை கண்டிருக்கும் விதமாக ஷை அபராதத் தொகை அல்லது தொகைகளைச் செலுத்தும்படி நிர்ப்பந்திக்க நடவடிக்கை நடத்தத் தொடங்கவேண்டும்.

42. 38-வது பிரிவில் சொல்லப்பட்டுள்ள விதமாக விசாரணை நடத்தும் எந்தப் போலீஸ் அல்லது மதுவிலக்கு உத்தியோகஸ்தராகிலும் அந்த விசாரணை விஷயமாய்ச் சாட்சியம் கொடுப்பதற்காகத் தமக்கு முன்பு ஆஜராகும்படியாவது அதற்குச் சம்பந்தப்பட்டதாய் அவருடைய வசத்திலாகிலும் அவருடைய ஆதிக்கத்திலாகிலும் இருக்கக்கூடிய ஏதேனும் தஸ்தவேஜை ஆஜர்ப்படுத்தும்படியாவது யாதொரு நபருக்கு ஸம்மன் அனுப்பி வரவழைக்கலாம்:

ஆனல், அந்த ஸம்மனில் கண்டபடி நடந்துகொள்வதற்காக எவராவது பாட்டை மார்க்கமாக பத்து மைலுக்காகிலும் ரெயில் மார்க்கமாக ஐம்பது மைலுக்காகிலும் மாகாண கவர்ன்மென்டார் நிஷ்கரிஷை செய்யக்கூடிய இதர வரையறைகளுக்காகிலும் அதிகமாய்ப் பிரயாணம் செய்யவேண்டி யிருந்தால், அவரைத் தமக்கு முன்பு ஆஜராகும்படி அப்படிப்பட்ட உத்தியோகஸ்தர் எவரும் அந்தப்படி ஸம்மன் அனுப்பி வரவழைக்கக்கூடாது.

43. 42-வது பிரிவின்படிப் பிறப்பிக்கப்படும் ஸம்மன் ஒவ்வொன்றிலும், ஸம்மன் அனுப்பி வரவழைக்கப்படுபவர் சாட்சியம் கொடுக்கவேண்டுமா அல்லது தஸ்தவேஜை ஆஜர்ப்படுத்த வேண்டுமா அல்லது இரண்டும் செய்யவேண்டுமா என்பதைக் கண்டிருக்கவேண்டியதுமல்லாமல், அவர் ஷை உத்தியோகஸ்தர் முன்பு ஒரு குறிப்பிட்ட காலத்திலும் இடத்திலும் ஆஜராக வேண்டுமென்றும் கண்டிருக்க வேண்டும்.

44. மேலேகண்டபடி ஸம்மன் அனுப்பி வரவழைக்கப்படுபவர்கள் உத்தரவு செய்யப்பட்டபடி ஆஜராகி, ஷை விசாரணை

சம்பந்தமாய் அந்த உத்தியோகஸ்தர் தங்களைக் கேட்கும் கேள்விகளுக்கெல்லாம் பதில் சொல்லவேண்டும். அப்பதில்கள் எழுதிவைக்கப்பட வேண்டியதுமல்லாமல் அவைகளில் ஷை உத்தியோகஸ்தர் கையெழுத்து செய்யவும் வேண்டும்.

45. எந்த நபராவது வியாதி அல்லது வேறு துர்ப்பலம் காரணமாகத் தமக்கு முன்பு ஆஜாராக அசக்தராயிருந்தாலும், அந்தஸ்து காரணமாக அல்லது பெண்பாலாயிருப்பது காரணமாக அவரை ஸம்மன் அனுப்பி வரவழைப்பது தகுதியாயிராவிட்டாலும், யாதொரு போலீஸ் அல்லது மதுவிலக்கு உத்தியோகஸ்தர் அந்த நபரைத் தமக்கு முன்பு ஆஜராகும்படி ஸம்மன் அனுப்பி வரவழைப்பதற்குப் பதிலாக அந்த நபருடைய இருப்பிடத்துக்குச் சென்று, ஷை விசாரணை சம்பந்தமாய்த் தாம் அவசியமென்று கருதக்கூடிய கேள்விகளுக்குப் பதில் சொல்லும்படி அங்கே அவரைக் கேட்பது சட்டசம்மதமாகும்; அந்த நபரும் அப்பிரகாரமே பதில் சொல்லக் கடமைப்பட்டவராவார்; அந்தப் பதிலுக்கு 44-வது பிரிவில் கண்ட நிபந்தனைகள் பிரயோகப்படும்.

46. எந்த நபராவது இந்த ஆக்டின்படி யாதொரு குற்றத்தைச் செய்திருப்பதாகச் சந்தேகிக்க யாதொரு போலீஸ் அல்லது மது விலக்கு உத்தியோகஸ்தருக்குப் போதுமான காரணமிருந்தால், அவர் தம்முடைய காரணங்களை எழுதிவைத்த பிறகு, தமக்கு முன்பு ஆஜராகும்படி அந்த நபருக்கு ஸம்மனனுப்பி வரவழைக்கலாம். அந்த நபர் ஷை உத்தியோகஸ்தர் முன்பு ஆஜராவதன்மேல், 38 முதல் 45 வரையிலுள்ள பிரிவுகளில் நிர்ணயிக்கப்பட்டுள்ள நடவடிக்கைமுறைபிரயோகப்படுத்தக்கதாகும்.

சந்தேகிக்கப்பட்ட நபரை ஸம்மனனுப்பி வரவழைப்பதற்குமுன், 42 முதல் 45 வரையிலுள்ள பிரிவுகளில் கொடுக்கப்பட்டிருக்கும் அதிகாரங்களைச் செலுத்துவது பிரஸ்தாப கேஸை விசாரிப்பதற்கு அவசியமென்று ஷை உத்தியோகஸ்தர் கருதினல் அவர் அந்த அதிகாரங்களையும் செலுத்தலாம்.

47. ஸம்மன்களைப்பற்றியும் க்ரிமினல் கோர்ட்டுகளில் ஸம்மனனுப்பி வரவழைக்கப்படுபவர்கள் ஆஜராவதைக் கட்டாயப் படுத்துவதைப்பற்றியும் அந்தந்த காலத்தில் செலாவணியாய்க் கொண்டிருக்கும் சட்டமானது எவ்வளவு வரையில் பிரயோகப் படக்கூடுமோ அவ்வளவு வரையில், யாதொரு போலீஸ் அல்லது மதுவிலக்கு உத்தியோகஸ்தரால் பிறப்பிக்கப்படும். எவையேனும் ஸம்மன்களுக்கும் இந்த ஆக்டில் கண்ட நிபந்தனைகளின் பிரகாரம் ஆஜராகும்படி அவரால் ஸம்மனனுப்பி வரவழைக்கப்படும் யாதொரு நபருக்கும் பிரயோகப்படும்.

48. யாதொரு போலீஸ் அல்லது மதுவிலக்கு உத்தியோகஸ்தர் இந்த ஆக்டின்படிக்கான யாதொரு குற்றத்தைச் செய்ததாகக் குற்றஞ்சாட்டப்பட்ட யாதொரு நபரை அந்தக் கேஸை விசாரிக்க அல்லது பரிசீலனை செய்ய அதிகாரமுடைய மாஜிஸ்ட்ரேட்டிடம் காவலுடன் அனுப்பும்போதாகிலும் அப்படிப்பட்ட மாஜிஸ்ட்ரேட் முன்பு ஆஜராவதாகக் கொடுக்கப்படும் ஜாமீன்பேரில் அந்த நபரை விடுதலை செய்யும் போதாகிலும், அந்த உத்தியோகஸ்தர் குற்றம் சாட்டப்பட்டவருடைய பெயர் இன்னாரென்றும், இன்ன விதமான குற்றம் அவர்பேரில் சாட்டப்பட்டிருக்கிறதென்றும், அந்தக் கேஸைக் குறித்த சங்கதிகளையும் அறிந்திருப்பவர்களாகக் காணப்படும் நபர்கள் இன்னாரென்றும் கண்டுள்ள ரிப்போர்ட்டொன்றையுங்கூட ஷை மாஜிஸ்ட்ரேட்டுக்கு அனுப்பவேண்டும்; மேலும் அவர் அந்த மாஜிஸ்ட்ரேட் முன்பு ஆஜர்ப்படுத்தவேண்டியிருக்கும் எந்தப் பொருளையாகிலும் அவருக்கு அனுப்பவேண்டும். அந்த ரிப்போர்ட்டை வரப்பெற்றுக்கொள்வதன்மேல், ஷை மாஜிஸ்ட்ரேட்டானவர் 1898-ம்௵த்து க்ரிமினல் ப்ரொஸீஜர் கோட் என்னும் குற்ற விசாரணைச் சட்டத்தில் நிர்ணயிக்கப்பட்டிருக்கிறபடி பிராது தம்மிடத்தில் செய்துகொள்ளப் பட்டிருந்தால் எப்படியோ அப்படியே அந்தக் குற்றத்தைப் பற்றி விசாரணை செய்யவும் அந்தக் குற்றத்தைச் செய்ததாகக் குற்றஞ் சாட்டப்பட்ட நபரைப் பரிசீலனை செய்யவும் வேண்டும்.

49. யாதொரு போலீஸ் அல்லது மதுவிலக்கு உத்தியோகஸ்தர் இந்த ஆக்டுக்கு விரோதமாய் யாதொரு குற்றஞ் செய்ததாகக் குற்றம் சாட்டப்பட்ட எந்த நபரையாவது அந்தக் கேஸை விசாரிக்க அல்லது பரிசீலனை செய்ய அதிகாரமுடைய மாஜிஸ்ட்ரேட்டிடம் காவலுடன் அனுப்பும்போதாகிலும் அந்த மாஜிஸ்ட்ரேட் முன்பு ஆஜராவதாகக் கொடுக்கப்படும் ஜாமீன்பேரில் அப்படிப்பட்ட யாதொரு நபரை விடுதலை செய்யும்போதாகிலும், அந்த உத்தியோகஸ்தர் - அந்தக் கேஸைப்பற்றிய சங்கதிகளையும் சந்தர்ப்பங்களையும் அறிந்த நபர்களில் எவர்களை அந்தக் கேஸை நடத்தும்பொருட்டு சாட்சிகளாக ஷை மாஜிஸ்ட்ரேட் விமரிசை செய்வது அவசியமென்று தமக்குத் தோற்றுகிறதோ அவர்களை அந்த மாஜிஸ்ட்ரேட் முன்பு ஆஜராகும்படிச் செய்யும் விஷயமாக யாதொரு போலீஸ் ஸ்டேஷன் விசாரணை வகிக்கும் உத்தியோகஸ்தருக்கு 1898-ம்ஞூத்து க்ரிமினல் ப்ரொஸீஜர் கோட் என்னும் குற்ற விசாரணைச் சட்டத்தில் கொடுக்கப்பட்டிருக்கும் சகல அதிகாரங்களையும் செலுத்தவேண்டும்.

50. இந்த ஆக்டின்படிக்கான யாதொரு குற்றத்தைச் செய்திருப்பதாகக் குற்றம் சாட்டப்பட்ட அல்லது சந்தேகிக்கப்பட்ட எந்த நபரையும் அந்தக் கேஸில் சகல விஷயங்களையும் யோசிக்கையில் நியாயமாயிருக்கக்கூடிய காலத்துக்கதிமர்கமறியல்செய்து வைத்திருக்கக்கூடாது; அந்தக் கேஸைப் பரிசீலனை செய்ய யாதொரு மாஜிட்ரேட் அதிகாரமுடையவராயிருந்தாலுஞ்சரி இராவிட்டாலுஞ்சரி, அந்த மாஜிஸ்ட்ரேட் பிரத்தியேகமாய் உத்தரவு பிறப்பிக்காத விஷயத்தில் ஷை கால அளவானது யாதொரு போலீஸ் அல்லது மதுவிலக்கு உத்யோகஸ்தர் இருக்குமிடத்துக்கும் அங்கிருந்து அந்தக் கேஸைப் பரிசீலனை செய்ய அதிகாரமுள்ள கோர்ட்டுக்கும் அந்த நபர் பிரயாணம் செய்வதற்கு வேண்டிய காலம் நீங்கலாக இருபத்து நான்கு மணிநேரத்துக்குமேற்படக் கூடாது

51. போலீஸ் ஸ்டேஷன்களின் விசாரணை வகிக்கும் சகல உத்தியோகஸ்தர்களும் யாதொரு மாஜிஸ்ட்ரேட்டாவது மது

விலக்கு உத்தியோகஸ்தராவது உத்தரவு பிறப்பிக்கும் வரையில் இந்த ஆக்டின்படிக் கைப்பற்றப்பட்டுத் தங்களிடம் ஒப்புவிக்கப்படக்கூடிய சகல பொருள்களையும் தங்கள் வசத்தில் பந்தோபஸ்துடன் வைத்திருக்க வேண்டும்; மேலும், அவர்கள் ஷை பொருள்களுடன் பிரஸ்தாப போலீஸ் ஸ்டேஷனுக்குவரக்கூடிய அல்லது தம்முடைய மேலுத்தியோகஸ்தரால் இது காரியத்துக்காக நியமித்தனுப்பப்படக்கூடிய எந்த மதுவிலக்கு உத்தியோகஸ்தரையாவது ஷை பொருள்களுக்குத் தம்முடைய முத்திரை போட்டு, அவைகளிலிருந்து அவைகளுக்கு மாதிரி எடுத்துக் கொள்ள அனுமதிக்க வேண்டும், அந்தப்படி எடுத்துக் கொள்ளப்படும் சகல மாதிரிகளுக்கும் ஷை போலீஸ் ஸ்டேஷனின் விசாரணை வகிக்கும் உத்தியோகஸ்தரின் முத்திரையைக் கொண்டுகூட முத்திரை போடப்பட வேண்டும்.

52. டிஸ்ட்ரிக்ட் மாஜிஸ்ட்ரேட்டானவர் பிரஸ்தாப ஜில்லாவில் யாதொரு மாஜிஸ்ட்ரேட் அல்லது உத்தியோகஸ்தர் முன் விசாரணை அல்லது பரிசீலனை செய்யப்படவேண்டியிருக்கும் இந்த ஆக்டின்படிக்கான எந்தக் கேஸையாகிலும் அந்த ஜில்லாவிலுள்ள வேறே யாதொரு மாஜிஸ்ட்ரேட்டுக்கு அல்லது உத்தியோகஸ்தருக்கு மாற்ற அதிகாரமுடையவராவார்.

53. 1898-ம் வருஷத்து க்ரிமினல் ப்ரொஸீஜர் கோட் என்னும் குற்ற விசாரணைச் சட்டம் பிரயோகப்படுவதற்கு இந்த ஆக்டில் கண்டதெதனாலும் பாதகபேற்படமாட்டாது.

## VI-ம் அத்தியாயம்.—விதிகளும் விளம்பரங்களும்.

54. (1) இந்த ஆக்டில் கண்ட நிபந்தனைகளை அமுலுக்குக் கொண்டுவரும் காரியத்துக்காக மாகாண கவர்ன்மெண்டார் விதிகள் செய்யலாம்.

(2) முக்கியமாகவும் முந்திய நிபந்தனையின் பொதுத் தன்மைக்கு பாதகமில்லாமலும் மாகாண கவர்ன்மெண்டார் அடியிற்கண்ட காரியங்களுக்காக விதிகள் செய்யலாம்.

(a) லைஸென்ஸுகளையும் அனுமதிச் சீட்டுகளையும் கொடுப்பதும் அவைகளில் கண்ட திட்டங்களை அனுசரித்து நடக்கும்படி நிர்பந்திப்பதும்;

(b) இந்த ஆக்டின் நோக்கங்கள் நிறைவேறும் பொருட்டு சம்பளம் பெறும் மது விலக்கு உத்தியோகஸ்தர்களும் கௌரவ மதுவிலக்கு உத்தியோகஸ்தர்களும் செலுத்த

வேண்டிய அதிகாரங்களையும் நிறைவேற்றவேண்டிய கடமைகளையும் நிர்ணயிப்பது ;

(c) விசாரணைகள் சம்பந்தமாக தடை செய்வதற்குரிய அதிகாரங்களையும் விசாரணை செய்வதற்குரிய அதிகாரங்களையும் செலுத்துவது சம்பந்தமாகவும் போலீஸ் உத்யோகஸ்தர்கள், மது விலக்கு உத்தியோகஸ்தர்கள் ஆகிய இவர்களுடைய விசாரணை அதிகாரப் பிரதேசத்தை நிர்ணயிப்பது ;

(d) இந்த ஆக்டின்படிக்கான எந்த அதிகாரத்தையாவது செலுத்தும்படியாகிலும் எந்தக் கடமையையாவது நிறைவேற்றும்படியாகிலும் யாதொரு உத்தியோகஸ்தருக்காயினும் நபருக்காயினும் அதிகாரம் கொடுப்பது ;

(e) மதுவிலக்குக் கமிட்டிகளின் அதிகாரங்களையும் கடமைகளையும் அந்தக் கம்மிட்டிகளின் மெம்பர்களுடைய அதிகாரங்களையும் கடமைகளையும் நிர்ணயிப்பதும், அந்தக் கமிட்டிகளின் மெம்பர்கள் எந்தக் கால அளவுகளுக்கிடையில் தங்கள் ரிபோர்ட்டுகளை அனுப்பவேண்டுமென்பதை நிர்ணயிப்பதும் ;

(f) கமிஷனராவது கலெக்டர்கள் அல்லது இதர ஜில்லா உத்யோகஸ்தர்களாவது இந்த ஆக்டினால் அல்லது இந்த ஆக்டின்படித் தங்களுக்குக் கொடுக்கப்பட்டிருக்கும் எந்த அதிகாரங்களையாகிலும் பிரித்துக்கொடுப்பதை ஒழுங்குபடுத்துவது ;

(g) சணற்செடியைப் பயிரிடுவதையும், அந்தச் செடியின் எந்தப் பாகங்களிலிருந்து லாகிரி வஸ்துக்கள் செய்யப்படக்கூடுமோ அந்தப் பாகங்களைச் சேகரிப்பதையும், அவைகளிலிருந்து அந்த லாகிரி வஸ்துக்களைச் செய்வதையும் ஒழுங்குபடுத்துவது ;

(h) சுபாவ விரோதமாக்கப்பட்ட ஸ்பிரிட்டை எப்படிச் செய்யவேண்டுமென்பதைப் பிரசித்தம் செய்வது ;

(i) இந்த ஆக்டின்படியாவது இந்த ஆக்டின் பிரகாரம் செய்யப்படும் யாதொரு விதியின்படியாவது பிறப்பிக்கப்படும் உத்தரவுகள் அசல் விசாரணை சம்பந்தப்பட்டவைகளாயிருந்தாலுஞ்சரி, அப்பீல் விசாரணை சம்பந்தப்பட்டவைகளாயிருந்தாலுஞ்சரி, அப்படிப்பட்ட உத்தரவுகளின்மேல் எந்தக் கேஸுகளிலும் அல்லது வகுப்புகளைச் சேர்ந்த கேஸுகளிலும் எந்த அதிகாரிகளுக்கும் அப்பீல் செய்துகொள்ளலாமென்பதையாகிலும் அப்படிப்பட்ட உத்தரவுகளை எந்த அதிகாரிகள் புனராலோசனை செய்து திருத்தலாமென்பதையாகிலும் பிர

சித்தம் செய்வதும், அப்பீல்களை இன்னகாலத்திலும் இன்ன விதமாகவும் கொடுத்துக்கொள்ள வேண்டுமென்பதையும் அவை விஷயமாய்ப் பிரவர்த்திப்பதற்காக இன்ன நடவடிக்கை முறை அனுசரிக்கப்பட வேண்டுமென்பதையும் நிர்ணயிப்பதும்;

(j) சாட்சிகளுக்குப் படிச்செலவு கொடுப்பதும், அக்கிரமமாகப் பிடிக்கப்பட்டார்களென்னும் காரணத்தின்மேல் 38-வது பிரிவைச் சேர்ந்த (3) உட்பிரிவின்படி விடுதலை செய்யப்படும் நபர்களுக்கும் இந்த ஆக்டின்படிக்கான குற்றங்களைச் செய்திருப்பதாக யாதொரு மாஜிஸ்ட்ரேட் முன்பு குற்றஞ் சாட்டப்பட்டு, குற்றவாளியென்று தீர்மானிக்கப்படாமல் விடுதலை செய்யப்பட்ட நபர்களுக்கும் அவர்களுடைய கால நஷ்டத்துக்காகப் பிரதிபலன் கொடுப்பதும்;

(k) 42-வது பிரிவின்படி தூரத்திலிருந்து சாட்சிகளை ஸம்மன் அனுப்பி வரவழைக்க போலீஸ் உத்தியோகஸ்தர்களுக்கும் மதுவிலக்கு உத்தியோகஸ்தர்களுக்குமுள்ள அதிகாரத்தை ஒழுங்குபடுத்துவது;

(l) பறிமுதல் செய்யப்பட்ட பொருள்களையும் அவைகளை விற்றுவரும் பணத்தையும் ஒருவகை செய்வது.

55. இந்த ஆக்டின்படிச் செய்யப்படும் சகல விதிகளையும் பிறப்பிக்கப்படும் சகல விளம்பரங்களையும் ஸர்க்கார் கெஜெட்டில் பிரசித்தம் செய்யவேண்டும்; அந்தப்படிப் பிரசித்தம் செய்யப்படுவதன்மேல் அவை இந்த ஆக்டில் சேர்க்கப்பட்டிருந்தால் எப்படியோ அப்படியே செலாவணியாகும்.

## VII-ம் அத்தியாயம்.—சட்ட சம்பந்தமான நடவடிக்கைகள்

56. இந்த ஆக்டை அனுசரித்து நல்ல எண்ணத்தோடு செய்யப்பட்ட அல்லது செய்யும்படி உத்தரவு பண்ணப்பட்ட யாதொரு செய்கையின் பொருட்டு துரைத்தனத்தார் மீதாவது யாதொரு மதுவிலக்கு உத்தியோகஸ்தர், போலீஸ் உத்தியோகஸ்தர் அல்லது இதர உத்தியோகஸ்தர்மீதாவது எந்த ஸிவில் கோர்ட்டிலும் நஷ்டத்துக்காக வியாஜ்ஜியம் தொடரக்கூடாது.

57. சகல கோர்ட்டுகளும் இந்த ஆக்டின்படி அதிகாரங்கள் கொடுத்தும், கடமைகள் ஏற்படுத்தியும். நியமனங்கள் செய்தும் பிறப்பிக்கப்படும் சகல விளம்பரங்களையும் உத்தரவுகளையும் நீதி முறைமையில் அங்கீகரிக்க வேண்டும்.

---

# 'ஏழைகளின் வரப்பிரசாதம்'

என்னுடைய மூன்று மாத அனுபவத்திலிருந்து மது விலக்கு சேலம் ஜில்லாவிலுள்ள ஏழைகளுக்கு ஒரு வரப்பிரசாதமாக விளங்குகிற தென்பதைத் தெரிந்து கொண்டேன்."

—திரு டிக்ஸன்
(சேலம் ஜில்லா கலெக்டர்)

"மது விலக்கு ஏற்பட்ட பிறகு ஜவுளிக்கடைகளில் வியாபாரம் அதிகரித்திருக்கிறது. கிருஷ்ணகிரியில் 3500 ரூபாய்க்கு இவ்வியாபாரம் அதிகரித்துளது. காவிரிப் பட்டண வியாபாரி ஒருவர் தன் வியாபாரம் 1000 ரூபாய்க்கு உயர்ந்திருக்கிறது என்றார். இந்த வருஷம் பொங்கல் பண்டிகையை ஏழை மக்கள் வெகு நன்றாகக் கொண்டாடினர்.

"கீரைப்பட்டி, ஆச்சான் குட்டைப்பட்டி முதலிய இடங்களைச் சேர்ந்த குடிப்பழக்கம் கொண்டவர்களில் மூவர் தங்களுக்குத் தினசரி குடிப்பதற்குப் பணம் வேண்டியிருந்ததென்றும், ஆனால் தினசரி தங்களால் சம்பாதிக்க முடியவில்லை என்றும், நெல்லைக் கொடுப்பதாகச் சொல்லிக் கடன் வாங்குவதுண்டென்றும், அறுவடை காலத்தில் குறைந்த விலையில் நெல் முழுவதையும் கடனுக்குக் கொடுத்து விடுவதுண்டென்றும், இந்த வருஷ அறுவடையின் பொழுது தாங்கள் கடன் வாங்கவில்லையென்றும், ஏனென்றால் கள் கிடைக்கவில்லையென்றும் நெல்லைச் சேர்த்து வைத்திருப்பதாகவும் கூறினர்.

"குடிப்பழக்கம் கொண்டிருந்த மற்றொருவர் தமக்கு நிலமிருக்கிறதென்றும், ஒவ்வொரு வண்டி நெல்லுக்கும் 8 அணு தரகு கூலி கிடைக்கிறதென்றும், இரண்டு ரூபாயி

லிருந்து மூன்று ரூபாய் வரையில் தினசரி கிடைப்பதாயும் கூறினர். மதுவிலக்கு ஏற்பட்ட பிறகு தமக்கு 20 ரூபாய் மிச்சப்பட்டிருப்பதாகவும் அவர் கூறினர். சற்று மனேல்லாசத்திற்காக கிறிஸ்துமஸின் போது சென்னை, புதுவை முதலிய இடங்களுக்குச் சென்றதாகவும் இவ்வகையில் 17 ரூபாய் செலவிட்டதாகவும் அவர் எடுத்துரைத்தார். குடித்துக் கொண்டிருந்தபொழுது தமக்கு நள்ளிரவு வரையில் தூக்கம் வருவதில்லை யென்றும், அப்பொழுது தினந்தோறும் காலையில் 8-மணிக்குத் தான் படுக்கையை விட்டெழுந் திருந்ததாகவும், ஆனல் இப்பொழுதோ அது போலில்லாமல் அதிகாலையில் படுக்கையைவிட்டெழுந்திருந்து, நீராடி பூஜை முதலியன செய்வதாகவும் அவர் கூறினர்.''

அக்டோபர் மாதத்திலிருந்து ஜனவரிமாதம் முடிய நான்கு மாதகாலத்தில் மதுவிலக்குத் துறையில் ஏற்பட்டிருந்த அபிவிருத்திகளைக் குறித்து சேலம் ஜில்லா கலெக்டர் திரு டிக்ஸன் மார்ச்சு மாதம் முதல் தேதியன்று வெளியிட்ட யாதாஸ்திலிருந்து மேற்குறித்த விஷயங்கள் எடுக்கப்பட்டிருக்கின்றன.

மேற்படி யாதாஸ்தில் காணப்படும் மற்ற விவரங்கள் பின்வருமாறு:—

இம்மாதங்களில் ஏராளமான பனை மரங்களிலிருந்து கள்ளிறக்கப்பட்டது. சுமார் 291873 மரங்களிலிருந்து கள்ளிறக்குவதற்கு 6218 லைசென்சுகள் கொடுக்கப்பட்டன. இதில் 3-ல் ஒரு பங்கு கள்ளிறக்கப்பட்டது. இன்னும் இது அதிகரிக்கும். இப்பொழுது மொத்தம் லட்சம் மரங்களிலிருந்து பதனி இறக்கப்படுகின்றது. நவம்பர் மாதத்தில் கள் கட்டும்பொழுது கஷ்டமிருக்குமென்று எதிர்பார்த்தேன். இன்னமும் லைசென்சுகள் கொடுக்கப்

பட்டு வருகின்றன. கள் கட்டு காலத்தில் மதுவிலக்கு முன்னர் இருந்த மரங்களின் எண்ணிக்கைக்குச் சமமாக இருக்கலாம். பதனி இறக்கும் விஷயமாகத் தக்க ஏற்பாடுகள் செய்யப்பட்டிருக்கின்றன. பதனியை இறக்கிய பிறகு அதை புளிக்கவைப்பதைத் தடுக்கவும் ஏற்பாடுகள் செய்யப்பட்டிருக்கின்றன. திருட்டுத்தனமாகப் பதனியை இறக்கிப் புளிக்க வைப்பதில் இப்பொழுது முதலில் மதுவிலக்கு உத்தியோகஸ்தர் சாதாரணப் போலீஸ் சிப்பந்திகள் இவர்களுக்குத் தெரியாமல் அக்குற்றத்தைச் செய்ய வேண்டியிருக்கிறது. கிராம உத்தியோகஸ்தர்களிடம், அந்தந்தக் கிராமத்தில் திருட்டுத்தனமாகக் கள்ளிறக்குவதைக் கண்டு பிடித்தால் அவர்கள் மீது நடவடிக்கை யெடுத்துக்கொள்ளப்படும் என்று அறிவிக்கப்பட்டிருக்கின்றது.

கஞ்சா விற்பனே தற்பொழுது அறவே தடைப்படுத்தப்பட்டிருக்கிறது. மது விலக்கு சம்பந்தப்பட்ட அளவில் கஞ்சாப் பிரச்னே மிகவும் முக்கியமானதாகும். குடிக்குப் பதிலாகக் கஞ்சாவை உபயோகிப்பது வியாபித்திருக்கிறது என்பதற்கில்லே. இதற்கு யாதொருவிதமான அறிகுறிகளும் காணப்படவில்லே. கஞ்சாவை உடனே தடைப்படுத்துவதன் மூலம் திருட்டுத்தனமாகக் கஞ்சாவைக் கொண்டுவருவது அதிகரிக்கலாம். இதைத் தடுப்பதற்கு விசேஷ நடவடிக்கைகள் எடுத்துக்கொள்ளப்பட்டிருக்கிறது. தாலூகா கிராம கமிட்டி அங்கத்தினர்களேயும், கிராம உத்தியோகஸ்தர்களேயும், மூலிகைகளேப்பற்றியும் ஏற்கனவே மூலிகைகளே உட்கொள்பவர்களேயும் கவனித்து வரும்படி யோசனேகள் கூறப்பட்டிருக்கின்றன.

ஜில்லா வைத்திய அதிகாரியால் தயாரிக்கப்பட்டு கஞ்சாவினுல் ஏற்படக்கூடிய கெடுதிகளே விளக்கிக் கூறும்

துண்டுப் பிரசுரங்கள் பொது மக்களுக்கு விநியோகம் செய்யப்படுகின்றன. இதைப்பற்றிக் கிராமங்களில் டாம் டாம் மூலம் அறிவிக்கப்பட்டிருக்கிறது. சேலத்துக்கு மூலிகைகள் கொண்டு வரப்படுகிறதென்று கூறப்பட்டது. மதுவிலக்குக்கு முன்னர் ஏராளமாகத் திருட்டுக் கஞ்சா கொண்டு வரப்பட்டிருந்தது. தற்பொழுது மூலிகைகள் வெளியிலிருந்தே திருட்டுத்தனமாக கொண்டு வரப்படுகிறதே யொழிய, ஜில்லாவுக்குக் கொண்டு வரப்படுவதில்லை. ஸ்தலத்தில் இது கிடைக்காதது கஷ்டமாக இருக்கிறது. வெளியே கஞ்சாவைத் திருட்டுத்தனமாக அனுப்புபவர்கள் கட்டுப்பாடாக விருக்கிறதாகத் தெரிகிறது. அவர்களது நடவடிக்கைகளைத் தடுப்பது சாமான்யமான வேலையாக இராது. இதை ஒழிக்கத் தற்பொழுது இது நமக்கு நல்ல சந்தர்ப்பமாகுமென்று நான் கருதுகிறேன்.

ஈரோட்டில் 58½ சேர்கள் அபினியையும், 7 சேர் கஞ்சாவையும், கலால் இலாகா அதிகாரிகள் கண்டுபிடித்துக் கைப்பற்றியது மிகவும் கெட்டிக்காரத்தனமான காரியமாகும். மூலிகைகளை உட்கொள்ளும் பல சந்நியாசிகள் ஜில்லாவைவிட்டு வெளியேறி விட்டார்கள். கடைகளில் சில கஞ்சா, அபின் குடிகாரர்கள் தாங்கள் உட்கொள்ளும் அளவைக் குறைத்துக்கொண்டு விட்டார்கள். ஏற்கனவே கஞ்சாப் பழக்கங் கொண்டிருந்தவர்கள் அறவே அப்பழக்கத்தை விட்டொழித்து விட்டார்களென்றும் எனக்கு அறிவிக்கப்பட்டிருக்கிறது. லேகியங்களுக்கும், இன்னும்இதர மருந்துகளுக்கும் உபயோகிக்கப்பட்டு வந்த அபினி, கஞ்சா முதலியவைகள் தடைப்பட்டு விட்டன.

தங்கள் விரோதிகளிடம் கஞ்சாவைக் கொடுத்து விட்டு வழக்கைத் தொடரும்படி செய்துவிடுவது சம்பந்த

மாகப் பல புகார்கள் வந்திருக்கின்றன. இம்மாதிரி புகாரில் ஒன்று கண்டுபிடிக்கப்பட்டு குற்றவாளிக்கு 6 மாதக் கடுங்காவல் தண்டனை விதிக்கப்பட்டது. மிகவும் அக்கரையுடன் இதுபற்றி விசாரணைகள் நடைபெற்றுவருகின்றன. வழக்கைக் கட்டி விடுவதனால் மட்டும் கடுமையானதாகி விடுமென்று நான் கருதவில்லை. ஆனால் இது பற்றி எங்கும் பயமிருந்து வருகின்றது.

கள்ளத்தனமாகச் சாராயம் காய்ச்சுவது பற்றிய மட்டில் நிலைமை திருப்திகரமாகவே யிருப்பதாகத் தெரிகிறது. திருட்டுத்தனமாக சாராயம் காய்ச்சும் விஷயம் நன்கு கவனிக்கப்பட்டு வருகிறது. மிகவும் குறைந்த அளவிலேயே இவ்விஷயம் செய்யப்படுவதாகவும் தெரிகிறது. ஜில்லாவுக்கு வெளியே போய் கடைகளுக்குச் செல்லுவோரின் எண்ணிக்கை கூட சற்று உபாயமாகக் குறைந்திருக்கிறதென்று தெரிகிறது.

சேலம், ராசிபுரம், கிருஷ்ணகிரி முதலிய இடங்களில் ஸ்பிரிட் உட்கொள்ளப்படுவதாக வதந்திகள் உலவுகின்றன. கிருஷ்ணகிரியில் ஸ்பிரிட் வியாபாரம் அதிகரித்திருக்கிறது. இதற்குக் காரணம் கூறப்படுவது திருப்திகரமாகவில்லை. இதைச் சாப்பிட்டதாகவோ, சாப்பிட்ட பின்னர் சிகிச்சை செய்து கொண்டதாகவோ தெரியவில்லை. இப்பொழுது விற்பனை சாதாரண நிலைமைக்கே வந்திருக்கிறது. சேலத்தில் விற்பனை அதிகமாக இல்லாமற்போனாலும், கோவை நெசவுக்காரர்கள் ஸ்பிரிட்டைக் குடிப்பதாகத் தெரிகிறது. இது சில சாட்சியங்களிலிருந்து தெரியவருகிறது. ராசிபுரத்தில் விற்பனை சாதாரணமாகவே யிருக்கிறது. எவ்விதமான ரிப்போர்ட்டுகள் வந்தாலும் உடனே அவற்றைப் பரிசீலித்து விசாரணை செய்ய ஏற்பாடுகள் செய்யப்பட்டிருக்கின்றன. ஸ்பிரிட்

டைக் குடிப்பதுபற்றி யாதொரு சாட்சியமும் இல்லை. ஆயினும் இந்த அபாயமான திராவகத்தைக் குடிப்பதை உடனே தடுக்க வேண்டும்.

வருங்காலத்தைப்பற்றி நான் முன்னர் சொன்னதையே தான் திரும்பிச் சொல்ல வேண்டும். சட்டம் நிரந்தரமாக பயன் பெறுமா என்றால் அது போகப்போகத் தான் தெரியவேண்டும். ஏற்கனவே நான் கூறியதுபோல எல்லாம் ஒத்துழைப்பையே பொறுத்திருக்கிறது.

மது விலக்கினால் பொது மக்களுக் கேற்பட்டிருக்கும் பயனைப்பற்றி பல இடங்களிலிருந்து எனக்குத் தகவல்கள் கிடைத்திருக்கின்றன. ரெவின்யூ டிவிஷனல் ஆபீசர்கள், தாசில்தார்கள், போலீஸ் இன்ஸ்பெக்டர்கள், டெபுடி ரிஜிஸ்திரார், ஜில்லா கல்வி அதிகாரி, ஜில்லா வன அதிகாரிகள், தாலூகா மதுவிலக்குக் கமிட்டி அங்கத்தினர்கள் முதலியவர்கள் தலைவர்களை அனுப்பி யிருக்கின்றனர். அவர்கள் அபிப்பிராயத்தைச் சுருக்கமாகவே இந்த யாதாஸ்தில் குறிப்பிட முடியும்.

கடுமையான வீட்டுச் சண்டைகள் அநேகமாக இல்லை. ஸ்திரீகளின் நிலைமையும், குழந்தைகளது நிலைமையும் குறிப்பாக அபிவிருத்தி யடைந்திருக்கின்றன. ஸ்திரீகள் மதுவிலக்கை உற்சாகத்துடன் ஆதரிக்கின்றனர். கிராம விவகாரங்களில் அவர்களுக்கு அதிகமான செல்வாக்கிருக்குமானால் எங்களுடைய வேலை சுலபமாக யிருக்கும். அதிகப்படியாகக் குடித்தவர்களைப்பற்றி ரிப்போர்ட்டுகள் பலவாறாக இருக்கின்றன. சிலர் தாங்கள் ஏற்கனவே செய்த அளவு வேலை செய்ய முடியவில்லை யென்று புகார் கூறுகின்றனர். ஏற்கெனவே குடிப்பழக்கங்கொண்டு தற்பொழுது அதை விட்டொழித்தோருடைய தேக ஆரோக்கியம் வெகுவாக அபிவிருத்தி யடைந்திருக்கிற தென்றும்,

பொதுவான நிலைமையும் அபிவிருத்தி யடைந்துள்ளதாக வும் தெரிகிறது. சிலர் இதற்கு முன் சம்பாதித்தது போல் சம்பாத்திய மில்லை யென்கின்றனராம். இதற்குக் காரணம் வேலை செய்ய இஷ்டப்படாமை தான் என்று நினைக்கிறேன். முதலாளிகள் குறைந்த கூலி கொடுப்ப தாகவும் ஜீவனத்துக்கு அது போதுமென்றும் கூறுகின் றனராம்.

மது விலக்கினுல் பொருளாதார நிலைமை சந்தேக மின்றி அபிவிருத்தி யடைந்திருக்கிறது. குடிப் பழக்கங் கொண்டிருந்தவர்கள் மாலையில் நல்ல சாப்பாடு சாப்பிடு கின்றனர். முன்பு இதில்லாமலிருந்தது. கடன்கள் குறைந்து வந்த போதிலும், சில இனங்களில் மட்டுமே தான் பணம் சேமிக்கப் பட்டிருப்பதாகத் தெரிகிறது. இதற்குக் காரணம் சிக்கனப் பழக்கம் தீவிரமாக இல்லா ததே யாகும். விசேஷ அபிவிருத்தி உத்தியோகஸ்தர் இது பற்றிக் கவனத்தைச் செலுத்துவார். கூட்டுறவுச் சங்கங்களின் மூலம் இதுவரை சில நன்மைகள் ஏற் பட்டிருக்கின்றன. 104 உண்டியல்கள் சேலம் டவுனில் விநியோகஞ் செய்யப் பட்டிருக்கின்றன. நாமக்கல்லில் சக்கிலியர்களுக்காக 10 சேமிப்புக் க்ணக்குகள் பாங்கியில் ஏற்படுத்தப் பட்டிருக்கின்றன. உண்டிப் பெட்டிகள் மூலம் சிக்கனத் திட்டத்தை அபிவிருத்தி யடையச்செய்ய ஹோசூர் பிராந்தியத்தில் 13 சங்கங்கள் பொறுக்கப்பட் டிருக்கின்றன. தர்மபுரி கூட்டுறவுச் சங்கத்தினர் விநியோ கம் செய்வதற்காக 200 உண்டிப் பெட்டிகளை வாங்கி யிருக்கின்றனர். இவை சங்கத்துடன் இணைக்கப்பட்ட சங் கங்களுக்காகவாகும். விசேஷ உத்தியோகஸ்தர் கூட் டுறவு இயக்கத்தைச் சேர்ந்த ஒவ்வொரு உத்தியோகஸ் தரும், உத்தியோகப் பற்றற்றவரும் தங்கள் இடங்களில்

உண்டிப்பெட்டித் திட்டத்திற்காக வேலைசெய்ய வேண்டு மென யோசனை கூறியுள்ளார். இதனால் அதிகமான அபி விருத்தி யேற்படுமென நம்புகிறேன்.

மேலப்பள்ளியைச் சேர்ந்த ஒரு குடிகாரர் தன் வருமானம் முழுதும் குடிக்கே செலவழிக்கப்பட்டதென்றும், தன் மனைவிக்கும் 3 குழந்தைகளுக்கும் ஒரு வேளை சாப்பாடுகூட இல்லாமலிருந்ததென்றும், அடிக்கடி தனக்கும் தன் மனைவிக்கும் சதா சண்டை யிருந்த தென்றும், மனைவியை அடிக்கடி அடிப்பதுண்டென்றும், 3 ஏக்கர் நிலங்களை விற்றுவிட்டதாயும், போஷாக்கின்மையால் இரண்டு குழந்தைகள் இறந்தனவென்றும், மது விலக்குக்குப் பிறகு 2 அல்லது 3 வேளை சாப்பாடு கிடைக்கிற தென்றும், ரூ. 17-க்கு ஆடுமாடுகள் வாங்கியதாகவும், குழந்தைகளுக்கும் மனைவிக்கும் ரூ. 4-க்கு ஆடைகள் வாங்கிக் கொடுத்ததாகவும் கூறினார்.

தோப்பூரைச் சேர்ந்த மற்றொரு குடிகாரர் தான் ஒரு கூலியென்றும், தன் வருமானம் போதாமல் தன் மனைவியும் 6 குழந்தைகளும் பாதிப் பட்டினி கிடக்க நேரிட்ட தாயும், மதுவிலக்கு ஏற்பட்ட பிறகு தினசரி திருப்திகரமாகச் சாப்பிட்டு வருவதாகவும் பொங்கலுக்கு மனைவிக்கும், தனக்கும் ஆடைகள் வாங்கியதாயும், 15 ரூ. கடன் 5 ரூபாய்க்குக் குறைந்து விட்டதென்றும் கூறினார்.

குடியரான ஒரு கிழவர் தான் மதுவிலக்கு வருவதற்கு முன்னால் தினசரி 8 அணா சம்பாதித்துவந்ததாயும், இதுகுடிக்காகச் செலவு செய்யப்படுவ துண்டென்றும் தற்பொழுது தான் ஒரு வேலையும் செய்ய முடியவில்லை யென்றும் தன் மனைவி சம்பாதிப்பதிலிருந்தே தான் காலந் தள்ளுவதாயும் கூறினார். வயதானவர் பழக்கத்தை மாற்

றிக்கொள்ள முடியா இனம் இது ஒன்றுகும். இன்னும் சிலர் வாடி வதங்கி இறந்து விட்டதாக அறிவிக்கப்படுகிறது.

சேலம் நகர சபையில் தோட்டி வேலை செய்து வந்தவர்கள் கடன் கொடுக்கும் இருவரிடம் குடிக்காக கடன் வாங்கியிருந்தனர். அவர்கள் சம்பளம் வாங்கியதும் அதை அப்படியே கடனுக்காக கொடுத்து விடுகின்றனர். இப்பொழுது பூராக் கடனைத் தீர்த்து விட்டதாகக் கூறப்படுகிறது. ரொக்கம் கொடுத்து வாழ்க்கைக்கு வேண்டியவைகளை வாங்குகின்றனராம்.

வேப்பனப்பள்ளியில் கடன் கொடுக்கும் ஆசாமிகள் இருவர் தாங்கள் சராசரி குடும்பம் 1 க்கு ஏற்கனவே ரூ. 25 கடன் கொடுத்துவந்ததாகவும் இப்பொழுது ரூ. 5 தான் கொடுக்கப்படுகின்றதென்றும் அறிவித்தார். ஜில்லாவின் உத்தியோகஸ்தர் தென்கனிக்கோட்டாவில் தன்னுடைய சந்தன சுத்தி டிப்போவில் 150 பேர் தினசரி வேலை செய்வதாயும் மதுவிலக்குக்கு முன்னர் அவர்கள் குடித்துவந்தனர் என்றும் தற்பொழுது மதுவிலக்கு ஏற்பட்ட பிறகு இரண்டு கூலிகள் முறையே ரூ. 10, 11 சேவிங்ஸ் பாங்கியில் போட்டிருக்கின்றனரென்றும், உண்டிப் பெட்டிகள் கொடுக்கப்பட்டிருக்கின்றன வென்றும், இரண்டு கூலிகளுடைய பிள்ளைகளும் பாங்கிக் கணக்கில் கட்டுவதாயும், 3 கூலிகள் தலா ஒரு பசு வாங்கி இருக்கின்றனரென்றும், ஒருவர் 4 ஆடுகள் வாங்கியதாயும், இன்னுமொருவர் தானே வீடு கட்டிக்கொண்டிருப்பதாகவும் கூறினர்.

சேலம் ராஜேந்திரா ஆலையில் வேலை செய்யும் சுமார் 2000 தொழிலாளர்கள் மதுவிலக்குக்குப் பிறகு ஏற்பட்டிருக்கும் நிலைமையை அவ்வாலை மானேஜிங் டைரக்

டர் அறிவித்துள்ளார். மது விலக்குக்கு முன்னர் தொழிலாளர் வேலைக்கு சரிவர வருவதில்லை யென்றும், இரவில் வேலை செய்யும்பொழுது பல இயந்திரங்கள் நிறுத்த வேண்டி வருமென்றும், மதுவிலக்கு ஏற்பட்ட பிறகு தொழிலாளர்கள் சரிவர வேலைக்கு வருகின்றன ரென்றும், இரவில் வேலை செய்வதற்கு வேண்டிய தகுதி யான தொழிலாளர்கள் கிடைத்தனரென்றும், இராக் காலச் சண்டைகள் ஒழிந்தனவென்றும் இயந்திரங்கள் ஜாக்கிரதையாகக் கவனிக்கப்படுகின்றனவென்றும், தயா ரிப்பு அதிகரித்திருப்பதாகவும், செலவு குறைந்திருக்கிற தென்றும், மதுவிலக்கு ஏற்பட்ட பிறகு வேலையின் அளவு இரண்டு மடங்கு அதிகரித்திருக்கிறதென்றும் மதுவிலக்கி ஞல் ஆலையிலுள்ள ஸ்திரீகளுக்குத் தான் குறிப்பாக நன்மை உண்டா யிருக்கிறதென்றும், தற்பொழுது எல்லா ஸ்திரீகளுக்கும் 2 அல்லது 3 புடவைகளிருக் கின்றனவென்றும், அவர்களது பொருளாதார நிலை மையும் அபிவிருத்தி பெற்றிருக்கிறதாயும், அடகு வைத்த நகைகள் மீட்கப்பட்டதாகவும், குழந்தைகள் சுத் தமாக இருக்கின்றனவென்றும், வாசஸ்தலங்கள் அபி விருத்தியடைந் திருக்கின்றனவென்றும் அவர் அறிவித் திருக்கிறார்.

கள்ளைப் புளிக்க வைத்துக் கள்ளிறக்கிவந்தவர்கள் இப்பொழுது பதனியையே இறக்குகின்றனர். விசேஷ அபிவிருத்தி உத்தியோகஸ்தர் கள்ளிறக்குவோர்களைக் கூட்டுறவுச் சங்கத்தில் சேரும்படி தூண்டி வருகிறார். இதுவரை 10 சங்கங்கள் ரிஜிஸ்தர் செய்யப்பட்டிருக்கின் றன. இதில் 9 வேலை செய்ய ஆரம்பித்து விட்டன. சேலம் விற்பனை சங்கத்தின் மூலம் 19865 பவுண்டு வெல்லம் ரூ. 975-14-0 க்கு இதுவரை விற்பனை செய்யப்

பட்டிருக்கிறது. இன்னும் 50, 60 சங்கங்கள் ஏற்படு மென நம்பப்படுகிறது. கலால் இலாகா கொடுத்த எண்ணிக்கைப்படிக்கு 9000 கள்ளு இறக்குவோர்களிருக் கின்றனர். கிராம முன்சீப்புகள் கொடுத்த எண்ணிக்கைப் படிக்கு 14,000 பேர்கள் தங்கள் ஜீவனோபாயத்தைக் கள் ளிறக்குவதுமூலம் செய்து வருகின்றன ரெனப்படுகிறது. இதில் அவிபக்த குடும்ப அங்கத்தினர்களுமிருக்கின்றனர். ஜனவரி முடிய 5218 லைசென்ஸ்கள் கொடுக்கப்பட்டிருக் கின்றன. இம்மாத முடிவுக்குள் 75 சதவிகிதம் பழைய கள்ளிறக்குவோர்கள் வெல்லம் தயாரிப்பதற்கென பதனி யை இறக்குவார்கள் என எதிர்பார்க்கப்படுகிறது. மிகுதி யுள்ள 25 சதவிகித ஆசாமிகளில் சிலர் ஜில்லாவைவிட்டு வெளியேறி விட்டார்கள். இன்னும் சிலர் கூலி வேலை செய்து வருகின்றனர். இன்னும் பலர் நிலத்தை வைத் துக் கொண்டிருக்கின்றனர்.

பனை வெல்லம், தென்னை வெல்லம் இரண்டுக்கும் நல்ல விற்பனையிருந்தால்கள்ளிறக்குவோரின் நிலைமைகள் திருப்திகரமாகக் கவனிக்கப்படும். தென்னை வெல்லத் தைச் சுத்தஞ் செய்து சர்க்கரை செய்வதுபற்றி கைத் தொழில் இலாகா பரீட்சைகள் செய்து வருகின்றனர். சிறிய அளவில் இரண்டு கிராமங்களில் பரீட்சை செய்ய 15 டன்கள் தென்னை வெல்லத்துக்காக ஆர்டர் செய்யப் பட்டிருக்கிறது. மைலப்பட்டி சர்க்கரைத் தொழிற்சாலை யில் இது பரீட்சை செய்யப்படும். வெற்றிபெற்றால் இத னால் கள்ளிறக்குவோருக்கு பிற்கால வாழ்வில் நன்மைகள் ஏற்படும்.

ஒய். எம். ஸி. ஏ. கல்லூரி அதிகாரிகள் கேட்டுக் கொண்டதற்கு இணங்க நான் அக்கல்லூரிக்குச் சென்று தேகாப்பியாச விளையாட்டுகள், நாட்டுப்புற நடனங்கள்

முதலியவற்றைப் பார்த்தேன். கல்லூரியைச் சேர்ந்த மிஸ்டர் பி. எம். ஜோசப்பும், இன்னும் இதரர்களும் விடுமுறையின்பொழுது சேலத்துக்கு வருவதாகக் கூறினார்கள். இவர்களைக் கொண்டு அங்கு பந்தய விளையாட்டுகள், நடனங்கள், பஜனை முதலியவைகளை நடத்துவதென ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது. அங்கு இவர்கள் பயிற்சி வகுப்புகள் முதலியவைகளையும் நடத்துவார்கள். இத்திட்டத்தின் தகவல்கள் தயாரிப்பிலிருந்து வருகின்றன. விசேஷ உத்தியோகஸ்தர் இல்லாமலிருந்தும் குடிப்பித்தை மாற்ற பல விதமான மாறுதல் கொண்ட ஏற்பாடுகள் செய்யப்பட்டன. பல பிராந்தியங்களிலிருந்து கிடைத்த ரிப்போர்ட்டுகளிலிருந்து, பஜனை நாடகங்கள், கிராமபோன், சங்கீதம் முதலியவைகள் கிராமங்களில் ஏற்பட்டிருப்பதாயும், பள்ளிக்கூட ஆசிரியர்கள் சில விடங்களில் உதவி செய்வதாகவும் தெரிகிறது. கிராம மதுவிலக்குக் கமிட்டிகள் குடிப்பித்தை மாற்ற பல சாதனங்களைச் செய்யும்படி முக்கியமாகக் கேட்டுக்கொள்ளப்பட்டிருக்கிறது.

**என்னுடைய 3 மாத அனுபவத்திலிருந்து மது விலக்கு ஜில்லாவிலுள்ள ஏழைகளுக்கு ஒரு வரப் பிரசாதம் போலிருக்கிறது என்பதை நான் நன்கு தெரிந்து கொண்டேன்.**

---

# குறிப்புகளும் திரட்டும்

## யார் குற்றவாளிகள்?

1937-ம் வருஷம், அக்டோபர் மாதம் முதல் தேதியிலிருந்து சேலம் ஜில்லாவில் அமுலுக்கு வந்திருக்கும் மதுவிலக்குச் சட்டம் குடி வகைகளைத் திருட்டுத்தனமாகத் தயாரிப்பதற்கும், வியாபாரம் செய்வதற்கும் உபயோகிக்கப்படும் மரங்கள் அல்லது வீடுகளின் சொந்தக்காரருக்குச் சில விசேஷ பொறுப்புகளை விதித்திருக்கின்றன. ஒருவர் தமக்குச் சொந்தமான மரங்களைக் கள்ளிறக்குவதற்கு அனுமதிப்பது குற்றமாகும். திருட்டுத்தனமான வியாபாரத்தை உபயோகித்துக் கொள்ளும்படி ஒருவர் தமக்குச் சொந்தமான வீட்டை விடுவது குற்றமாகும். எவர்களுடைய வீடுகள் அல்லது மரங்கள் மதுவகைகளின் தயாரிப்பையோ அல்லது வியாபாரத்தையோ அபிவிருத்தி செய்வதற்காக உபயோகிக்கப்படுகின்றனவோ அவர்கள் சட்ட பூர்வமாகக் குற்றம் செய்தவர்களாகவே கருதப்படுவர்.

*                *                *                *

## மருந்துத் தயாரிப்புகள்

மருந்துத் தயாரிப்புகளுக்குச் சட்டத்தில் விலக்கு காட்டப்பட்டிருக்கிறது. ஸ்பிரிட் சேர்த்துத் தயாரிக்கப்படும் மருந்து தயாரிப்புகள், சமையல் சரக்குகள், சோடா முதலிய பான வகைகள், இதர வாசனைத் தினுசுகள், கலர்கள், மணமூட்டும் எஸன்ஸ்கள், அத்தர்

முதலிய வாசனைச் சாமான்கள், சோப்பு முதலிய ஸ்நானத்திற்குரிய தயாரிப்புகள் இவை கீழ்க்கண்ட நிபந்தனைகளுக்குட்பட்டு சட்டத்தில் விலக்கு செய்யப்பட்டிருக்கின்றன.

(1) உள்ளுக்கு உபயோகிப்பதற்காக உத்தேசிக்கப்பட்டுள்ள மருந்து தினுசுத் தயாரிப்புகளில் கீல் சத்துக் கலந்த ஸ்பிரிட் எதுவும் உபயோகிக்கப்படக் கூடாது;

(2) இத்தகைய தயாரிப்புகளில் சேர்க்கப்படும் ஸ்பிரிட்டிற்கு மேற்படி தயாரிப்புகள் சட்டம் அமுலிலுள்ள பிராந்தியத்தில் தயாரிக்கப்பட்டாலும் சரி அல்லது சென்னை மாகாணத்திற்கு வெளியே இந்தியாவில் வேறு இடங்களில் தயாரிக்கப்பட்டு சட்டம் அமுலிலிருக்கும் பிராந்தியத்திற்குள் கொண்டு வரப்பட்டாலும் சரி குறிப்பிட்ட விகிதப்படி வரி செலுத்த வேண்டும்.

* * * *

## மருந்து பூர்வமான வோயின்கள்

"அரிஷ்டாக்கள்" 'அஸவாக்கள்' என்ற பெயரால் வழங்கும் பல்வேறு வகையான ஆயுர்வேதத் தயாரிப்புகள் உள்பட சாராயம் கலக்கப்பட்ட மருந்து பூர்வமான வொயின்களும், இவற்றைப் போன்ற தயாரிப்புகளும், 1937 ம் வருஷத்திய மதுவிலக்குச் சட்டத்தில் "சாராயம்" என்ற வியாக்கியானத்திலடங்கும். மதுவிலக்குச் சட்டத்தின் 16-வது பிரிவின் கீழ் இத்தகைய தயாரிப்புகள் சம்பந்தமாக எத்தகைய விலக்கும் குறிப்பிடப்பட்டில்லை.

ஆகவே இத்தகைய தயாரிப்புகளை லைசென்ஸில்லாமல் சேலம் ஜில்லாவில் இறக்குமதி செய்பவர், ஏற்றுமதி செய்பவர், ஒரு இடத்திலிருந்து இன்னொரு இடத்

திற்கு அனுப்புபவர், உடைத்தாயிருப்பவர், தயாரிப்ப வர், சீசாக்களில் அடைப்பவர், விற்பவர் அல்லது உப யோகிப்பவர் அல்லது தமக்குச் சொந்தமான வீடு அல் லது கட்டிடத்தில் இக் காரியங்களை நடை பெறும்படி அனுமதிப்பவர் இச் சட்டத்தின் 4-வது பிரிவுப்படி குற்ற வாளியாகிறார்.

அதேபோல் மேற்படி தயாரிப்புகள் சம்பந்தமாக சென்னை மாகாணத்தில் விளம்பரங்களை பிரசுரிப்பதும் சட்டத்தின் 6-வது பிரிவுப்படி குற்றமாகும். ஆனால் 1914-ம் வருஷத்திய சென்னை வைத்திய ரிஜிஸ்திரேஷன் சட்டப்படி ஏற்படுத்தப்பட்ட வைத்திய சபையின் பிரத் யேக அங்கீகாரம் பெற்ற மருந்து பூர்வமான தினுசுகளுக்கு விலக்குண்டு.

* * * * *

## விலக்கின் வியாக்யானம்

சட்டத்தில் விலக்கு காட்டப்பட்டிருப்பது கீழ்க் கண்டவற்றிற்குச் செல்லுபடியாகாது:—

(1) புட்டியில் அடைக்கப்பட்ட சாராயம் தவிர மற்ற வகையான எந்தச் சாராயம்.

(2) தாம் பிரயாணம் செய்து கொண்டிருந்த ரெயில்வே கம்பார்ட்மெண்டையோ அல்லது இதர வண் டிச் சாதனங்களையோ விட்டு ஒரு சத்திரம், ரெயில்வே சிற்றுண்டிச்சாலை அல்லது ஒரு தனி நபருக்குச் சொந்த மான அல்லது பொதுவான தங்குமிடத்தையோ அடை யும் ஒரு நபர்.

(3) நிஜமான பிரயாணி ஒருவரிடம் மொத்தத்தில் மூன்று யூனிட்டுகளுக்கு மேற்படாத புட்டிச் சாராயம் தானிருக்கலாம்.

விளக்கம்—(1) 'புட்டிச் சாராயம்' என்றால் 1886ம் வருஷத்திய சென்னை ஆப்காரி சட்டத்தின் ஷரத்துகளின் படி பெறப்பட்ட லைசென்ஸ் அல்லது 1937-ம் வருஷத்திய சென்னை மதுவிலக்குச் சட்டத்தின் 20-வது பிரிவுப்படி யோ அல்லது (சி) என்னும் ஷர்த்துப்படியோ பெறப் பட்ட அனுமதி இவற்றின் நிபந்தனைகளுக்குட்பட்டு விற் பனைக்காக சென்னை மாகாணத்தில் புட்டிகளில் அடைக் கப்படும் சாராயம் அல்லது

(2) விற்பனைக்கு அனுப்புவதற்கு முன்னதாகத் தயாரிப்பவரால் இம் மாகாணத்திற்கு வெளியே இந்தி யாவிலாயினும் சரி அல்லது இந்தியாவிற்கு வெளியே யாயினும் சரி புட்டியிலடைத்து, கார்க் போடப்பட்டு, சீல் வைக்கப்படும் சாராயம் என்று அர்த்தம்.

* * * * *

## பதனி தயாரிப்பு விதிகள்

புளிக்க வைக்காமல் கள்ளை உட் கொள்ளவோ அல் லது விற்பனை செய்யவோ அல்லது இத்தகைய கள்ளி லிருந்து வெல்லம் தயாரிக்கவோ புதிதாகச் சுண்ணும்பு பூசப்பட்ட சட்டிகள் அல்லது வேறு சாதனங்களில் மரங் களிலிருந்து பதனியை எடுப்பது சம்பந்தமாக சர்க்கார் கீழ்க்கண்ட விதிகளைச் செய்திருக்கிறார்கள்:—

(1) இவற்றிற்கு 1937-ம் வருஷத்திய சென்னைப் பதனித் தயாரிப்பு விதிகள் என்று பெயர்.

(2) இவ்விதிகளின் பிரகாரம் பதனியைத் தயாரிக் கவும், உபயோகிக்கவும், விற்பனை செய்யவும் லைசென்ஸ் கொடுக்கப்படலாம். நிஜமாக வெல்லம் தயாரிப்பவர் களுக்கும், பதனியை விற்பனை செய்பவர்களுக்கும், தங்கள் சொந்த உபயோகத்திற்காகப் பதனியை மரங்க

ளிலிருந்து இறக்க விரும்பும் மரச் சொந்தக்காரருக்கும் அவர்கள் மனுச் செய்து கொண்டால்; இலவசமாக லைசென்ஸ்கள் வழங்கப்படும். யார் மனுச் செய்து கொள்ளுகிறாரோ அவரது பேரில்தான் லைசென்ஸ்கள் கொடுக்கப்படும்.

(3) மனுக்கள் அவற்றிற்கென குறிப்பிட்டபாரத்தில் தானிருக்க வேண்டும். அவற்றிற்கு ஸ்டாம்பு ஒட்ட வேண்டியதில்லை. மனுக்களை தாசில்தார், டெப்டி தாசில்தார், அல்லது ரெவினியூ இன்ஸ்பெக்டர் இவர்களுக்கு அனுப்ப வேண்டும்.

(4) மனுக்கள் கிடைத்ததும் தாசில்தாரோ, டெப்டி தாசீல்தாரோ அல்லது ரெவினியூ இன்ஸ்பெக்டரோ கிராமத்தலையாரி மூலமாக மனுச் செய்து கொண்டிருப்பவர் தமது லைசென்ஸைத் துஷ்பிரயோகம் செய்ய மாட்டார் என்னும் விஷயத்தைக் கேட்டு, உறுதியும் திருப்தியும் செய்து கொண்டு உடனே லைசென்ஸைக்கொடுக்க முயற்சி செய்வார்.

(5) ஜனவரி மாதம் 1-ந் தேதியிலிருந்தாவது அல்லது அதற்குப் பின் தேதிகளிலிருந்தாவது ஜூன் 30-ந் தேதி வரையிலும் லைசென்ஸ்கள் அமுலிலிருக்கும். ஆனால் தாசீல்தார், டெப்டி தாசீல்தார் அல்லது ரெவினியூ இன்ஸ்பெக்டர் இவர்களது சிபார்சின் பேரில் மேலும் ஆறு மாத காலத்திற்கு லைசென்ஸைப் புதுப்பித்துக் கொள்ளலாம்.

(6) மனுதார்களின் சௌகர்யத்தை முன்னிட்டு பதனி எடுக்கும் காலம் ஆரம்பமாவதற்கு முன்பு உள்ள பதினைந்து நாட்களில் மனுக்கள் பெறப்பட்டு, லைசென்ஸ்கள் வெளியிடப்படும்: ஆனால் லைசென்ஸ் பெற்றதற்குப் பிறகு தான் பதனியை இறக்க வேண்டும். லைசென்ஸ்

பெறுபவர் தாம் எவ்வளவு மரங்களுக்கு லைசென்ஸ் கோரி யிருக்கிறுரோ அதை விட அதிகமான மரங்களில் பதனி இறக்கக் கூடாது ; எத்தனை மரங்களுக்கு லைசென்ஸ் கொடுக்கப்பட்டிருக்கிறதோ அத்தனை மரங்களில் தான் பதனி யெடுக்கலாம். தவிர புளிக்க வைப்பதற்காகவும் பதனியை இறக்கக் கூடாது.

(7) வெல்லம் தயாரிப்பதற்காக இருந்தால் பதனியை விடியற்காலை 4-மணியிலிருந்து 7-மணிக்குள்ளாக இறக்க வேண்டும். வெறும் பானத்திற்காகவாயின் அல்லது விற் பினைக்காகவாயின் சூரியோதயத்திலிருந்து சூரியாஸ்தம னம் வரையில் இறக்கலாம். இந்நேரங்களைத் தவிர மற்ற நேரங்களில் பதனியைத் தோப்புகளில் வைத்திருக்கக் கூடாது, மரங்களில் கட்டி விடப்பட்டிருக்கும் சட்டி களைத் தவிர.

(8) பதனி என்று இறக்கப்படுகிறதோ அன்றே உபயோகிக்கப்பட்டு விடவேண்டும், அல்லது விற்பனை செய்து விடப்படவேண்டும் அல்லது வெல்லத் தயாரிப் புக்காக உபயோகிக்கப்பட வேண்டும். புளிப்பேருத வரையில் யாரும் பதனியை வாங்கலாம், உபயோகிக் கலாம் அல்லது தன்னிடம் வைத்திருக்கலாம்.

* * * *

## வண்டிகளை நிறுத்த அதிகாரிகளுக்கு அதிகாரம்

சட்டத்தின் 32-வது பிரிவுப்படி கைது செய்வதற் காகவோ அல்லது கைப்பற்றுவதற்காகவோ அல்லது சோதனை செய்வதற்காகவோ மதுவிலக்கு அதிகாரிகளில் யாராவது அல்லது போலீஸ் அதிகாரிகளில் யாராவது அல்லது நிலவரி இலாகா அதிகாரிகளில் யாராவது அல் லது அதிகாரம் பெற்ற இன்னும் யாராவது கோரினுல்

அந்தச் சமயத்தில் ஒரு வண்டியையோ அல்லது பிராணியையோ கவனித்து வருபவர் அதை நிறுத்தி விடவேண்டும்; எவ்வளவு காலத்திற்கு அவசியமாக விருக்கிறதோ அவ்வளவு காலத்திற்கு அவற்றை அப்படியே நிறுத்தி வைக்க வேண்டும்.

*    *    *    *

## பிரயாணிகளிடம் சாராயம்

1937-ம் வருஷத்திய சென்னை மதுவிலக்குச் சட்டம் 17-வது பிரிவின் (ஏ) ஷரத்து மாகாண சர்க்கார் அறிக்கை மூலமாகவோ அல்லது வேறு விதமாகவோ உத்தரவிடும் வரையில் சட்டம் அமுலிலுள்ள பிராந்தியத்தின் வழியாகச் செல்ல நேரிடுகையில் பிரயாணிகள் தங்கள் சொந்த உபயோகத்திற்காகத் தங்கள் வசம் வைத்துக்கொண்டிருக்கும் சாராயம் சம்பந்தப்பட்ட மட்டில் சட்டத்தின் ஷரத்துகள் செல்லுபடியாகமாட்டா எனக் கூறுகிறது. இந்த விலக்கு தாங்கள் பிரயாணம் செய்து கொண்டிருந்த ரெயில்வே கம்பார்ட்மெண்டையோ அல்லது இதர வண்டிகளையோ விட்டு இளைப்பாறும் விடுதிக்கோ அல்லது ரெயில்வே சிற்றுண்டிச்சாலைக்கோ அல்லது தனி அல்லது பொது வீடு அல்லது சத்திரத்திற்கோ செல்லும் பிரயாணிகளுக்குக் கிடையாதென்று இதன் மூலம் தெரிவிக்கப்படுகிறது. "புட்டியில் அடைத்த" சாராயத்தைத் தவிர மற்றச் சாராயங்களுக்குக் காட்டப்பட்ட விலக்கையும் வாபீஸ் பெறுவதாகவும், பிரயாணி வசமிருக்கக்கூடிய புட்டிச் சாராயத்தின் அளவை வரையறுப்பதாகவும் சர்க்கார் அறிக்கை வெளியிட்டுளர்.

*　　*　　*　　*

## மதுவிலக்கு அனுஷ்டானம்

1937, அக்டோபர் 1-ம் தேதி சேலத்தில் மது விலக்கு அனுஷ்டானத்திற்கு வருமுன் கவர்ன்மெண்டு ஒரு யாதாஸ்து விடுத்து குறிப்பிட்டதாவது:—கள்ளத் தனமான முறைகளைத் தடுப்பதற்காக கள்ளிறக்குவதற் காக மரங்களில் நெம்பர் போடுதல் சேலம் ஜில்லாவைச் சுற்றி 10 மைல் விஸ்தீரணத்திற் குள்ளான ஜில்லாக்களி லிருக்கும் மரங்களின் தொகை குறைக்கப்படும். எல்லைப் புறத்தில் புட்டிச் சாராய விற்பனை தடுக்கப்படும்.

சாதாரண போலீஸ் பந்தோபஸ்தைக் கொண்டே மதுவிலக்குத் திட்டம் அமுலுக்குக்கொண்டு வரப்படும். போலீசுக்கு உதவியாக பல பிரத்தியேக மதுவிலக்குக் கமிட்டிகள் அமைக்கப்படும். இக் கமிட்டிகள் சர்க்கார் அங்கீகாரத்தைப்பெற்று வேலைசெய்யும். கள்ளத்தனமாக நடக்கும் வியாபாரத்தைப்பற்றி இக் கமிட்டிகள் போலீ சாருக்குத் தகவல் கொடுக்கும். இது தவிர பிரசாரவேலை யையும் கவனித்துக் கொள்ள வேண்டும். இக் கமிட்டிக ளுக்கு போலீசுக்குரிய அதிகாரம் எதுவும் அளிக்கப்பட மாட்டாது. திறமை வாய்ந்த கலால் உத்தியோகஸ்தர் ஒரு வர் பூரா மதுவிலக்கு வேலையையும் மேற்பார்வையிட்டு வருவார். இவர் போலீஸ் டெபுடி சூப்பிரண்டுடன் கலந்து கொண்டு வேலை செய்வார். கலெக்டர், ஜில்லா மாஜிஸ் திரேட்டுகளின் உத்தரவுகளையும் நிறைவேற்றிவைப்பார். தற்போது சேலம் ஜில்லாவிலிருக்கும் கலால் இலாகா சிப்பந்திகள் அந்த ஜில்லாவினின்றும் மாற்றப்படுவர்.

சேலம் ஜில்லாவைச் சுற்றியுள்ள ஜில்லாக்களில் இருக்கும் கடைகளுக்கு புளித்த கள்ளு சப்ளை செய்வதற்

காக சேலம் ஜில்லாவிலுள்ள மரங்களுக்கு நம்பர்போடும் வழக்கம் கைவிடப்படும். பதனி (இனிப்பு) கள்ளு இறக்குவது அனுமதிக்கப்படும். புளித்த கள்ளு இறக்குவது தடுக்கப்படும்.

1—10—37-ந்தேதி முதல் சேலம் ஜில்லாவிலுள்ள பட்டைசாராயக் கடைகள் எல்லாம் மூடப்படும். சூரமங்கலம் வேர்ஹவுசும் சேலம் ஜில்லா சாராயக்கடைகளும் மூடப்படும். இவைபற்றிய எல்லா லைசென்ஸுகளும் ரத்து செய்யப்படும். கஞ்சா, அபினிக் கடைகளும் மூடப்படும். ஆனல் நீண்டகாலமாகக் குடித்து வருபவர்களுக்காக மாத்திரம் தாலூகா ஆபீசுகளில் கஞ்சாவும் அபினியும் இலாகா மூலமாக விற்கப்படும்.

வீடுகளில் புட்டிச் சாராயம் வைத்துக்கொள்ள பிரத்யேக அனுமதியைப் பெற வேண்டும். இதுவும் குறிப்பிட்ட தொகையினருக்கே கொடுக்கப்படும். அனுமதி 1-க்கு ரூ. 10 வீதம் தொகை வசூலிக்கப்படும். பிராந்தி, மருந்து பூர்வமான வொயின்கள் இவற்றை லைசென்ஸ் பெற்ற மருந்து வியாபாரிகள் விற்று வருவார்கள்.

மோட்டார் பஸ்ஸுகளில் சேலம் வழியாக ஒரு ஜில்லாவிலிருந்து இன்னொரு ஜில்லாவிற்கு மதுபான வகைகளைக் கொண்டு போவது தடுக்கப்படும். இதை அதிகாரிகள் பிரத்தியோகமாகக் கவனித்து வருவர். பஸ்ஸுக்காரர்கள் மீறி நடந்தால் லைசென்ஸுகள் ரத்தாகி விடும்.

*        *        *        *

## திருத்தியமைத்தலும் அப்பீலும்

சட்டப்பிரகாரமோ அல்லது அதன் விதிகளில் ஒன்றின் படியோ பிறப்பிக்கப்படும் உத்தரவுகளை ஆட்சே

பித்தும், திருத்தியமைக்கக் கோரியும் அப்பீல் செய்து கொள்ளுவது சம்பந்தமாக சர்க்கார் கீழ்க்கண்ட விதிகளை இயற்றியிருக்கிறார்கள் :—

(1) ஜில்லா கலெக்டருக்கு அப்பீல்—ரெவினியூ இலாகா அதிகாரிகளின் உத்தரவுகள் சம்பந்தப்பட்ட வரையில் ஜில்லா கலெக்டருக்கும், மற்ற இலாகா அதிகாரிகளின் உத்தரவுகள் சம்பந்தப்பட்ட வரையில் ஜில்லா கலெக்டருக்கும் அப்பீல் செய்து கொள்ளலாம்.

(2) ஜில்லா கலெக்டர் (கலெக்டர் காரியங்களைக் கவனிக்கும் அதிகாரியல்ல) நிறை வேற்றும் அசல் உத்தரவு அல்லது அப்பீல் செய்து கொண்டதன் பேரில் ஜில்லா கலெக்டர் நிறைவேற்றும் உத்தரவு சம்பந்தமான அப்பீல்கள் ரெவினியூ போர்டு (தனி ரெவினியூக்கு) அனுப்பப்பட வேண்டும்.

(3) அப்பீலாக இருந்தாலும் சரி வேறு ஏதாவதாக இருந்தாலும் சரி ரெவினியூ போர்டுகள் (தனி ரெவினியூ) நிறைவேற்றும் உத்தரவு சம்பந்தமான அப்பீல் மாகாண சர்க்காருக்கு அனுப்பப்பட வேண்டும்.

ஆனால் கமிஷனரின் தீர்ப்பே முடிவானது என்று பிரத்யேகமாகக் குறிப்பிடப் பட்டிருந்தாலல்லாது இரண்டாவது அப்பீலைக் கமிஷனர் பைசல் செய்து விட்டிருந்தால் மேற்கொண்டு அப்பீல் செய்து கொள்ள முடியாது.

(4) காலவரையறுப்பு--இச்சட்டத்தின் வேறு விதிப்படி பிரத்யோகமாக குறிப்பிடப் பட்டிருந்தாலல்லாது

(i) ஜில்லா கலெக்டருக்கு அப்பீல் செய்து கொள்ளுவதாயின் எந்த உத்தரவை ஆட்சேபித்து அப்பீல் செய்யப்படுகிறதோ அந்த அப்பீல் கிடைத்த தேதியிலிருந்து

ஒரு மாத காலத்திற்குள்ளாக அப்பீல் அனுப்பப்பட வேண்டும்.

(ii) ரெவினியூபோர்டுக்கோ (தனிரெவினியூ) அல்லது மாகாண சர்க்காருக்கோ அப்பீல் கொள்ளுவதாயின் எந்த உத்தரவை ஆட்சேபித்து அப்பீல் செய்யப்படுகிறதோ அந்த அப்பீல் கிடைத்த தேதியிலிருந்து இரண்டு மாத காலத்திற்குள்ளாக அப்பீல் அனுப்பப்பட வேண்டும்.

**விளக்கம்**—கால வரையறுப்பைக் கணக்கிடுகையில் அவசியமான தஸ்ஜாவேஜிகளின் நகல்களைப் பெறுவதற்குத் தேவையான கால அளவை நீக்கி விடலாம்.

(5) **திருத்தி யமைத்தல்**—இந்த விதிகள் பிரகாரம் எந்த அதிகாரிகளுக்கு அப்பெலேட் அதிகார மிருக்கிறதோ அவர்கள் அவசிய மேற்படுகையில் திருத்தியமைப்பது சம்பந்தமாக அவ்வதிகாரத்தை உபயோகிக்கலாம். * * * *

## புளித்த கள்ளில் போஷாக்குச் சத்து

1938-ம் வருஷம் மார்ச் மாதம் 25-ந் தேதியன்று சென்னை ராஜாங்க சபையில் ஒரு அங்கத்தினர் கேட்ட கேள்விக்கு பதிலளிக்கையில் சுகாதார மந்திரி கீழ்க்கண்டவாறு அறிவித்தார்:—

புளித்த கள்ளு என்பது ஒருவகை வொயின் ஆகும்; இலேசான பீரில் இருப்பதைவிட இதில் இரு பங்கு மதுசாரம் சேர்ந்திருக்கிறது. புளித்த கள்ளு வகைகள் பலவற்றில் அடங்கியுள்ள சராசரி ஸ்பிரிட்டின் அளவு பின்வருமாறு:

தென்னங்கள்ளு 14·3 சத விகிதம்; பனங்கள்ளு 9·2 சத விகிதம்; ஈச்சங்கள்ளு 8·6 சத விகிதம்; ஜவ்வரிசிக்கள்ளு 10·4 சத விகிதம்.

புளித்த கள்ளில் சிறிது புளித்த மாவின் நுரைச் சத்தும், சிறிது சர்க்கரையும் இருக்கிறது. மிதமாக உட்கொண்டால் புளித்த கள்ளு குடிகாரர்களின் தேகத்தை வெகுவாகப் பாதிக்காது: சர்க்கரையும் விட்டமின் சத்து மிருப்பதால் கள்ளில் சிறிது போஷாக்கு சத்து இருக்கிறது. ஆனால் இது சாராய சத்தினால் ஏற்படும் பிரதிகூலத்தில் அடிப்பட்டுப் போய்விடுகிறது. இந்த விட்டமின்களை (சத்துக்களை) வேறுவகைகளால் பெறலாம்.

பதனியில் சாராயச் சேர்க்கை எதுவுமில்லை. இதனால் தேகத்திற்கு எவ்வித கெடுதலும் உண்டாவதில்லை.

* * * *

## மது விலக்கின் பயன்

1938-ம் வருஷம் மார்ச் மாதம் 28-ந் தேதியன்று ஜனப்பிரதிநிதி சபையில் கீழ்க்கண்ட சர்க்கார் அறிக்கை எல்லா அங்கத்தினர்களுக்கும் வழங்கப்பட்டது.—

மது விலக்குச் சட்டத்தை நிறைவேற்றுவதற்கு முன்பு சேலம் ஜில்லாவில் ஏழு லட்சம் ஜனங்களுக்குமேல் குடிப்பழக்கத்தைக் கைக்கொண்டிருந்ததாக மதிப்பிடப் பட்டது. ஆகவே கள்ளத்தனமாகக் கள்ளு சாராயம் இறக்குதல். வடிகட்டுதல், வெளியிடங்களிலிருந்து தருவித்தல், விற்பனை செய்தல், மருந்து தினுசுகளைத் திருட்டுத்தனமாகக் கொண்டுவந்து விற்பனை செய்தல், இவற்றைத் தடுக்கச் சிப்பந்திகள் போதாதென்று உணரப் பட்டது. எனவே மதுவிலக்குச் சட்டத்தின் 36-வது பிரிவுப்படி இதர இலாகாக்களைச் சேர்ந்த உத்தியோகஸ்தர்கள், கிராமாதிகாரிகள், போர்டு பள்ளிக்கூட ஆசிரியர்கள் இவர்களது உதவியையும், சட்டத்தின் 26-வது பிரிவுப்படி ஜில்லா பூராவும் தாலுகா மது விலக்குக் கமிட்டி

களை அமைத்து உத்தியோகப் பற்றற்றவர்களின் துணையைப் பெறவும் முயற்சிக்கப்பட்டது. இவர்கள் தங்கள் வேலைகளைக் குறித்து கலெக்டருக்கு அவ்வப்பொழுது தகவல்கள் அறிவிக்க வேண்டுமென்றும், அபிவிருத்தி வேலைகளில் ஈடுபட்டிருக்கும் பிரசாரத்தை நடத்தி போலீசாருக்கு விஷயங்களை அறிவிக்க வேண்டுமென்றும் உத்தர விடப்பட்டிருக்கிறது. இவர்களது மேற்பார்வையின் கீழ் உத்தியோகப்பற்றற்ற கிராமக் கமிட்டிகளும் அமைக்கப்பட்டுள்ளன. தாலுகா மதுவிலக்குக் கமிட்டி அங்கத்தினர்களும் சுற்றுப் பிரயாணம் செய்யும் போலீசாரும், இதர அதிகாரிகளும் இந்தக் கமிட்டிகளுக்கு விஜயம் செய்து, வேண்டிய உத்தரவுகளை விடுக்கின்றனர். பொதுவாக நிலைமை திருப்திகரமானதாகவே இருக்கிறது. முன்பு குடித்துக் கொண்டிருந்தவர்களில் 100-க்கு 90 பேர்கள் வீதம் இப்பொழுது குடியை விட்டு விட்டனர் என்று தகவல் சேகரிக்கப்பட்டிருக்கிறது.

குற்றங்கள் குறைந்திருப்பதும் கீழ்க்கண்ட புள்ளி விவரத்திலிருந்து தெரிய வரும் :—

| | 1936ஹு கடைசி 3 மாதத்தில் | 1937ஹு கடைசி 3 மாதத்தில் |
|---|---|---|
| கொலை | 24 | 15 |
| பகல் கொள்ளையும் களவும் | 6 | 2 |
| நகரில் கன்னக் களவுகள் | 13 | 10 |
| கிராமத்தில் ,, | 79 | 52 |
| திருட்டுகள் | 82 | 73 |
| கால்நடைத் திருட்டுகள் | 63 | 55 |
| காயமிழைத்த குற்றங்கள் | 64 | 33 |

கள்ளத்தனமாகக் கள்ளு, சாராயம் இறக்கப்படு வதைத் தடுக்கக் கீழ்க்கண்ட பல முன்னெச்சரிக்கை முறைகள் கையாளப்பட்டன:—

(1) மதுவிலக்குச் சிப்பந்திகள், சாதாரண போலீஸ் சிப்பந்திகள் இவர்கள் அடிக்கடி தோப்புகளைச் சுற்றி வருதல்.

(2) பிரத்யேகமாக உத்தர விடப் பட்டிருக்கும் கிராமாதிகாரிகளின் மேற்பார்வை.

(3) எங்கெங்கு கள்ளத்தனமாகக் கள்ளு, சாராயம் இறக்கப்படுமோ அங்கெல்லாம் விசேஷ கவனம் செலுத் தும்படி தாலுகா மது விலக்குக் கமிட்டி அங்கத்தினர் களுக்கு உத்தரவு.

(4) தங்கள் பிராந்தியங்களிலுள்ள தோப்புகளைக் கவனமாகக் காவல் புரியும்படி கிராமக் கமிட்டி அங்கத்தி னர்களுக்கு உத்தரவு.

சட்டத்தின் பிரகாரம் தங்களுக்குள்ள பூரா பொறுப்புகளையும் மரச் சொந்தக்காரர்கள் உணர்ந்திருக் கின்றார்.

இந்த முன்னெச்சரிக்கைகள் பொதுவாக நல்ல பல னளித்திருக்கின்றன.

சட்டம் அமுலுக்கு வருவதற்கு முன்பு திருட்டுத் தயாரிப்பு ஜில்லாவில் வெகு சகஜமாக விருந்தது. இது அதிகமாக வியாபித்திருந்த இடங்களைப் பற்றிய தகவல் கலால் இலாகாவிலிருந்து பெறப்பட்டது.

காட்டுப் பிராந்தியங்களிலுள்ள காட்டு இலாகா அதி காரிகளின் உதவியைப் பெற்றுப் போலீசார் தகுந்த வகையில் கவனம் செலுத்தி வருகின்றனர். சாராயம் சொற்ப அளவிற்குத்தான் இப்பொழுது திருட்டுத்தன

மாக தயாரிக்கப்படுகிறது. ஜில்லாவிற்குள் சாராய விற்பனை மிகவும் அரிதாக விருக்கிறது.

சுகாதார இலாகா சிப்பந்திகள், கூட்டுறவு ஊழியர்கள், கற்றுப் பிரயாணம் செய்யும் சர்க்கார் உத்தியோகஸ்தர்கள், தாலுகா கிராம மது விலக்குக் கமிட்டிகள் இவை குடியொழிப்புப் பிரசாரத்தை நடத்தி வருகின்றன. குடித்தீமையைப் பற்றிப் பாட்டுகள் கட்டப்பட்டு இவை சில கிராமங்களில் பாடப்பட்டு வருகின்றன. இதைத் தவிர இந்தியக் காப்பி பிரசாரக்கமிட்டியாரும், தேயிலைப் பிரசாரக் கமிட்டியாரும் தங்கள் பிரசார மோட்டார் வான்களை அனுப்பினர்; இவை ஜில்லா முழுதும் சுற்றி வந்தன. மது விலக்குக்கு ஆதரவாகக் காங்கிரஸ் பொதுக் கூட்டங்கள் பல நடந்திருக்கின்றன.

நேரடியான பிரசாரம் நீங்கலாக குடிப்பழக்கத்திற்கு ஆளானவர்களுக்கு மாலை நேரங்களில் உல்லாச மூட்டுவதற்காகப் பல தமாஷாக்கள் ஏற்பாடு செய்யப்பட்டிருக்கின்றன. பஜனை கோஷ்டிகள், நாடகங்கள், புத்தக சாலைகள், கிராமபோன்கள் முதலியவை இவற்றில் சிலவாகும்.

வேலையை யிழந்துள்ள கள்ளிறக்குபவர்களின் நிலைமை எதிர்பார்த்தபடியே திருப்திகரமாக விருக்கிறது. இவர்களில் பலர் விவசாயத் தொழிலில் ஈடுபட்டனர். பிறகு அந்த வேலை முடிந்ததும் இவர்களில் அநேகர் பதனியை இறக்கும் வேலையில் ஈடுபட்டார்கள். இந்த மாதிரி 100-க்கு 75 பேர்கள்வீதம் பல வேலைகளில் தொத்திக் கொண்டிருக்கிறார்கள். பாக்கியுள்ள 25 சதவிகிதத்தினரில் சிலர் ஜில்லாவை விட்டு வெளிச் சென்றுவிட்டனர். இன்னும் சிலருக்கு நிலமிருக்கிறது; வேறு சிலர் கூலி வேலையில் ஈடுபட்டிருக்கிறார்கள்; ஏனையோர்கள் தென்னை—ஓலை,

மட்டை, தேங்காய் எடுக்கும் வேலையை மேற் கொண் டிருக்கின்றனர். தென்னஞ் சாற்றிலிருந்து வெல்லம் தயாரிப்பதைப் பற்றி கைத்தொழில் இலாகா நடத்திய பரீட்சார்த்தங்கள் வெற்றி பெற்றிருக்கின்றன. இப் பொழுது சர்க்கரை தயாரிப்பது பற்றிப் பரீட்சை செய்யப்பட்டு வருகிறது. பனை வெல்லத்தின் ரகத்தை அபிவிருத்தி செய்யவும் முயற்சி செய்யப்படுகிறது. வெல் லம் தயாரிப்பதற்காக கூட்டுறவு சொஸைடிகள் சில ஏற்கனவே ஸ்தாபிக்கப்பட்டிருக்கின்றன; இன்னும் பல ஏற்பட்டு வருகின்றன.

கள்ளிறக்குபவர்கள் குடியேறுவதற்காக நிலங்கள் ஒதுக்கி வைக்கப்படுகின்றன. இவர்களில் சிலர் மலேயா முதலிய நாடுகளுக்குச் செல்லுமாறு தூண்டப்படுகின் றனர். இது வரையில் சுமார் 40 பேர்கள்தான் இந்த அழைப்பிற்கு இணங்கியிருக்கின்றனர்.

கண்டு பிடிக்கப்பட்ட, தண்டனை விதிக்கப்பட்ட, தள்ளப்பட்டு விட்ட வழக்குகளின் விவரம் பின் வரு மாறு:—

| | மொத்தம் |
|---|---|
| கண்டுபிடிக்கப்பட்டவை | 215 |
| தண்டிக்கப்பட்டவை | 201 |
| தள்ளப்பட்டவை | 2 |

தண்டனை விதிக்கும் கோர்ட்டுகள் மூலம் வசூலான அபராதத் தொகையின் மொத்தம் 1704 ரூபாய்.

---

The Liberty Press, G.T., Madras

